# தமிழ் வளர்த்த தைரியநாதர்

என்னும்

# வீ ர மா மு னி வ ர்




ஆசிரியர் :

வித்துவான் ஈ. பண்டாரம் நம்பியார்

ஜெயகுமாரி ஸ்டோர்ஸ்

கோர்ட் ரோடு

நாகர் கோவில்

[விலை ரூ. 2-50

## புதிய பதிப்பின் முகவுரை

தமிழ் வளர்த்த அயல் நாட்டினருள் தலைமைப் பேறு பெற்றவர் **தைரியநாதர்.** அவர் வாழ்வின் தூய் மையையும் தொண்டின் மேன்மையையும் எல்லாருமறிய எடுத்துரைக்க வேண்டும் என்னும் ஆர்வத்தாலேயே இந்நூலை யான் எழுதலுற்றேன். இந்நூல் பொதுவாகத் தமிழர் அனைவர்க்கும், சிறப்பாகத் தமிழ் மாணவர்க்கும் வழி காட்டியாய் நின்று, அவர்தம் வாழ்க்கையை வளம் பெறச் செய்யும் என்று நம்புகிறேன்.

இந்நூல் அச்சேறும் பொழுது ஒப்பு நோக்கி இன்றி யமையாத திருத்தங்களைச் செய்து உதவிய உயர் திருவாளர் **மகாவித்துவான், செந்தமிழ்க் களஞ்சியம், மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை** அவர்கட்கு என் உள்ளம் நிறைந்த நன்றி உரியதாகுக !

நாகர் கோவில்,
*1—2—'68*

**ஈ. பண்டாரம் நம்பியார்**




# பொருளடக்கம்

சென்னைக் கடற்கரையிற் காட்சியளிக்கும்
தமிழ் வளர்த்த 'தைரியநாதர்' என்னும்
வீரமாமுனிவர்




# 1. துறவும் துணிவும்

**தோற்றுவாய் :**

தமிழ் அன்னை ஈன்ற தவப்புதல்வர்கள் என்றுமுள தென்றமிழைப் போற்றி வளர்த்தார்கள் எனின், அதில் வியப்பில்லை. ஆனால், தமிழே வழங்காத அயல் நாட்டினர், தம் தாய் நாடு துறந்து, தமிழ் நாடு வந்து, செந்தமிழ் மொழியை ஆர்வத்தோடு பயின்று, அம் மொழியை ஆதரித்து வளர்த்தார்கள் எனின், அது வியப்பிற்குரியதன்றோ? இம்முறையில் தமிழ் வளர்த்த அயல் நாட்டினருள் தமிழ்ப்புலமையில் வீறு கொண்டு விளங்கிய இத்தாலி நாட்டு வித்தகரான **தைரியநாதர்** என்னும் பெயர் புனைந்த **பெஸ்கி அடிகளார்** தலை சிறந்தவராவார். அவர் தமிழரோடு தமிழராய் வாழ்ந்து, தமிழை வளர்த்தார் ; செந்தமிழ் நலங்கனிந்த சீரிய காவியம் செய்து சிறப்புற்றார் ; உரை நடைக்கு உயிரூட்டி வாழ்வளித்தார்; இலக்கணப் பனுவல்களை இயற்றி ஏற்றம் பெற்றார் ; அகராதிகளை அமைத்து ஆக்கம் விளைத்தார்; பிரபந்தங்கள் பாடிப் பீடளித்தார் ; செந்தமிழ் மொழியின் சிறப்பை மேனாட்டினர்க்கு உணர்த்தி உயர்வளித்தார். இவ்வாறு தமிழைக் கண்

ணும் கருத்துமாய்க் கருதி, **தமிழ் வளர்த்த தைரியநாதரது** வாழ்க்கை வரலாறு கவிஞர்களுக்கு ஒரு காவியமாகும்; அறிஞர்களுக்கு ஓர் அறிவு நூலாகும்; அனைவர்க்கும் வழி காட்டியாகும்; தமிழ் மாணவர்கள் மறவாது போற்றற்குரியது மட்டுமன்றி, பின் பற்றற்குரியது மாகுமன்றோ?

**இத்தாலி நாடு:**

ஐரோப்பாக் கண்டத்தில் பழமையும் பெருமையும் பெற்று விளங்குவது இத்தாலி நாடு. அந்நாடு, 'ஈரறமும் முச்சீரும் சுகமோர் ஏழும் நிமிர் இத்தாலிய நாடு' என்றும், 'அவனியெலாம் ஆளும் இத்தாலிய நாடு' என்றும் பாராட்டும் பெருமைக்கு உரியது; இயற்கையின் எழிலெல்லாம் ஒருங்கே கொண்டது. அந் நாட்டு மலைகளின் அமைப்பும், அவற்றில் துள்ளி விழும் வெள்ளருவிகளின் தோற்றமும், காடுகளின் செறிவும், பொழில்களின் பொலிவும், பசுஞ்செடிகளின் ஈட்டமும், பாட்டெனப் பரந்து செல்லும் ஆறுகளின் காட்சியும் கண்ணையும் கருத்தையும் ஒருங்கே கவர்வனவாம். அந் நாடு நேப்பிள்ஸ், வெனிஸ், ஜினேவா, பிளாரென்ஸ் என்னும் புகழ் மிக்க பெருநகரங்களைத் தன்னகத்தே கொண்டுள்ளது. உலகப்புகழ் பெற்ற மாஜினி, கரிபால்டி என்னும் சுதந்தரச் சிற்பியர் அந்நாட்டில் தோன்றியவரே. அந்நாடு சட்டத்தின் பிறப்பிடம்; கலைகளின் உறைவிடம்; தமிழ் வளர்த்த தைரியநாதரைத் தமிழகத்திற்குத் தந்து தனிப்புகழ் பெற்ற பெருநிலம்.

**பிறப்பு:**

இத்தகைய இணையற்ற புகழுடைய இத்தாலி நாட்டில், அகிலம் போற்றும் பெரும்புலவர் **வர்ஜில்** என்பாருக்கு வாழ்வளித்த **மாந்துவா** வட்டத்தில்,

**காஸ்திக்கிளியோனே** என்னும் கவின் மிக்க சிற்றூர் ஒன்றுள்ளது. அவ்வூரில் வழிவழி வாழ்ந்து புகழ்பெற்ற ஒரு பழங்குடியில், **கொண்டால்போ பெஸ்கி** (Gondolfo Beschi) என்னும் பண்புள்ளம் படைத்த பெரியார் ஒருவர் இருந்தார். அவர் 'பிரபு' என்னும் பட்டம் பெற்ற பெருநிதிக் கிழவர். அவர் அறிவும் திருவும் பொருந்திய எலிசபெத்து என்னும் மங்கை நல்லாரை மணந்து, இல்லறம் என்னும் நல்லறத்தை நடத்தி வந்தார். எலிசபெத்து அம்மையார் இல்லறத்திற்குரிய நல்லொழுக்கங்கள் மிக்கவர்; இறை பணியில் ஈடுபாடு உடையவர். அவர் கணவர் கருத்தறிந்து சுற்றம் போற்றிச் சூழ்விருந்தோம்பி, நாட்டவர் புகழக் குடும்பத்தை நடத்தி வந்தார்.

> **"காத லிருவர் கருத்தொருமித்து, ஆதரவு**
> **பட்டதே இன்பம்."**

என்னும் பொன் மொழிக்கு ஏற்ப, அன்பொத்த அவர்கள் வாழ்க்கை, இன்ப வாழ்க்கையாய் நடந்து வந்தது.

> **"மங்கலம் என்ப மனைமாட்சி ; மற்றதன்**
> **நன்கலம் நன்மக்கட் பேறு."**

என்ற வள்ளுவர் வாய்மொழிக்கு ஏற்ப, அவ்வினியவர்க்குத் தமிழ் நாடு செய்த தவப் பயனால், 1680ஆம் ஆண்டு, நவம்பர்த் திங்கள், 8ஆம் நாள் நன்மைந்தர் ஒருவர் பிறந்தார். பெற்றோர் தம் அருமைத் திருப் புதல்வருக்குக் **காான்ஸ்டன்டைன் ஜோசப்பு பெஸ்கி**[1] என்னும் பெயர் சூட்டிச் சீருடன் வளர்த்து வந்தனர். அம்மைந்தரும் 'மகன் அறிவு தந்தை அறிவு,' என்றவாறு தந்தையார்க்கு ஏற்ற மைந்தராய் வளர்ந்து வந்தார்.

---

1. Constantine Joseph Beschi

## துறவு :

பெஸ்கியாரின் இளமை வாழ்க்கையை முற்றிலும் அறிந்துகொள்வதற்கான சான்றுகள் கிடைத்தில. ஆயினும், 'விளையும் பயிர் முளையிலே தெரியும்,' என்றபடி, பண்பட்ட பெருங்குடியிற்பிறந்த அவர், இளமையிலேயே கள்ளமற்ற உள்ளமும், இயேசு பெருமானிடம் இணையற்ற அன்பும், நுண்ணறிவும், செயல் திறனும் உடையவராய்ச் சிறந்து விளங்கினர் என்பது தெரிகிறது. அவரது முகப்பொலிவையும், கூர்த்த மதியையும், தூய உள்ளத்தையும் கண்ட பெரியார்கள், "இச்சிறுவன் விரைவில் உலகம் புகழும் விழுப்புகழ் பெறுவான்," என்று வாழ்த்தினர்கள்.

பெஸ்கியார் முதலில் தம்மூரில் உள்ள பள்ளியிற் கல்வி பயின்று வந்தார்; பின்னர், உரோமை நகர் சென்று அங்குக் கல்வி கற்றூர். அவர் தம் தாய் மொழியாகிய இத்தாலிய மொழியில் ஓரளவு புலமை பெற்றபின், ஓராண்டு உள நூல்களையும் சமய நூல்களையும் பயின்ருர். இயேசு நாதரின் சீரிய கொள்கைகளும் பற்றற்ற வாழ்வும் அவர் உள்ளத்தை உருக்கின. அவர் கிறித்துப் பெருமான்மீது பேரன்புகொண்டு, அவருக்குத் தொண்டு செய்வதே தம் வாழ்க்கையின் பயனெனக் கருதினர். ஆகையால், அவர் இயேசு சமயத் தொண்டராதல் வேண்டும் என்னும் எண்ணத்தால் உந்தப்பட்டார். அக்காலத்தில் அவர் அரசியல் அலுவல் ஒன்றை நாடியிருப்பின், உயர்பதவியில் அமர்ந்திருக்கலாம். ஆனல், அருள் துறையை நாடிய அவர் உள்ளம், அதற்கு இசையுமா? அவர் தம் எண்ணத்தை இருமுதுகுரவர்க்குத் தெரிவித்தார். பண்பட்ட பெருங்குடியில் வந்த பெற்ருேர், தம் புதல்வரின் உயர்ந்த நோக்கத்தை உவந்தேற்று, ஆதரவளித்து வாழ்த்தினர். இருமுதுகுரவரின் இசைவைப் பெற்ற பெஸ்கியார், 1698ஆம் ஆண்டு, தமது பதினெட்

டாம் அகவையில், துறவு பூண்டு, இயேசு சபையில் அடியவராய்ச் சேர்ந்து, தம் வாழ்க்கையை இறைவர் திருப்பணிக்கு உரிமையாக்கினுர்.

## குருப்பட்டம் :

இறைவர் பணிக்குத் தம்மை உரிமையாக்கிய தைரியநாதர், உரோமை நகரிலிருந்த கத்தோலிக்கப் பாதிரிமார் கழகத்தில் சேர்ந்து, சமயம் பரப்புநர்க்குரிய பயிற்சி பெறலானுர்;அப்பயிற்சியில் அவர் பன்னீராண்டு வரை ஈடுபட்டிருந்தார். அப்போது, இடையிடையே அவருக்கு இயேசு சமயக் கல்லூரிகளில் கற்பிக்கும் வாய்ப்பும் கிட்டியது. 1700ஆம் ஆண்டு, அவர் ரவீனு நகர்க் கல்லூரியில் இலக்கண ஆசிரியராய்ப் பணியாற்றினுர்; 1071ஆம் ஆண்டு, **பொலோனு** நகரில் தர்க்கம், தத்துவம் ஆகிய கலைகளைக் கற்றதோடு, இலக்கணம் வரலாறு ஆகிய பாடங்களைக் கற்பித்தும் வந்தார்; இதற்கிடையே வாய்ப்பு நேரும் போதெல்லாம் பிரெஞ்சு, கிரேக்கம், எபிரேயம், போர்த்துகீசியம் ஆகிய மொழிகளையும் கற்று வந்தமையால்,அம்மொழிகளிலும் புலமை பெற்ருர். இறுதி நான்கு ஆண்டுகளில் பெஸ்கியார் இயேசு சமயப் பெருநூல்களை ஆர்வத்தோடு கற்றுத் தெளிந்து, 1709ஆம் ஆண்டு, செப்டெம்பர்த் திங்கள், **குருப்பட்டம்** பெற்ருர். அப்போது அவர் சமயத் துறையிலும் தத்துவத் துறையிலும் பெற்றிருந்த அறிவையும் தெளிவையும் அனைவரும் வியந்து போற்றினர்.

## துணிவு :

இருமையும் தரும் பெருமானுகிய இயேசுநாதரிடம் பயன் கருதாப் பத்தி பூண்டிருந்த பெஸ்கி அடிகளார், அப்பெருமானின் இணையற்ற புகழைப் பாரத நாட்டின்

தென்பாலுள்ள தமிழகத்தில் பரப்பத் துணிந்தார். தாம் ஏற்கப்போகும் அறத்தொண்டைச் சிறக்க ஆற்று வதற்குத் தக்க இடம் தமிழகமே என்பது அவருக்கு முன்னரே தெரிந்திருத்தல் வேண்டும். மேலும், தமிழ் அன்னை தன்னை நாடி வந்தவரை எல்லாம் ஆர்வத்தோடு அரவணைத்து வாழவைக்கும் பண்பினள் என்பதையும் அவர் அறிந்திருத்தல் கூடும். ஆயினும், அவர் தம் பெற்றோரையும் உற்றோரையும் பிரிந்து, பல்லாயிரம் கிலோ மீட்டர்த் தொலைவிலுள்ள பேசும் மொழி அறியாத தமிழ் நாட்டுச் செலவை மேற்கொள்ளத் துணிந்தது வியப்பிற் குரியதன்றோ ! போர்த்துகீசியரான **புனித சவேரியார்,**[1] கி. பி. 1542ஆம் ஆண்டு, தமிழகம் வந்து கடற்கரை மக்களுக்கு ஞான ஒளி ஊட்டி அவர்கள் வாழ்வில் புதுமலர்ச்சியைத் தோற்றுவித்தார். அவருக்குப் பின், கி. பி. 1606ஆம் ஆண்டில் தமிழகம் வந்த இத்தாலிய ரான **தத்துவபோதகர்,**[2] மதுரை மாவட்டத்தில் திருமறைத் தொண்டாற்றி மாண்புற்றோர். அவர்கள் ஏற்றி வைத்த சமய விளக்கு அணைந்துவிடாதபடி அதைத் தூண்டித் துலங்கச் செய்யவேண்டும் என்னும் விருப்பத்தால் அருண்மிகு பெஸ்கி அடிகளார் இவ்வாறு துணிந்தார் போலும்! அவர், தாம் கொண்ட துணிவை இயேசு சபைத் தலைவர்களுக்கு அறிவித்தார். கிறித்துநாதரின் திருப்பெயரை உலகெங்கும் பரப்புவதையே தம் சீரிய பணியெனக் கொண்டு உழைத்து வரும் அச்சபை யினர், மிக மகிழ்ந்து அவரைத் தமிழ் வழங்கும் மதுரைக்கு அனுப்ப இசைந்தனர். அறிவில் செறிவும், அன்பில் ஆழமும், அருளில் பெருக்கமும், துறவில் தூய்மையும் மிக்க பெஸ்கி அடிகளார் தமிழ் நாட்டில் கிறித்தவத்தைக் கால் கொள்ளச் செய்வார் என்பது

1. St. Francis Xavier (1506-1552)
2. Robert de Nobili

அவர்கள் நம்பிக்கை. அந்நம்பிக்கையால், இயேசு **சபையினர்**, பெஸ்கி அடிகளாரைத் தமிழகம் அனுப்பு வதற்கான ஏற்பாடுகளைச் செய்ய முற்பட்டனர். அதை அறிந்த பெஸ்கி அடிகளார் உவகையால் உள்ளம் பூரித்துத் தமிழகத்திற்குப் புறப்படுவதற்குரிய நன்னுளை ஆவலோடு எதிர் நோக்கியிருந்தார். குறித்த அந்நாள் வந்ததும் பெஸ்கி அடிகளார் மிக மகிழ்ந்தவராய், உற்ருர் உறவினரிடம் பிரியா விடை பெற்றுப் போர்த்துகீசு நாட்டு '**லிஸ்பன்**' துறைமுகத்திற்கப்பலேறினர். பெற் ருேரும் மற்ருேரும் கலங்கிய கண்களுடன் அவரை வாழ்த்தி வழியனுப்பி வைத்தனர். அவர் பல மாதங்கள் பயணம் செய்து, நீலநெடுங்கடலைக் கடந்து, 1711ஆம் ஆண்டு பாரதத்தின் மேற்குக்கடற்கரையிலுள்ள கோ வாத் துறைமுகத்தில் வந்து இறங்கினர். அக்காலத்தில் அந்நகர் இந்தியக் கத்தோலிக்கர்களுக்குத் தலைநகராய்த் திகழ்ந்தது. அங்குக் கிறித்தவத் தொண்டர்களுக்குப் பயிற்சி அளிக்கும் வேதசாத்திரக் கல்லூரி ஒன்று நிறு வப்பட்டிருந்தது. தைரியநாதர் அக்கல்லூரியில் ஒரு திங்கள் தங்கியிருந்து, தாம் மேற்கொள்ளப் போகும் புதிய பணிக்குத் தக்கவாறு பயிற்சிபெற்ருர்; சிறிதளவு தமிழும் பயின்ருர்; பின்பு கொச்சித் துறைமுகம் வழி யாக அம்பலக்காட்டை அடைந்தார்; அங்குள்ள குரு மடத்தில் ஒரு திங்கள் இடையருச் சிந்தனையில் அமர்ந் தார். பின்னர், அவர் கடற்கரையோரம் நடந்து முத்தமிழ் முழங்கிய மதுரை மாவட்டத்தைச் சேர்ந்தார். இவ்வாறு பெற்ருரையும் உற்ருரையும் பிரிந்து, செல்வத்தையும் சீரையும் மறந்து, தாய் நாட்டையும் துறந்து தமிழ் வள நாடு வந்தடைந்த தைரியநாதரது துணிவை என் னென்றுரைப்பது!

**மதுரை மாவட்டம் :**

> "தமிழ்நிலை பெற்ற தாங்கரு மரபின்
> மகிழ்நனை மறுகின் மதுரை"

என்று புலவர் பெருமக்களால் பாராட்டப்பட்ட பெருமை மிக்கது மதுரை மூதூர். அயல் நாட்டுப் புலவர்களும் தமிழாராய்ச்சியில் ஆர்வங்கொண்டு அந்நகரில் வந்து கூடினமையால், மதுரை நகர், '**கூடல்**' என்னும் பெயர் பெற்றது என்பர். போப்பு ஆண்டவர், அக் கூடல் மாநகரை நடுவாகக் கொண்டு, மதுரை மாவட்டம் என்னும் ஒரு பகுதியை வகுத்து அங்குப் பல திருச்சபைகளை நிறுவியிருந்தார். கிறித்தவக் குருமார் பலர் அங்குச் சமயத்தொண்டாற்றி வந்தனர். மதுரை மாவட்டம் பாண்டி நாட்டுக் **காமநாயக்கன்பட்டி**யைத் தென்னெல்லையாகவும், தொண்டை நாட்டுக் **கோனூர் குப்பத்தை** வட வெல்லையாகவும் கொண்டு விளங்கியது. அம்மாவட்டத்தில் நிறுவப்பட்டிருந்த '**மதுரை மிஷன்**' என்னும் தலைமை நிலையம் கத்தோலிக்க சமயத்தைப் பரப்புவதில் கருத்தூன்றி உழைத்து வந்தது. அருண்மிகு பெஸ்கி அடிகளார் 1711ஆம் ஆண்டு, மேத்திங்கள், 8ஆம் நாள், அத்தலைமை நிலையத்தில் பொறுப்பேற்றூர்; மதுரை மாவட்டத்திலுள்ள காமநாயக்கன் பட்டியைத் தம் நிலைக்களமாகக் கொண்டு பணியாற்றத் தொடங்கினூர். அக்கால அரசியல் நிலையாலும், நாட்டின் தட்ப வெப்ப நிலையாலும் அவருக்கு நேர்ந்த அல்லல்களுக்கு அளவில்லை. அவர் பலவாறு துன்புற்ற போதிலும், உடல் நலிவுற்றூரேயன்றி, உள்ளம் தளர்வுற்றிலர். 'சுடச்சுடரும் பொன்போல' அவர் அறிவு ஒளிவிட்டது; அனுபவம் மிகுந்தது; பணி சிறந்தது.

**தத்துவ போதகர் :**

அயல் நாட்டினர் நம் நாட்டில் குடியேறிய பின்னரும், நம் நாட்டுப் பழக்க வழக்கங்களை மேற்கொள்ளாது நம்மிடையே வாழ்வாரானால், நாம் அவரோடு கலந்து பழகாமல் வேறுபட்டு நிற்போம்; நம் நாட்டு உடையணிந்து, நம் பழக்க வழக்கங்களை மேற்கொண்டு நடப்பாரானால், நாமும் அவர்களோடு கலந்து உறவாடி மகிழ்வோம். அப்போது நாம் வேறு அவர்கள் வேறு என்னும் வேற்றுமை உணர்ச்சி அகன்றுவிடும்; அயல் நாட்டினர் என்று வெறுத்தொதுக்கும் மனப்பான்மையும் மாறிவிடும். மேலை நாட்டிலிருந்து நம் நாட்டிற்கு வந்த மத போதகர் பலர், இவ்வுண்மையை உணராது, ஐரோப்பிய உடை அணிந்து, அந்நாட்டுப் பழக்க வழக்கங்களைக் கைவிடாது நடந்துவந்தமையால், சமயப் பணியிலும் வெற்றி காண இயலாது பல வகை அல்லல் களுக்கும் உட்பட்டனர். தமிழ் மக்கள் அவர்கள் நடையுடை பாவனைகளில் வெறுப்புடையவர்களாய், அவர்களைப் **'பறங்கிகள்'**[1] என்று வெறுத்தொதுக்கினார்கள்; அவர்கள் மதத்தைப் **'பறங்கிகள் மதம்'** என்று இகழ்ந்துரைத்தார்கள். இந்த இழிநிலையை உணர்ந்த அயல் நாட்டு மத போதகர் பலர், தாம் பணி புரியும் நாட்டிற்கு ஏற்றவாறு தம் நடையுடை பாவனைகளை மாற்றியமைத்து, அங்குள்ள மக்களோடு நெருங்கிப் பழகி, அவர்கள் ஆதரவைப் பெற்றனர். அவர்களுள் இத்தாலி நாட்டிலிருந்து தமிழகம் வந்த **இராபர்ட்டு தெ நொபிலி** என்பவர் முதன்மையானவர். அவர் 1611ஆம் ஆண்டு மதுரை மாவட்டத்தில் சமயப்பணி ஆற்ற வந்து சேர்ந்தார். அவர் பரந்த நோக்கமும் மேன்மைப் பண்பும் உடையவராதலின், தமிழகத்திற்கு ஏற்றவாறு தம்

1. Farangis

வாழ்க்கையை மாற்றிக்கொண்டார். முதலில் அவர் தம் இயற்பெயரை மாற்றித் **'தத்துவ போதகர்'** என்னும் பெயர் புனைந்தார். அங்கு மக்கள் பேசும் மொழியாய்—அவர்கள் அன்றாட வாழ்வில் உணர்வூட்டும் மொழியாய்—இருந்த அருந்தமிழ் மொழியைக் கற்றுத் தேர்ந்தார்; ஆரிய மொழியையும் ஆர்வத்தோடு பயின்றார்; தம் நாட்டுப் பழக்க வழக்கங்களை விடுத்து, ஊனுணவு துறந்து, காவி ஆடை அணிந்து, தமிழ்த்துறவியைப்போலத் தூய வாழ்வு நடத்தினர். அவரது தூய்மையைக் கண்ட அந்தணரும் அவர் நெறியைத் தழுவினர்; ஏழை எளியவர் பலர் குடும்பம் குடும்பமாய்க் கிறித்தவ நெறியிற் சேர்ந்தனர். அவர் காலத்தில் ஆயிரக் கணக்கானவர் அவர் நெறியைத் தழுவினர் என்று கூறப்படுகிறது. இதனால், தமிழகத்தில் கிறித்தவ நெறி விளக்கை ஏற்றி வைத்தவர் என்னும் பெருமை அவருக்கு உரியதாயிற்று.

**வெற்றிக்கு வழி :**

தத்துவ போதகருக்கு ஒரு நூற்றாண்டுக்குப் பின்னர்த் தமிழகம் வந்த பெஸ்கி அடிகளார், தாம் தொடங்க இருக்கும் திருமறைத் தொண்டு வெற்றி பெறுவதற்கான வழிகளை ஆராயலானார். அவர் முதலில் தமக்கு முன்னர்த் தமிழகத்தில் பணி புரிந்த போதகர் பலரது வழிமுறைகளைத் துருவி ஆராய்ந்தார்; அவருட் சிலர் மக்களின் ஆதரவைப் பெற இயலாது அல்லலுற்றதை அறிந்து துன்புற்றார்; அவர்கள் அல்லலுற்றமைக்குரிய காரணங்களையும் கண்டு தெளிந்தார். ஆனால், அவர்களுக்கிடையே தத்துவ போதகர் என்பவர் சமயத் தொண்டில் வெற்றி கண்டதை அறிந்து, அதன் காரணத்தைத் தெளிவாக உணர்ந்தார். தத்துவ போதகர் தமிழ் மக்களோடு ஒன்றி வாழ்ந்தமையாலேதான் சமயத்

தொண்டில் வெற்றிகண்டார் என்பதை அறிந்த பெஸ்கி அடிகளார், அவர் பின் பற்றிய வழியே தம் வெற்றிக்கும் வழிகாட்டும் என்று முடிவு செய்தார். ஆயினும், தத்துவபோதகர் வடமொழிக்கு முதன்மையளித்து மணிப்பிரவாள நடையில் பேசியும் எழுதியும் வந்தது பெஸ்கி அடிகளாருக்கு வெறுப்பை அளித்தது. ஆகையால், அவர் தமிழுக்கு முதன்மை கொடுத்து, சமயமும் தமிழும் தழைக்கும் வகையில் தொண்டாற்ற உறுதி கொண்டார்.

## பெயர் மாற்றம் :

"புதியவனுக ஒரு நாட்டுக்குச் செல்லும்போது, அந்நாட்டு மக்களின் பழக்க வழக்கங்களைக் கேட்டுத் தெரிந்துகொள்," என்று ஆணையிட்டார் **கன்பியூசியஸ்**[1] என்னும் அறிஞர். அவரது ஆணையை பெஸ்கி அடிகளார் முன்பே அறிந்திருந்தார் போலும்! அவர் தமிழகம் வந்து சேருமுன்பே, தமிழ் மக்களைப் பற்றி ஓரளவு தெரிந்திருந்தார். 'தமிழர்கள் பரந்த உள்ளத்தோடு, அன்பு காட்டுவோர் அனைவரிடமும் கலந்து உறவாடும் பண்பட்ட பழைய நாகரிகம் உடையவர்கள்,' என்பதை பெஸ்கியார் அறிந்திருந்தார். தத்துவபோதகரது வாழ்க்கை நிகழ்ச்சியும் இதை அவருக்கு உணர்த்தியிருக்கலாம் அன்றோ? ஆகவே, பெஸ்கி அடிகளார் தமிழகம் வந்ததும் தமிழரோடு தமிழராய்க் கலந்து உறவாட எண்ணினர்; **'கான்ஸ்டன்டைன் ஜோசப்பு பெஸ்கி'** என்னும் தமது பெயர் அதற்குத் தடையாய் நின்றது. அப்பெயரைத் தமிழருட் பெரும்பாலார் உச்சரிப்பதற்கும் இயலாது இடருற்றனர். அதனையறிந்த பெஸ்கி அடிகளார், தமிழர் உச்சரிப்புக்கு ஏற்ற முறையில் தம்

1. Confucius (551-479 B. C.)

பெயரை மாற்றி அமைக்க முற்பட்டார். இத்தாலிய மொழிச் சொல்லான 'கான்ஸ்டன்டைன்' என்பதற்குத் 'தைரியம்' என்பது பொருள். எனவே, அவர் தம் பெயரைத் **'தைரியநாதர்'** என்று மாற்றி அமைத்தார். 'பெஸ்கி' என்னும் குடிப்பெயரையும் துறந்தார். பெஸ்கியார் புதுப்பெயர் புனைந்ததைக் கண்ட தமிழர்கள், அவரது அன்பின் பெருக்கை வியந்து அவரைத் **'தைரியநாதர்'** என்னும் பெயரால் வழங்கி மகிழ்ந்தார்கள். 'தைரியம்' என்பதில் உறுதியும், 'நாதர்' என்பதில் தலைமைப் பண்பும் அமைந்திருப்பது தமிழ் மக்களுக்கு மகிழ்ச்சி அளித்தது. அப்பெயரே பின்னாளில் **'வீரமாமுனிவர்'** என்னும் விழுமிய பெயராய் வழங்கலாயிற்று என்பர். இப்பெயர் அவருக்கு மதுரைத் தமிழ்ச் சங்கத்தாரால் வழங்கப் பட்டது என்றும் கூறுவர்.

**தமிழ்ப்பயிற்சி :**

தமிழகம் வந்த வீரமாமுனிவர், தமிழைக் கற்று அம்மொழியில் உரையாடுவதைப் போன்று மக்கள் உள்ளங்களை வெல்ல வல்லதொரு வழி வேறில்லை என்பதை உணர்ந்தார்; தாம் ஆற்றும் சமயத்தொண்டு வெற்றிபெறுவதற்கும் அஃது உறுதுணையாகுமன்றோ? தமிழரிடையே தமிழ் மொழியில் எடுத்துக் கூறும் உண்மைகளே, அவர்தம் உள்ளங்களில் பசுமரத்தாணி போலப் பதிந்து பயனளிக்கும். இவற்றை எல்லாம் எண்ணித் தெளிந்த வீரமாமுனிவர், தாம் ஆற்றும் சமயத் தொண்டின் ஒரு பகுதியாகக் கருதித் தமிழைக் கற்கத் தொடங்கினார். அக்காலத்தில் அயல் நாட்டினர் தமிழ் கற்பது அவ்வளவு எளிதன்று. அச்சிட்ட தமிழ் நூல்களே அந்நாளில் இல்லை. தமிழ் அறிஞர்களை நாடிச் சென்று கற்கவேண்டினால், ஊர்திகளோ வழி வசதியோ இல்லை. இவற்றை எல்லாம் அறிந்திருந்தும், வீரமாமுனி

வர் ஆர்வத்தோடு தமிழைக் கற்று வந்தார். அவரது பன்மொழிப்புலமை தமிழின் அமைப்பையும் சிறப்பையும் அறிந்துகொள்ள உதவியது. அவர் தமிழைப் பேசவும் எழுதவும் சிறிது கற்றதும் சொற்பொழிவாற்றத் தொடங்கினர்; ஞாயிற்றுக் கிழமை தோறும் கோவிலுக்குச் சென்று கடவுள் வழிபாடு நல்லொழுக்கம் என்பவை குறித்துச் சொற்பொழிவாற்றி வந்தார். ஒரு நாள் அவர் கோவிலில் உரையாற்றிக் கொண்டிருக்கும் போது, 'கோழி தன் **குட்டிகளைக்** காப்பதுபோன்று' என்று ஓர் உவமையை எடுத்தாண்டார். அன்று அவர் பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்த மக்கள் வாய் விட்டுச் சிரித்தார்கள். சிரிப்பின் காரணத்தை அறிய இயலாது வீரமாமுனிவர் திகைத்தார்; பின்பு அன்பர் ஒருவரிடம் தனியே வினவிச் சிரிப்பின் காரணத்தைத் தெரிந்தார்; அரைகுறைப் படிப்பினுல் நேர்ந்த பிழையை எண்ணி வருந்தினுர். மான உணர்ச்சி மிக்க அவர், மேல்வாரியான தமிழ் அறிவைப் பெறுவதோடு நின்றுவிடாது, தமிழைத் தொடர்ந்து கற்றுத் தம் அறிவைப் பெருக்கிக் கொள்ள உறுதி கொண்டார். தமிழ் மொழியின் செம்மையும் தொன்மையும் அவர் உள்ளத்தைக் கவர்ந்தன. ஆகையால், முதலில் கடமைக்காகத் தமிழைக் கற்கத் தொடங்கியவர், நாளடைவில் ஆர்வம் மீதூரக் கருத்தூன்றிக் கற்று வந்தார். அப்போது, அவர் தமிழ் இலக்கியங்கள் பேரின்பத்தை வாரி வழங்குவதோடு, மனவெழுச்சியையும் ஊட்டும் இயல்பின என்பதையறிந்தார்; மேலும், தமிழ் மொழி விளைக்கும் இன்பம் பிறமொழிகளைக் கற்ற போது ஏற்பட்ட இன்பத்தினும் மிக்கிருத்தலையும் உணர்ந்தார். அவர் நாள்தோறும் தமிழுக்கென்று சில மணி நேரங்களை ஒதுக்கி வைத்துக் கற்று வந்தமையால், பின்னும் சில உண்மைகளை உணரலானுர். இலக்கிய உணர்வுடைய ஒருவன், எல்லாச் சூழ்நிலையிலும் இன்ப வாழ்வு நடத்தலாம் என்பதையும்,

அவன் வாழ்வின் ஒவ்வொரு துறையும் இனிக்கும் தன்மை உடையதாய் இருக்கும் என்பதையும் அவர் உணர்ந்தார். இலக்கிய இன்பம் என்றும் தெவிட்டாத இன்பமன்றோ ? சிலகாலம் தமிழைப் பயின்ற அளவில், இத்தகைய நுகர்வுகளை எல்லாம் பெற்ற வீரமாமுனிவர், தமிழ் இலக்கியக் கடலுள் மூழ்கி, இன்சுவை நுகர ஆவல் கொண்டார். சுடர் விளக்காயினும் தூண்டுகோல் ஒன்று வேண்டுமன்றோ? நுண்ணறிவும் பன்மொழிப் புலமையும் உடைய அவர், தமிழ் இலக்கிய நயங்களைத் தெரிந்து கொள்வதற்கு ஆசிரியர் ஒருவரது துணையை நாடினர் ; அப்போது பழநியில் இருந்த **சுப்பிரதீபக் கவி ராயர்** என்பவரது புலமையை அறிந்து, தக்கவர்களது உதவியால் அவரை ஆசிரியராகப் பெற்றார். கவிராயர் தமிழ் இலக்கிய இலக்கணக் கடலின் கரை கண்டவர் ; தமிழ் நூல்களைச் சிக்கறக் கற்பிக்கும் ஆற்றலும் பழக்கமும் மிக்கவர் ; **'கூளப்ப நாயக்கன் காதல்'** என்னும் நூலை ஆக்கிப் புகழ்பெற்றவர். அவரிடம் முத்தமிழையும் முறையாகக் கற்றுச் செந்தமிழ்ப் புலமை நிரம்பிய வீரமாமுனிவர், தமிழின் தெள்ளிய சுவையை நுகரலானர்; வள்ளுவர் வாக்கின் மாண்பினை உணர்ந்தார் ; சிந்தாமணியின் சீரிய சுவையை நுகர்ந்தார் ; சிலப்பதிகாரத்தில் தம் சிந்தையை இழந்தார் ; கம்பரது கவியின்பஞ் சுவைத்துக் களித்தார்; தமிழர், தம் செய்யுள் நூல்களைச் செவிக்குத் தேனுகவும் சிந்தைக்கு விருந்தாகவும் கொண்டு மனப்பாடம் செய்து வருவதைக் கண்டு, தாமும் **திருவாசகம்** முதலிய பல நூல்களை மனப்பாடஞ் செய்து பாடிப் பழகினர். எனவே, அவர் தெலுங்கு, கன்னடம், ஆரியம், இந்துஸ்தானி என்னும் பல மொழிகளைக் கற்ற போதிலும், கன்னித் தமிழையே மேலும் மேலும் விரும்பிக் கற்றுச் சீரிய புலமை பெற்றார். முப்பதாம் அகவைக்குப் பின் தமக்கு முற்றிலும் புதிதான ஒரு மொழியைக் கற்கத் தொடங்கி அம்மொழியில் இலக்

கிய இலக்கணங்களை ஆக்கும் அளவிற்குப் புலமை பெற்று விளங்கியவர் வீரமாமுனிவர் ஒருவரே எனலாம். இத்துணைப் பெரும்புலமை பெற்ற பிறகும் அவர், 'நாம் அறிவின் எல்லைக் கோட்டை அடைந்துவிட்டோம்!' என்று இறுமாப்புக் கொள்ளவில்லை. அப்படிக் கொண்டிருந்தால், அவர் சிந்தனை உறங்கியிருக்குமன்றோ? அவர் இறுதி மூச்சு வரையில் கற்றுக்கொண்டே யிருந்தார். அவர், தமிழைக் கற்கக் கற்கத் தமிழ்ப் புலமை கனிந்ததைப் போல, அவர் வாழ்வும் தமிழ் வாழ்வாய் மலர்ந்தது.

**புதுத்தோற்றம் :**

இங்ஙனம் தமிழ்ப் பயிற்சியால் தமிழராய் மாறிய வீரமாமுனிவர், தாம் கொண்ட புதுத்தோற்றத்தாலும் தமிழராய்க் காட்சி அளிக்கலானார். அவர் நெற்றியில் கோபிச் சந்தனம் தீட்டினார் ; காலில் பாதக்குறடு பூண்டார் ; காதில் முத்துக் கடுக்கன் அணிந்தார்; உடலில் காவி அங்கி தரித்தார்; இடையில் காவிக் கச்சையைக் கட்டினார் ; பதனிட்ட புலித்தோலிருக்கையில் அமர்ந்து பரமனைத் தொழுதார். அவர் நம் நாட்டு மடாதிபதிகளைப் போலவே புலித்தோலினை விரித்த பூஞ்சிவிகையில் அமர்ந்து, வெண்கொற்றக் குடையும் பிற விருதுகளும் முன்னே செல்ல, இரு பக்கங்களிலும் ஏவலர்கள் மயில் விசிறியால் வீச, கருணைப்பொலிவோடு சிவிகை ஊர்ந்து மத போதனைக்குச் சென்றார். இவ்வாறு தாம் கொண்ட தோற்றத்தால் தமிழ்த் துறவியராய் விளங்கிய வீரமாமுனிவர், கள்ளும் ஊனும் கடிந்து, தூய மரக்கறி உணவையே உண்டு, இயற்கை வாழ்வு வாழ்ந்து வந்தார். அவரைத் தமிழர் தமிழ் முனிவராகவே கொண்டு போற்றினர்.

தமிழில் தலைசிறந்த பெருமை வாய்ந்த **அகத்திய முனிவர்**, முத்தமிழுமுணர்ந்த வித்தகர். அவர் பொதிய

மலையில் தமிழ்ச்சங்கம் அமைத்துத் தமிழை வளர்த்தவர். அந்தத் தமிழ் முனிவருக்குப் பிறகு தமிழும் சைவமும் தழைக்கப் புலமைத் தொண்டாற்றிய அறிவுப் பெருஞ் செல்வர் சிவஞான முனிவரும், கிறித்தவமும் தமிழும் வளரப் பெருந்தொண்டாற்றிய வீரமாமுனிவருமே தமிழ்ப்பெருமக்களால் '**முனிவர்**' என்று பாராட்டுதலுக் குரியவராயினர்.

வீரமாமுனிவர் கொண்ட புதுத்தோற்றத்தைப் பண்டித முத்துச்சாமிப் பிள்ளை என்பார், அழகிய சொல்லோவியமாக்கித் தந்துள்ளார். அவர் சென்னைக் கலெக்டராய் இருந்த **எல்லிசால்**[1] நிறுவப்பட்ட 'கல்விச் சங்கத்'தில் மேலாளராய் இருந்தவர் ; வீரமாமுனிவர் வரலாற்றை முதன்முதல் எழுதி வெளியிட்டவர். அவர் தந்த சொல்லோவியத்தை அவர் வாக்கிலேயே படித்து மகிழ்வோம் :

“ வீரமாமுனிவர் மடத்திலிருக்கும் போது கோபிச் சந்தனம் நெற்றியிலிட்டுக்கொண்டு, தலைக்குச் சூரிய காந்திப் பட்டுக்குல்லாவும், அரைக்கு நீர்க்காவிச் சோமனும், திருநெல்வேலிக் கம்பிச் சோமன் போர்வை முக்காடும், காலில் பாதக்குறடும் அணிந்துகொண்டிருப் பார். இவர் வெளியில் சாரி போகும் போது பூங்காவி அங்கியும், பூங்காவி நடுக்கட்டும், வெள்ளைப் பாகையும், இளங்காவி உத்தரிய முக்காடும், கையினிற்காவி உருமாலையும், காதில் முத்துக்கடுக்கனும், விரலில் தம்பாக்கு மோதிரமும், கையில் தண்டு கோலும், காலிற் சோடும் அணிந்து வந்து, பல்லக்கில் மெத்தையின் மேலிட்டிருக்கும் புலித்தோல் ஆசனத்தின்மேல் எழுந் தருளியிருந்து, உபய வெண்சாமரை வீசவும், இரண்டு மயிற்றோகைக்கொத்திரட்டவும், தங்கக் கலசம் வைத்த காவிப்பட்டுக் குடை பிடிக்கவும் சாரி போவார்; இறங்கு

1. Ellis

மிடங்களில் புலித்தோல் ஆசனத்தின்மேல் உட்காரு வார்."

இவ்வாறு நிகரற்ற தமிழ்ப்புலமையும் வழுவிலாத் தவ வாழ்வும் கொண்டு தமிழ் முனிவராய்க் காட்சி அளித்த வீரமாமுனிவரைத் தமிழ்ப்புலவர்கள்,

**" மறைமொழி வாயினன்; மலிதவத்து இறைவன் ;**
**நிறைமொழிக் குரவன் ; நிகரில் கேள்வியன் "**

என்று வாழ்த்தி வணங்குகிறார்கள் ; என்றும் வாழ்த்தி வணங்குவார்கள் என்பது உறுதி.

## 2. விபத்தும் விடுதலையும்

**அந்நாள் தமிழ் நாட்டுநிலைமை :**

வீரமாமுனிவர் சமயப் பணியாற்றும் துணிவோடு தமிழகம் போந்த அக்காலத்துத் தமிழ் நாட்டின் நிலையைத் தெரிந்துகொண்டால், அவர் ஆற்றிய தொண்டு எத்தகைய ஆற்றல் மிக்கதாய் இருந்தது என்பதை நாம் ஒருவாறு உணரலாம். அவர் தமிழகம் வந்த காலம் அரசியற்கொந்தளிப்பான அமைதியற்ற காலம் ; அயலார் படையெடுப்பாலும், உள் நாட்டுக் குழப்பங்களாலும், பஞ்சத்தாலும், பிணியாலும் மக்கள் அல்லற்பட்டுக்கொண்டிருந்த காலம். முச்சங்கங்களை முறையே நிறுவிச் செந்தமிழைச் செழிப்புறச் செய்த பாண்டியர்கள் ஆண்ட மதுரையில் தெலுங்கர்களான நாயக்கர்கள் ஆட்சி நடத்தி வந்தார்கள். இராமநாத புரத்தை ஆண்ட **சேதுபதி** மன்னருக்கும் மதுரை மன்னருக்கும் **அடிக்கடி கடும்போர்** நடந்துகொண்டிருந்தது. தஞ்சாவூரில் மராட்டிய மன்னர் ஆட்சி நிலவியது. வேலூரையும் செஞ்சியையும் தலைநகராகக் கொண்டு மகமதியர்கள் ஆண்டு வந்தார்கள். மூவேந்தர்

ஆண்ட தமிழகத்தின் பிற பகுதிகள் சிதறுண்டு கிடந்தன. ஒவ்வொரு சிறு பிரிவுக்கும் '**பாளையப்பட்டு**' என்னும் பெயர் வழங்கியது. பாளையப்பட்டின் தலைவன் '**பாளையக்காரன்**' எனப்பட்டான். பாளையக்காரர்களுக் கிடையிலும் ஒற்றுமை இல்லை. புதுக்கோட்டையை ஆண்ட தொண்டைமான்களும் அமைதி இன்றியே ஆட்சி நடத்தி வந்தார்கள். ஒரு பக்கத்தில் மகமதியர் களுக்கும் மராட்டியர்களுக்கும் போர்—மற்றொரு பக்கத் தில் தஞ்சை மன்னருக்கும் இராமநாதபுர மன்னருக்கும் போர்— மதுரையில் மொகலாயர், மராட்டியர், தொண் டைமான், சேதுபதி ஆகிய நால்வரும் மோதிக்கொண் டிருந்தார்கள். சுருங்கக்கூறின், தமிழகம் ஒரு போர்க் களமாகவே காட்சி அளித்துக்கொண்டிருந்தது என்ன லாம். போதாக்குறைக்கு, வேறு தீய ஆற்றல்கள் பல தோன்றித் தமிழ் நாட்டை அலைத்துக் குலைத்து அரித் துக் கொண்டிருந்தன. வறுமையும் பேய்க்கூத்தாடிக் கொண்டிருந்தது. இவ்வாறு கன்னித் தமிழ்நாடு கட் டழிந்து தடுமாறிய நிலை கண்டு வீரமாமுனிவர் உள்ளம் உருகினார். அமைதியற்ற இந்தச் சூழ்நிலையிலேதான் வீரமாமுனிவர் தமிழகத்திற்கு வந்தார். அக்காலத்தில் கிறித்தவர்களுக்கு நேர்ந்த அல்லல்களுக்கோ, அள வில்லை. சேதுபதி மன்னர் மார்ட்டின் சாமியாரைச் சிறை செய்து துன்புறுத்தியதும், மராட்டிய அரசன் கிறித்த வர்களைப் பகைத்து வேரறுக்கத் துணிந்து நின்றதும் அக்காலத்திலேதான் நிகழ்ந்தன. மேலும், சேதுபதி மன்னர்கள் பண்டுதொட்டுக் கத்தோலிக்கர்களைக் கரு வறுக்கக் கங்கணம் கட்டி வந்துள்ளார்கள். கி. பி. 1691 ஆம் ஆண்டில் '**மெல்லோ**' என்ற உரோமன் கத்தோலிக் கப் பாதிரியாரைக் **கிழவன் சேதுபதி** என்பார் தூக்கிலிட் டுக் கொல்ல ஆணையிட்டார். ஆனால், பாதிரியார் மதுரை மன்னரின் உதவியால் உயிர் பிழைத்தார். 1691 ஆம் ஆண்டில் மதுரை மிஷனுக்குத் தலைவராய் இருந்த

**ஜான்-டி-பிரிட்டோ**[1] என்ற பாதிரியார் முயற்சியால் சேதுபதி அரச குடும்பத்தைச் சேர்ந்த **திரயத்தேவன்** என்பவன் கிறித்தவனானன். இதை அறிந்த கிழவன் சேதுபதி ஆத்திரங்கொண்டு, அந்தப் பாதிரியாரைத் தூக்கிலிட்டுக் கொன்றார். இவ்வாறே **தஞ்சையிலும்** கிறித்தவர்கள் துன்புறுத்தப்பட்டுவந்தார்கள். தஞ்சை மன்னர் தம் நாட்டில் மட்டும் அல்லாமல், மதுரை, திருச்சிராப்பள்ளி, உடையார்பாளையம் என்னும் இடங்களுக்கும் கடிதம் எழுதி அங்குள்ள கிறித்தவர்களைக் கருவறுக்குமாறு வேண்டினார். இவ்வாறு தமிழகத்து மன்னர் பலரும் கிறித்தவர்களுக்கு எதிராய்ச் செயற்பட்டு வந்தமையால், தமிழகத்தில் கிறித்தவம் தலை எடுக்க இயலாமல் முடங்கிக்கிடந்தது; கிறித்தவர்களும் கரந்துறைய நேர்ந்தது. இவற்றை எல்லாம் நன்கு அறிந்த நிலையிலேதான், வீரமாமுனிவர் தமிழகத்தில் சமயப்பணியைத் தொடங்க முற்பட்டார். ஆயினும், ஐம்புலன்களையும் அடக்கி ஆற்றிய அருந்தவத்தின் வலிமையால், அவர் அஞ்சாது தம் தொண்டைத் தொடங்கினார்.

**முதல் முயற்சி :**

உள்ளத்தில் உறுதியும், இடைவிடாத முயற்சியும், எடுத்த செயலைத் தொடுத்து முடிக்கும் ஆற்றலும் உடையவர்கள் எப்போதும் வெற்றியே பெறுவார்கள்; வெற்றிப் பாதையிலேதான் செல்வார்கள். இத்தகைய பண்புடைய வீரமாமுனிவர், 'வெற்றி பெறுவோம்' என்னும் உறுதியான நம்பிக்கையோடு தம் பணியைத் தொடங்கினார். அவர் முதலில் சில ஆண்டுகள் ஓரிடத்தில் நிலைகொள்ளாது இங்குமங்குமாய் அலைந்து

1 John de Britto

திரிந்து பல வகை இன்னல்களுக்கிடையே பணியாற்றி வந்தார். அவர் சிறிதளவு தமிழ் பேசத் தெரிந்து கொண்ட பிறகு, 1713ஆம் ஆண்டு தென்பாண்டி நாட்டில் கலை வளமும், கல்வி வளமும், நிலவளமும், மலை வளமும் நிரம்பிய திருநெல்வேலிச் சீமையைச் சேர்ந்த கயத்தாற்றுப்பாளையத்தை அடைந்து, அங்குக் **குருக்கள்பட்டி** என்னும் ஊரில் தங்கி, கண்ணுங்கருத்து மாய்க் கடமையைச் செய்து வரலானார். அங்கு அவர் ஆற்றிய தொண்டு அளப்பரியது. அவர் உண்மைக்கு உறைவிடமாயும், உதவும் மனவலிமை உடையவ ராயும், அருள் மனம் படைத்தவராயும் இருப்பதை அவ்வூர் மக்கள் எளிதில் உணர்ந்துகொண்டார்கள். துறவின் தூய்மையும் அன்பின் ஆழமும் உடைய முனிவரை அவ்வூர் மக்கள் விரும்பிப் போற்றினார்கள். முனிவரும் அவர்கள் விருப்பத்திற்கு இழுக்கு வாரா வண்ணம் நடந்து வந்தார். அவர் ஆணவமும் அழுக்காறும் இன்றி எளிய வாழ்க்கையை மேற்கொண்டு இயேசு சமயக் கொள்கைகளை மக்கள் மனங்கொள்ளு மாறு எல்லையற்ற அன்போடு எடுத்து உரைத்து வந் தார்; எல்லாரிடமும் கள்ளங்கபடமின்றிக் கலந்து பழ கினார்; ஏழை எளியவர்களிடமும் பரிவு காட்டினார்; அவர் களுக்கு எல்லாவிதமான உதவிகளையும் செய்தார்; இளை ஞர்களது கல்வியை வளர்க்கக் கருத்துடன் முயன்றார். இவ்வாறு தந்நலங்கருதாது சொல்லாலும் செயலாலும் உள்ளத் தூய்மையோடு உழைத்து வந்தமையால், பாமரரே யன்றிப் பணம் பதவி படைத்தோரும் அவர் பணியை வியந்து போற்றினர். அவர்களுள் ஒருவன் **சேர்வைக்காரன்.** அவன் செல்வக்குடியிற்பிறந்தவன்; கயத்தாற்றுப்பாளையத் தலைவனான **மழவராயன்** என்பவ னுக்கு மைத்துனன். அவன் முனிவரிடம் பெருமதிப்பு உடையவனாய், அவர் அறிவுரை வழி நின்று இயேசு சமயத்தைத் தழுவினான். இச்செய்தி பாளையத்தில்

பெரும்பரபரப்பை உண்டு பண்ணிற்று. மேலும், இந்து மதப் பூசாரி ஒருவனும் குடும்பத்தோடு அம்மதத்தில் சேர்ந்தான் என்னும் செய்தியும் எங்கும் பரவியது. இவர்களைத் தொடர்ந்து பின்னும் பலர் புதிய மதத்தில் சேர்ந்தனர். முனிவரது உண்மை உழைப்பின் சாதனையாலும் போதனையாலும் கயத்தாற்றுப்பாளையத்தில் கிறித்தவ மதம் கால்கொள்ளலாயிற்று. முனிவரது தொண்டின் ஆற்றலைக் கண்டு போற்றுதலறியாப் புல்லர்கள் மட்டும், பொறாமையால் மனம் புழுங்கினார்கள். முனிவருக்குப் பொல்லாங்கு விளைக்க முயன்று, இயலாமையால் சொல்லம்புகள் வீசித் துன்புறுத்தி வந்தார்கள். ஆனால், முனிவரோ, எதற்கும் அஞ்சாது, எல்லாம் இறைவர் திருவருள் என்னும் திடச்சித்தத்தோடு அன்பு வழியில் அயராது உழைத்து வந்தார். தம் முதல் முயற்சி வெற்றி பெற்றமையால், முன்னையினும் ஊக்கத்தோடு உழைத்து வரலானார்.

**வஞ்சகன் வருகை :**

கயத்தாற்றுப்பாளையத்தில் கத்தோலிக்க மதம் புகழ் பெறுவதைக்கண்டு பொறாமையால் மனம் புழுங்கியவர்கள் வீரமாமுனிவரைத் தூற்றி வந்தார்கள் அல்லவா ? அவர்கள் அதோடு அமையவில்லை. நஞ்சனைய வஞ்சனைகள் புரிந்தாவது முனிவரை வீழ்த்தி விட வேண்டும் என்று திட்டமிட்டார்கள்.

**"அழுக்கா றெனும்ஒரு பாவி திருச்செற்றுத்**
**தீயுழி உய்த்து விடும்."**

என்பது வள்ளுவர் வாக்கன்றோ ? அழுக்காறு என்னும் பாவிக்கு அடிமைப்பட்ட அவர்கள் தீயுழிச் சென்று சேர்வது வரை வாளா இருக்க இயலாதன்றோ? அவர்கள் முனிவரை வஞ்சிப்பதையே முக்கியமாகக்கொண்டு

முயன்று வந்தார்கள். முனிவர் இவற்றையெல்லாம் அறிந்திருந்தபோதிலும், தம்மைப் பழித்துத் தூற்றிய வர்களையும் பகைத்துக்கொள்ளவில்லை ; அழிக்க முயன் றவர்களையும் அடித்து ஓட்டவில்லை ; எல்லாரிட மும் அன்புடன் பழகி, இடையூறுகளை யெல்லாம் பொறுமையால் வென்று, புகழோடு விளங்கினார். இடுக் கண் இழைத்தவர்க்கும் இன்னா செய்யாத அன்புநெறி யைப் பரப்ப வந்தவரல்லரா அவர் ?

இத்தகைய அன்புள்ளம் படைத்த முனிவரையும் வஞ்சிக்கக் கருதிக் கயவன் ஒருவன் புறப்பட்டான். அவன் இடமறிந்து வேடம் புனைந்து ஏமாற்றும் வித்தையில் வல்லவன். அவன் குருக்கள்பட்டிக் குருவை வஞ்சிக்க வேண்டும் என்று நெஞ்சார எண்ணியே வந்தான். வந்தவன் வழியிடையில் வடக் கன் குளத்தை அடைந்து, கிறித்தவனைப்போல நடித் தான் ; அங்குள்ள கிறித்தவர்களுக்கு உபதேசிப்ப வனைப்போல வாயில் வந்தவாறு உளறினான். அவன் மொழிகள் பொல்லாங்கு விளைக்கும் பொய்யுரைகள் என் பதை உணர்ந்த அவ்வூர்க் கிறித்தவப் பெருமக்கள் அவனைத் தக்கவாறு தண்டித்து அனுப்பினார்கள். தண்டனை பெற்ற அக்கயவன், குருக்கள்பட்டிக் குருவை அடைந்து, தனக்கேற்பட்ட இன்னலை எடுத்துரைத் தான் ; தன்னைத் தண்டித்தவர்களைப் பழிவாங்க வேண் டும் என்று பரிந்து வேண்டினான். வஞ்சம் இல்லாத நெஞ் சினரான வீரமாமுனிவர் வந்தவனை வாஞ்சையோடு வர வேற்றார் ; அவன் கள்ளத் தன்மையை உணராது அவ னுக்கு உண்டியும் உறையுளும் கொடுத்து உபசரித்தார்; அவனுக்கு நேர்ந்த அல்லலை எண்ணி மனம் உருகினார் ; அவனை அன்புடன் தழுவி ஆறுதல் கூறினார் ; 'இன்னா செய்தவர்க்கும் இனியன செய்தலே உண்மைக் கிறித்த வனுக்கு உரிய கடமை,' என்று அறிவுறுத்தினார். அக்கய வன் காதில் இவற்றுள் ஒன்றும் புகவில்லை. ஆயினும்,

அவன் முனிவரது அன்புரைக்கு அடங்கியவனைப்போல நடித்து அவரிடம் விடை பெற்றுச் சென்றான்.

அப்போது அவ்வூரை அடுத்த ஆலங்குளத்தில் மதுரை நாயக்க மன்னரின் படையினர், வரி தண்டும் பொருட்டு வந்திருந்தனர். அவர்களுள் பலர் மகமதியர் என்பதை அறிந்து அவ்வஞ்சகன், ஒரு பக்கிரியைப் போல வேடம் புனைந்து, பாசறையை நோக்கி நடந்தான். கிறித்தவர்களைப் பழி வாங்குவதோடு, அவர்கள் தலைவரான முனிவரையும் தக்கவாறு தண்டிக்க வேண்டும் என்று அவ்வஞ்சகனது நெஞ்சம் துடித்தது. வீரமாமுனிவரிடம் பொறாமை கொண்டிருந்தவர்களது சூழ்ச்சித் தூண்டுதலும் அவனுக்கு இருந்திருக்கலாம்.

**பக்கிரியின் சூழ்ச்சி :**

பாசறையை நோக்கிப் பக்கிரி ஒருவன் வருவதை மகமதிய வீரர்கள் கண்டார்கள். அவர்கள் மகிழ்ச்சி மிக்கவர்களாய், அவனை அன்புடன் வரவேற்று, வந்த காரியத்தை வினவினார்கள். போலிப்பக்கிரி பழி வாங்குதற்குரிய அற்றம் வந்துற்றதாக எண்ணி மகிழ்ந்தான். அவன் மகமதிய வீரர்களை நோக்கி, "வீரர்களே, நான் உண்மை மகமதியன்; நம் அல்லாவின் புகழை எல்லாருமறிய எடுத்துரைத்தேன். அதனைக் கேட்டுச் சீற்றமுற்ற குருக்கள்பட்டிக் குருவும் அவர் ஆள்களும், மதவெறியால் என்னை அடித்தும் உதைத்தும் அல்லற்படுத்தினார்கள். அல்லாவின்பொருட்டு யான் இந்த அல்லலுக்கு ஆளாவதா ? எனக்கு நேர்ந்த இந்த இழிவு மகமதியர்களாகிய உங்களுக்கும் உரியதன்றோ?" என்று உருக்கமாக எடுத்துரைத்தான்.

போலிப் பக்கிரியின் பொய்யுரையை மெய்யுரை என நம்பிய மகமதிய வீரர்கள், அவனை அழைத்துச் சென்று

படைத் தலைவனுக்கு அறிமுகம் செய்து வைத்தார்கள். படைத்தலைவனைக் கண்ட பக்கிரி, அவனிடம் பசப்பு மொழிகள் பேசலானான்: "குருக்கள் பட்டிச் சாமியார் இசுலாமிய மதத்திற்கு முதல் எதிரி. அவர் நம் மதத்தை இழித்துப் பேசுகிறார்; நம் மக்களை உருவ வழிபாடு செய்யுமாறு வற்புறுத்துகிறார். பெருநிதி படைத்த அவர், பொன்னையும் பொருளையும் மண்ணில் புதைத்து வைத்துள்ளார். அந்தச் செல்வச் செருக்கினாலேயே அவர் உண்மை மகமதியனாகிய எனக்கும் இன்னல் இழைத்தார். அவரை அடக்கி நம் சமயத்தைக் காப்பது உங்கள் கடமை," என்று இடத்திற்கு ஏற்றவாறு பொருத்தமாகப் பேசினான் போலிப் பக்கிரி. அவன் உரைத்த பசப்பு மொழியால் மயங்கிய படைத்தலைவன், பொருளாசையால் உந்தப்பட்டான். அவன், வீரமா முனிவரையும் அவருக்குத் துணை நின்றவர்களையும் பிடித்து வருவதோடு, அவர் புதைத்து வைத்துள்ள பொன்னையும் பொருளையும் கவர்ந்துவர ஆணையிட்டுத் தன் வீரர்களைப் பக்கிரியோடு அனுப்பினான்.

**விபத்து :**

தலைவன் ஆணையை ஏற்ற வீரர்கள் குருக்கள் பட்டியை நோக்கி விரைந்தார்கள். பொய் வேடம் புனைந்த பக்கிரி வழி காட்ட, அவர்கள் குருக்கள்பட்டியைக் குறுகி, ஆரவாரம் செய்தார்கள். படை வீரர்களின் முழக்கத்தைக்கேட்ட ஊர் மக்கள், அச்சத்தால் ஓடி மறைந்தார்கள். படை வீரர்கள் கண்ணோட்டமின்றிக் கண்ணிற்கண்டவர்களை எல்லாம் காலால் உதைத்தார்கள்; ஓடி மறைந்தவர்களையும் தேடிப் பிடித்து அடித்தார்கள். ஊர் எங்கும் குழப்பம் விளைந்தது. இது 1713 ஆம் ஆண்டு, டிசம்பர்த் திங்கள், கிறித்துவின் பிறப்புப் பண்டிகைக்குச் சில நாள்களுக்கு முன்பு நிகழ்ந்தது.

வீரமாமுனிவர் பண்டிகைக்குரிய செயல்களைக் கவனித்துக்கொண்டிருந்தார். வீரர்கள் அவர் தங்கியிருந்த இடத்தையும் ஆலயத்தையும் முற்றுகையிட்டார்கள். படைவீரர்களின் ஆரவாரத்தைக்கேட்ட முனிவர் அஞ்சி நடுங்கவில்லை ; ஓடி ஒளியவில்லை. நாவிலே நல்ல தமிழும் நற்றவத்தின் திறமுமுடைய அவர், அமைதியாக வெளியே வந்து, வீரர்கள் முன்நின்று, விநயமாகப் பேசலானார். வீரர்கள் அவர் பேச்சுக்குச் செவி சாய்க்காது, வெறி கொண்டவர்களைப் போலச் சீறி விழுந்தார்கள்; முனிவரையும் அவருக்குத் துணை நின்ற போதகர் இருவரையும் சிறை செய்தார்கள். அப்போது வீரர்கள் மனம் பக்கிரி கூறிய புதையல்மேற்சென்றது. அவர்களுட் சிலர் பக்கிரியின் துணையோடு புதையலைத் தேடும் முயற்சியில் ஈடுபட்டனர். அவர்கள் கோவில், திருமடம், முனிவர் இருக்கை ஆகிய இடங்களில் எல்லாம் தேடிப் பார்த்தார்கள் ; எங்கும் புதையல் காணப்படாமையால் ஏமாற்றமடைந்தார்கள். இறுதியில் அவர்கள் பொன் முலாம் பூசப்பெற்ற சொரூப வட்டங்களைக் கண்டு, அவற்றைத் தங்க நாணயங்களென மயங்கிக் கவர்ந்து வந்தார்கள். இதற்கிடையில் போலிப் பக்கிரி, தன் வஞ்சனையும் பொய்யும் வெளியாகிவிடுமோ என்று அஞ்சி, தலை பிழைத்தால் அது போதும் என்று தப்பி ஓடினான்.

வீரர்கள் முனிவரையும் போதகர் இருவரையும் கைதிகளைப்போலப் பிடித்து ஆலங்குளத்திற்கு அழைத்துச் சென்றார்கள். வீரமாமுனிவர் அமலமாதாவின் அருளை வழுத்தியவாறு வழி நடந்தார். அப்போது அவர் நடை தளரவோ, உடல் நடுங்கவோ,மனம் கலங்கவோ இல்லை. அகப்புறப்பற்றுகளை அறவே களைந்து ஆண்டவன் பணிக்கே தம்மை உரிமைப்படுத்திய அவர்,கவலைகொள்வாரா ? அவர் முகத்தில் அருளொளி வீச அமைதியாய்

நடந்து சென்ருர். போதகர் இருவரும் அவரைத் தொடர்ந்து சென்றனர். வீரர்கள் அம்மூவரையும் படைத் தலைவன் முன் கொண்டுபோய் நிறுத்தினுர்கள். படைத் தலைவன் அம்மூவரையும் முனிந்து நோக்கி, முனிவரிடம் வேதக் கொள்கைகளைக் குறித்துக் கடு கடுத்து வினவலானுன். சீலமே உருவான முனிவர், அவன் விஞக்களுக் கெல்லாம் மெய்ம்மறையின் மேன்மை விளங்க விடையிறுத்து நின்ருர். அவர் விடைகளைக் கேட்ட படைத் தலைவன், முனிவர் தன்னை மதிக்கவில்லை என்று தவருகக் கருதிச் சீற்றமுற்ருன்; முனிவர்க்கும் மற்றை இருவர்க்கும் சிறைத்தண்டனை விதித்து, அவர்களை விலங்கிஞல் பிணிக்குமாறு பணித் தான். வீரர்கள் அம்மூவரையும் விலங்கிட்டுக் காவலில் வைத்தார்கள் ; பின்னர், போதகர் இருவரையும் தனி யிடத்திற்கொண்டு சென்று, அவர்களைப் பெரிதும் வருத்தி, இயேசு சமயத்தை விட்டு விலகுமாறு அறி வுறுத்தினுர்கள் ; வீரமாமுனிவர் புதைத்து வைத்துள்ள பொன்னையும் பொருளையும் காட்டித் தருமாறு வற்புறுத் தினுர்கள். அவர்கள் எதற்கும் அஞ்சாமல், தங்கள் நிலையில் தாழாது நின்ருர்கள். வீரமாமுனிவர் ஒரு தீங்கும் செய்யாத அவர்களுக்கு நேர்ந்த அல்லலை அறிந்து, அகம் குழைந்து உருகினுர்; ஆயினும், செய்வ தறியாது திகைத்து நின்ருர்.

முனிவர் அச்சமின்றி அசையாது நிற்பதைக் கண்ட படைத்தலைவன், கோபத்தால் கொதித்தெழுந்தான் ; அவருக்குக் கொலைத்தண்டனை விதித்துக் கோபம் தணிந்தான். தலைவன் ஆணையை ஏற்ற சேவகர் முனி வரைக் கொலைக்களம் கொண்டு செல்லும் முயற்சியில் ஈடுபட்டனர்.

## தூக்கு மேடை :

முனிவரைத் தூக்குமேடையிலேற்றித் தமிழ் அன்னையைக் கொடும்பழிக்கு ஆளாக்கும் நிலைமை திக்கெல்லாம் புகழும் திருநெல்வேலிச் சீமைக்கு நேர இருந்தது. படைத்தலைவன் விதித்தவாறு போர்ச் சேவகர்கள் வீரமாமுனிவரைத் தூக்கு மேடையிற் கொண்டுவந்து நிறுத்தினார்கள். சாவுக்கு அஞ்சாத மக்களுமுண்டோ! உலகில் எவ்வளவுதான் தொல்லைப்பட்டாலும் சாவு என்றால் அஞ்சத்தானே தோன்றும்? ஆனால், ஆண்டவன் அருளையே எண்ணிப் பழிபாவங்களைத் தவிர மற்றெதற்கும் அஞ்சாத வீரமாமுனிவர், சாவு தம்மை நெருங்கியிருக்கிறது என்பதை உணர்ந்தபோதும் அஞ்சவில்லை; ‘ஐயோ!’ என்று அலறவில்லை; கண்ணீர் வடித்துக் கதறவில்லை. அவர் உள்ளம் கலங்காது, உறுதி தளராது; மன்னுயிர்க்காகத் தம்முயிரை நீத்த மகிபரது திருவருளை வழுத்தி, அவருக்கு வாய்த்தபேறு தமக்கும் வாய்க்கப் போவதை எண்ணிப் பேரின்ப நிலையில் நின்றார். அன்றோடு அவரது வாழ்நாள் முடிந்திருந்தால், தமிழகம் எத்தகைய பெரும்பழியைச் சுமந்திருக்கும்! எத்தனை இலக்கிய இலக்கண நூல்களை இழந்திருக்கும்! எனவே, தமிழகத்திற்கு நேர இருக்கும் பெரும் பழியையும் பேரிழப்பையும் எண்ணித் தமிழ் அன்னை திருவருள் பாலித்தாள் போலும்! தமிழ் அன்னையின் திருவருளினாலோ, ஆண்டவனது கருணைத் திறத்தாலோ, வீரமாமுனிவர் காப்பாற்றப்பட்டார்.

## விடுதலை :

வீரமாமுனிவர் தூக்கு மேடையில் நிறுத்தப் பட்டுள்ளார் என்னும் செய்தி குருக்கள்பட்டியை எட்டி

யது. அதனை அறிந்த அரச வமிசக் கிறித்தவர் இருவர் ஆத்திரம் கொண்டனர்; "குற்றமற்ற முனிவருக்குக் கொலைத்தண்டனையா!" என்று கொதித்து எழுந்தனர்; தம்முயிரைப் பொருட்படுத்தாது தலையைக் கொடுத்தேனும் தவ முனிவரைக் காக்கத் துணிந்தனர்; படைத் தலைவன் இருந்த பாசறையை அடைந்து, அவனிடம் அடிகளாரை விடுதலை செய்யுமாறு நயத்தாலும் பயத்தாலும் வேண்டினர். படைத்தலைவன் அவர்கள் நயவுரைக்குக் கட்டுண்டோ, பயவுரைக்கு அஞ்சியோ, முனிவரையும் போதகர் இருவரையும் விடுதலை செய்யுமாறு ஆணை பிறப்பித்தான். பெண்டிர் இருவர் உதவியால் முனிவர் விடுதலை பெற்றார் என்னும் செய்தியும் கூறப்படுகிறது. முனிவரிடமிருந்து பொன்னெனக் கருதிக் கவர்ந்து வந்த பொருள்களும் போலிப் பொருள்களெனப் புலப்பட்டமையால், அவை முனிவரிடம் ஒப்படைக்கப்பட்டன.

விடுதலை பெற்ற மூவரும் குருக்கள் பட்டியை அடைந்தனர். அவர்கள் வருகையை அறிந்த கிறித்தவப் பெருமக்கள் மட்டற்ற மகிழ்ச்சி கொண்டார்கள்; முனிவரது தந்நலமற்ற தியாக வாழ்க்கையையும் அஞ்சா நெஞ்சத்தையும் போற்றிப் புகழ்ந்தார்கள்.

## தொண்டின் வெற்றி :

வீரமாமுனிவர் தவநெறியில் வழுவாதவர்; குணங்களால் நிறைந்தவர்; பகைவரிடமும் கருணை காட்டும் பண்பினர். அவர் ஆண்டவர் பணியாற்றவே தாம் விடுதலை பெற்றதாக எண்ணித் தம் பணியைத் தொடர்ந்து நடத்த முற்பட்டார். அவர் முயற்சிக்குப் பலர் இடையூறு இழைக்க முன் வந்தனர்.

குருக்கள் பட்டியை அடுத்த கயத்தாற்றுப்பாளையத் தலைவனான **லோகநாதன்** என்பவன் முனிவருக்கு முதல் எதிரியாய்க் கிளம்பினான். அவன் ஏவலால் பலர் முனிவருக்கு இடுக்கண் விளைத்தனர். எல்லாம் அறிந்த முனிவர், லோகநாதனைக் கண்டு நயம்படப் பேசி, அவன் உதவியை வேண்டினார். அவன் முனிவர் வேண்டுகோளை உதறித் தள்ளியதோடு, கிறித்தவக் கோவில்களை இடித்தல் போன்ற கொடுமைகளைச் செய்யவும் தொடங்கினான். 'கடவுளை நம்பினோர் கைவிடப்படார்,' என்னும் உறுதி கொண்ட வீரமாமுனிவர், 'நம்பிக்கை நல்வாழ்வளிக்கும்,' என்னும் எண்ணத்தோடு தம் பணியை அயராது ஆற்றி வந்தார். சில நாள்களில் மதுரை மன்னனது வெகுளிக்கு இலக்கான லோகநாதன் சிறைத்தண்டனை பெற்றான். அது முதல் அவனால் நேர்ந்து வந்த இடையூறுகள் ஒழிந்தன. முனிவரது பணி இனிது நடந்து வந்தது. அவர் பகைவர்களிடமும் அன்போடு பழகினார்; அவர்களைத் தம் பொறுமையாலும் உபதேசவன்மையாலும் நல்வழிப்படுத்தினார்; ஏழைகளை அன்புடன் வரவேற்று ஆதரித்தார்; தீயவர்களையும் அறிவுரை கூறித் திருத்தினார். எல்லாரிடமும் அன்பு கனிய உரையாடித் தூய வாழ்வு நடத்தி வந்த முனிவரது பரந்த மனப்பான்மையைக் கண்டு, பகைவரும் அவர்க்கு நண்பராயினர். அன்பு, அறம், வாய்மை, தூய்மை, பணிவுடைமை ஆகிய நற்குணங்கள் ஒரு வடிவெடுத்தாற்போன்று காட்சி அளித்த வீரமாமுனிவர், அன்பு நெறியில் ஒரு கலங்கரை விளக்கமாய் நின்று ஆற்றிய தொண்டின் தூய்மையும் உயர்வும் கயத்தாற்றுப்பாளைய மக்கள் மனத்தைக் கவர்ந்தன. இன்னும், அவர் இடுக்கண் நேர்ந்த காலத்திலும் இன்பச் சிலிர்ப்புடன் சிரித்துக்கொண்டே தம் பணியைத் தொடர்ந்து நடத்தினார்; எதற்கும் அஞ்சாது உள்ளொளியோடு உவந்து பணியாற்றினார். அவரது அன்பான

போக்கும் பணியின் சிறப்பும் கண்டு, பலர் கிறித்தவ மதத்தில் சேர முன் வந்தனர்.

நாளடைவில் கயத்தாற்றுப்பாளையம் இறைவர் மயமாயிற்று. முனிவர் தம் தொண்டு வெற்றி பெற்று வருவதை எண்ணி மகிழ்ந்தார். இந்த வெற்றி அவருக்கு மேன்மேலும் தொண்டில் ஆர்வத்தை ஊட்டி வளர்த்தது.

# 3. சமயப்பணியும் சந்தா சாகிபுவின் நட்பும்

**ஓய்வும் ஆய்வும் :**

வீரமாமுனிவர் 1714ஆம் ஆண்டு கயத்தாற்றுப் பாளையத்தை விட்டு வெளியேறினர். அவர் பல வகை அல்லல்களுக்குட்பட்டு உடல் நலிவுற்றிருந்தமையால், சிறிது காலம் ஓய்வு கொள்ள விரும்பினர். விரும்பிய வாறு அவருக்கு ஓராண்டு ஓய்வெடுக்கும் வாய்ப்பும் கிட்டியது. அப்போது அவர் பொழுது போக்கிற்குத் தமிழ்ப்பூஞ்சோலையினுள் நுழைந்து கலை வண்டாய்ச் சுற்றித் திரிந்தார். அக்காலத்திலேதான் அவர் **சுப்பிர தீபக் கவிராயர்** என்னும் நல்லாசிரியர் துணையோடு, தமிழ் இலக்கிய இலக்கணங்களை ஆய்ந்து, தமிழ் மொழியில் காவியம் முதலியன புனையும் பெரும்புலமை எய்தினர் என்பர். இவ்வாறு ஓய்வெடுத்த காலத்திலும் தமிழ் ஆய்வு நடத்தியதால் அவர் உடலில் வலிமையும் உள் ளத்தில் புலமையும் மலர்ந்தன. இதனல் அவர் வாழ்க்கை யில் வெற்றி பெற்றதோடு பிற்காலத்தில் புகழ் மேடை யிலும் வீற்றிருந்தார்.

### அஞ்சா நெஞ்சம் :

வீரமாமுனிவர் ஓய்வுக்குப்பின் இராமநாதபுரத்தில் சமயப்பணி ஆற்றுமாறு விதிக்கப் பெற்ருர். அக்காலத்தில் இராமநாதபுரத்தில் அருட்சமயத் திருப்பணியாற்ற இயேசு சமய குருமார் யாரும் முன் வரவில்லை. இராமநாதபுரத்தை ஆண்ட சேதுபதி மன்னர்கள் கிறித்தவர்களுக்கு இழைத்த கொடுமைகளை நாம் அறிவோமல்லவா? போர்த்துகீசியப் பெரியவரான அருளானந்தரின் சிரத்தை அறுத்து அவர் உடம்பைப் பருந்துக்கும் கழுகுக்கும் விருந்திட்ட பழிச்செயல் நாமறிந்ததே! இந்தப் பழிச்செயலைச் செய்த **விசயரங்கநாதன்** வழி வந்த மன்னர்களே அப்போது அந்நாட்டை ஆண்டு வந்தார்கள். அவர்களும் தங்கள் முன்னோர்களைப் போலவே கிறித்தவர்களுக்கு இயன்றவாறெல்லாம் இடுக்கண் இழைத்து வந்தார்கள். மேலும், தஞ்சைக்கும் இராமநாதபுரத்திற்கும் இடையே நடைபெற்று வந்த சண்டைகளால் அங்கே எப்போதும் கலகங்களும் குழப்பங்களும் நடந்த வண்ணமிருந்தன. இந்நிலையில், யார்தாம் அங்கு இயேசு சமயத் திருப்பணியாற்ற முன் வருவார்? ஆனால், இறைவன் திருப்பணிக்கே தம்மை உரிமையாக்கிய வீரமாமுனிவர், அந்நாட்டில் தொண்டாற்ற முன் வந்தார் என்ருல், அவரது அஞ்சா நெஞ்சத்தை என்னென்றுரைப்பது! அவர் அங்கு எத்துணைக்காலம் தொண்டாற்றினுர் என்பது தெரியவில்லை. அவரது எண்ணருஞ்சேவை வேறிடத்திற்கு வேண்டி வந்தமையால், அவர் விரைவில் அங்கிருந்து அகன்ருர் என்பது தெரிகிறது.

### தஞ்சை நாடு :

அக்காலத்தில் தஞ்சை நாட்டிலும் கிறித்தவர்கள் பட்ட பாட்டிற்கு அளவில்லை. அந்நாட்டை ஆண்ட

**சாஜி** என்னும் மராட்டிய மன்னன், சமயத் தொண்டாற்றிய கிறித்தவப் பாதிரிமார் பலரைச் சிறையில் அடைத்துத் துன்புறுத்தினன். **ஜோசப்பு கர்வாலோ** என்னும் குரு சிறைப்பட்டு ஆருயிர் நீத்தது அவன் ஆட்சியிலே தான். அம்மன்னன் மாண்ட பின் அவன் பின்னவனான **சரபோஜி**யின் ஆட்சியிலும் கிறித்தவர்கள் உயிருக்கும் உடைமைக்கும் பாதுகாப்பின்றித் துன்புற்றனர்கள். அம் மன்னன் தஞ்சை நாட்டார் இயேசு நெறியைத் தழுவலாகாது என்றும், தழுவுபவர் தண்டனைக்கு ஆளாவர் என்றும் ஆணை பிறப்பித்தான்; கிறித்தவக் குருக்கள் தன் நாட்டு எல்லையில் எட்டிப் பார்க்கலாகாது என்று கட்டளையிட்டான்; ஆணையை மீறியவர்களை ஒறுத்து ஒடுக்கினன். ஆகையால், கிறித்தவக் குருக்கள், தஞ்சை நாடு என்றால், அஞ்சி நடுங்கினர்கள். இந்நிலையில் அந்நாட்டுக் கிறித்தவ மக்கள், மன்னவன் கொடுமைக்கு அஞ்சி, அந்நாட்டு எல்லைக்கு அப்பாலுள்ள **ஏலாக்குறிச்சி** என்னும் ஊரில் தஞ்சம் புகுந்து, அங்குத் தங்கள் வேதக் கடமைகளை நிறைவேற்றி வந்தார்கள்.

### ஏலாக்குறிச்சி :

தஞ்சைக்கு இருபது கிலோ மீட்டர்த் தொலைவில் கொள்ளிட நதியின் வடகரையில் ஏலாக்குறிச்சி அமைந்திருந்தது. வீரமாமுனிவர் அவ்வூரிலுள்ள கோவில் குருவாய் நியமனம் பெற்றார். அவர் ஏலாக்குறிச்சியில் தங்கி, தஞ்சாவூர்ப் பகுதியிலுள்ள திருச்சபைகளை எல்லாம் கவனிக்கும் பொறுப்பை ஏற்றார்; தஞ்சை நாட்டுக் கிறித்தவப் பெருமக்கள் நிலைமைக்கு இரங்கித் தம் உயிரைத் துரும்பெனக் கருதி அவர்களுக்கு உதவத் துணிந்தார். அவருக்கு முன் ஏலாக்குறிச்சியில் சமயப் பணியாற்றிய **எம்மானுவேல் மச்சடோ** என்னும் குரு, அப்போது சிறையிலிருந்தார். கிறித்தவப் பெருமக்கள்,

அரசியலாரின் அடக்குமுறைக்கு அஞ்சி, ஏலாக்குறிச்சியினும் நிலை கொள்ளாது, இங்குமங்கும் அலைந்து கொண்டிருந்தார்கள். இந்நிலையிலும் வீரமாமுனிவர் அஞ்சாது—மனவுறுதி குன்றாது—தம் சமயப்பணியைத் தொடர்ந்து நடத்தினர். அப்போது அவ்வூர் மதுரை நாயக்க மன்னனுக்கு அடங்கிய **அரியலூர் மழவராயன்** என்னும் குறுநில மன்னன் ஆட்சியிலிருந்தது. முனிவர் அவனைக் கண்டு பேசி உதவிபெற எண்ணினர். நாநலம் படைத்த முனிவர் மன்னனைக்கண்டு நயமாகப் பேசினர். முகத்தில் ஒளியும், அகத்தில் அருளும், செயலில் தெளிவும் உடைய முனிவரது நயவுரைக்கு மன்னன் உள்ளத்தைப் பறிகொடுத்தான் ; இணையற்ற புலமை வாய்க்கப் பெற்ற முனிவர், அலைகளெல்லாம் அடங்கி ஒலியற்றிருக்கும் ஆழ்கடலைப்போலத் தன்முன் அடங்கி நிற்பதைக் கண்டு அவன் வியப்படைந்தான் ; அருள் உருவான முனிவரைத் தன் விழுமிய நண்பரென விரும்பி ஏற்று மகிழ்ந்தான். முனிவரும் அதை எதிர் பார்த்துதானே அங்கு வந்தார் ? அவர், மன்னனிடம் தம்பணி தடையின்றி நடைபெறுவதற்கு ஓர் ஒதுக்கிடம் தந்தருளுமாறு உருக்கமாக வேண்டினர். மன்னன் அதற்கு இசைந்தான். 1734ஆம் ஆண்டு, ஆகஸ்டு திங்கள், ஐந்தாம் நாள் ஏலாக்குறிச்சிக் கோவிலையும் அதைச் சார்ந்த இல்லத்தையும் அவன் முனிவருக்குக் கொடுத்தானென ஒரு கல்வெட்டுக் கூறுகின்றது.

**அடைக்கலமாதா :**

வீரமாமுனிவர் ஏலாக்குறிச்சியில் தம் தொண்டைத் தடையின்றி நடத்தத் துணிந்தார். அவர் தமிழ் மொழி தழைத்தோங்கவும் வேதநெறி செழித்து விளங்கவும் தொண்டாற்ற உறுதி கொண்டார். அவர் முதலில் அங்கு ஒரு திருச்சபையை நிறுவினர்; புதியதோர் ஆலயத்தை

அமைத்தார் ; திருமறைத் தலைவரின் இசைவினைப் பெற்றுத் தேவ மாதாவாகிய **மேரியம்மையாரின்** திருவுருவினை அங்கு அழகுற நிறுவினார். மேரியம்மையார் கலையுடுத்து, முடி தரித்து, கையில் மணி மாலை தாங்கி, கருணை அலையெறியும் கண்களோடு, வடதிசை நோக்கி நின்று அடியார்க்கு அபயமளித்தார். வீரமாமுனிவர் திக்கற்றோரை ஆதரித்துக் காத்த அவ்வன்னையாரை '**அடைக்கலமாதா**' என்று அன்புடன் வழங்கினார். தங்களுக்கு அடைக்கலம் கொடுத்துக் காத்த அவ்வன்னையாருக்கு அப்பெயரையமைத்த முனிவரைத் தஞ்சை நாட்டு மக்கள் போற்றிப் புகழ்ந்தார்கள். அடைக்கலமாதா ஆலயம் அமைந்திருந்த இடத்தைச் சுற்றிக் கிறித்தவர் பலர் குடியேறினர். முனிவர் அடைக்கல மாதாவின் காவலில் அமைந்த அவ்வூருக்குத் '**திருக்காவலூர்**' எனப் பெயரமைத்தார். தங்களுக்குக் காவலளித்த ஊர், காவலூரானமையை அறிந்த தஞ்சை நாட்டார், தனி இன்பம் கொண்டனர். அவர்கள் காவலூர் மாதாவின் கருணையால் கவலை நீங்கிக் களிப்புற்றனர் ; அன்னையாரைத் தீபதூபங்காட்டித் தொழுதனர்; அங்கு ஆண்டுதோறும் நடைபெற்ற பெருவிழாவில் ஆயிரக்கணக்கான மக்கள் குழுமி அடைக்கல மாதாவை வழிபட்டு மகிழ்ந்தார்கள். அன்று வீரமாமுனிவர் எடுத்த அத்திருக்கோவில் இன்றும் சிறப்புடன் நின்று, அவர் பெருமையைப் பேசிக்கொண்டிருக்கிறது.

**பாமாலை :**

முனிவர், திருக்காவலூரில் கோவில் கொண்டுள்ள அடைக்கல மாதாவின் கருணைத் திறத்தை நினைத்து உள்ளம் உருகினார். கவி பாடும் திறம் பெற்ற அவர், அன்னையார்க்கு என்றும் வாடாத பாமாலை தொடுத்து அணிய ஆர்வங்கொண்டார். அவர் கொண்ட ஆர்வம்

பொங்கித் ததும்பி அரிய கவிதைகளாய் வெளி வந்தது. கற்றவர் விழுங்கும் கற்பகக் கனியாய் விளங்கிய அடைக்கல மாதாவின் பெருமையை எடுத்துக் கூறும் வீரமாமுனிவரது கவிதை பலமுறை படித்துச் சுவைத்து இன்புறுவதற்கு உரியதாகும்.

**‘ பார்மேவும் பழிநீப்பப் பகர்ந்தடங்காப் பரிவுள்ளிச்
சீர்மேவும் திருவுளத்தைத் தெரிந்தமர ருளம்பனிப்ப
உருவில்லா னுருவாகி யுலகிலொரு மகனுதிப்பக்
கருவில்லாக் கருத்தாங்கிக் கன்னித்தா யாயினையே !**

**‘ மண்ணுலகம் துயர்நீங்க மன்னுயிர்கள் சிறந்துவப்ப
விண்ணுலகம் புகழ்ந்தேத்தி வியந்தலர்சே வடிவருட
வான்றளங்கள் புறங்காப்ப வானரசர் பணிகேட்ப
மீன்றளங்கள் அணிமதிபோல் விண்ணரசா ளாயினையே!’**

என்று வீரமாமுனிவர் கவிநலம் சான்ற இனிய மொழிகளால் பாடிய பாடலை நாம் பாடும் போது—உள்ளம் கலந்து பாடும் போது—அது நம் ஊன் கலந்து, உயிர் கலந்து, உவட்டாமல் இனிக்கின்றதன்றோ ? இவ்வாறு வீரமாமுனிவர் பத்தி மேலீட்டால் பாடிய பாடல்களின் தொகுதியே, ‘ **திருக்காவலூர்க் கலம்பகம்** ’ என்னும் நூலாயிற்று. இக்கலம்பகம் தமிழ் மக்களால் பெரிதும் விரும்பிப் பயிலப்படும் **அழகர் கலம்பகம், மதுரைக் கலம்பகம்** என்னும் தமிழ்க்கலம்பகங்களைப் போன்ற சிறப்புடையது.

பின்னும், முனிவரது அகத்தில் நிறைந்து நின்ற ஆர்வம் அடங்காமையால், அவர் எல்லையற்ற பத்தியோடு அன்னையார்மீது **அடைக்கல நாயகி வெண்கலிப்பா, அடைக்கல மாலை, அன்னை அழுங்கல் அந்தாதி** என்னும் சிற்றிலக்கியங்களை உள்ளங் குழைந்து பாடி மகிழ்ந்தார் ; வேறு சில பாமாலைகளும் அருளிச் செய்தார்.

அவர் அருளிச்செய்த **கருணும்பரப் பதிகமும், தேவாரமும்** பத்திச்சுவை நனி சொட்டுவன ; சைவ சமய குரவர்கள் அருளிய தேவாரப் பதிகங்களைப் போன்ற பெருமை யுடையன. முனிவர் அருளிய பாமாலைகளைக் கிறித்த வப் பெருமக்கள் பத்தி பரவசத்தோடு உள்ளங்கனிந்து உருக்கமாய்ப் பாடி இன்புற்றார்கள்.

**பெரிய நாயகி :**

வீரமாமுனிவர் பல ஆண்டுகள் திருக்காவலூரில் தங்கி அமல மாதாவின் இணையடி மலரை ஏத்திப் பணிந்துவந்த போதிலும், அடிக்கடி வேற்றிடங்களுக் கும் சென்று, ஆற்றல் மிக்க தொண்டுகள் ஆற்றி வரு வது வழக்கம். அவர் ஒரு போது **விருத்தாசலம்** என்று வழங்கும் திருமுது குன்றத்தை அடுத்த **கோணான்குப்பம்** என்னும் ஊரில் சமயப்பணி ஆற்றச் சென்றார். அவ் வூரிலிருந்த இயேசு சபை, பெயரளவிலேயே பணி புரிந்து வந்தது. அவ்வூர்க் கிறித்தவ மக்கள் தொழு வதற்கும் கோவில் இன்றித் தவித்துக்கொண்டிருந்தார் கள். வீரமாமுனிவர் கிறித்தவம் தழைக்கவும், மக்களை ஊக்குவிக்கவும் கருதி அங்கு ஒரு கோவிலைக் கட்டினார்; அந்தக் கோவிலில் தேவ மாதாவின் திருவுருவினை நிறுவினார். அம்மாதா, தமிழ் நாட்டு மாதரைப் போல உடை உடுத்து ஞானமகவாகிய இயேசு பெருமானைக் கையிலேந்தி நிற்கும் திருக்கோலம், கண்டு மகிழ்வதற் குரியதாகும். முனிவர் அவ்வம்மைக்குப் **பெரிய நாயகி** என்னும் பெயரை வழங்கினார். கிறித்தவப் பெரு மக்கள் அவ்வம்மையிடம் ஆழ்ந்த பத்தி கொண்டு பரவிப் பணிந்தார்கள்; ஆண்டுதோறும் விழா நடத்தி வழிபட்டார்கள். வீரமாமுனிவர் அவ்வம்மையின் திரு வருளினாலேயே **தேம்பாவணி** என்னும் தீந்தமிழ்க் காப்பி யத்தைச் செப்பமுறச் செய்து முடித்தார் என்பர்.

அந்தத் திருக்காப்பியம் இன்றும் தமிழ் அன்னையின் மார்பில் வாடாத மாலையாய் விளங்கித் தமிழ் மணமும் கடவுள் மணமும் கலந்து வீசி வருகின்றது.

## ஆவூரார்க்கு ஆபத்து :

தொண்டை நாட்டிலுள்ள ஆவூரில் இயேசு சமயத் திருச்சபை இருந்தது. அவ்வூர்க் கிறித்தவர்களுக்குப் பகைவர்களால் அடிக்கடி பல இன்னல்கள் நேர்ந்து வந்தன. அப்போதெல்லாம் வீரமாமுனிவர் அங்குச் சென்று, அவர்கட்கு உதவுவது வழக்கம். அவர்களும் முனிவரது துணையாலும் அவர் கூறிய ஊக்குமொழி களாலும் அமைதியும் ஆக்கமும் பெற்று வாழ்ந்து வந்தார்கள். ஒரு சமயம் அவ்வூரார்க்கு எதிர்பாராத ஆபத்து ஒன்று நேர்ந்தது : அவ்வூரின் அருகில் மகமதியப் படையினர் பாளையமிறங்கியிருந்தனர். அவர்களை முறியடிப்பதற்காக மதுரை தஞ்சாவூர்ப் படைகள் ஆவூரை அடுத்துக் குவிந்தன. அவ்வூர், போர்க்களமாய்க் காட்சி அளித்தது. அதனால், அவ்வூர் மக்கள் அடைந்த தொல்லைகளுக்கு எல்லையே இல்லை. இந்நிலையில் மகமதியப் படையினர்க்குரிய பசுக்களைப் பகைவர்களோ கள்வர்களோ கவர்ந்து சென்றுவிட்டார் கள். பசுக்களைப் பறிகொடுத்த படைவீரர்கள், ஆவூர் மக்களே ஆக்களைக் கவர்ந்தவர்கள் என்று ஊரார் மீது வீண் பழி சுமத்தினார்கள் ; அவர்கள் ஆயுதந்தாங்கி ஊரினுள் நுழைந்து ஆரவாரித்தார்கள்; கண்ணிற்கண் டோரைக் கதற அடித்தார்கள்; அகப்பட்டோரை அல் லற்படுத்தினார்கள். ஆவூரார் அழுதிரங்கி அபயங் கோரிய போதும், படை வீரர்கள் இரக்கங்காட்டாது, மேலும் ஊராரை விரட்டி விரட்டி அடித்தார்கள். இவ் வாறு படை வீரர்கள் இழைத்த சொல்லொணாக் கொடு மைகளால் துயர் உழந்தார்கள் ஆவூர் மக்கள்.

**படைத்தலைவன் பரிவு :**

அப்போது அவ்வூரில் **மைக்கேல் அடிகள்** என்னும் முதியவர் பணியாற்றி வந்தார். அவர் படை வீரர்கள் கொடுமை இழைப்பதைக் கண்டு செய்வகை அறியாது திகைத்து நின்றார். வீரமாமுனிவருக்குச் செய்தி எட்டியது. எளியோரைக் காப்பது தம் கடமையெனக் கொண்ட வீரமாமுனிவர், 'அழுகுரலோசை கேட்ட அந்தணரைப்போல' விரைந்து வந்தார் ; ஆவூரார் அடைந்த அல்லலைக் கேட்டு நெஞ்சம் புண்ணுற்றார் ; அவர்களுக்கு நேர்ந்த துயரத்தை எண்ணி உள்ளம் உருகினார்; படைவீரர்களைக் கண்டு பேசப் புறப்பட்டார். ஊர்ப்பெருமக்கள் படைவீரர்களின் வெறித் தன்மையை எடுத்துக் கூறி அவர்களிடம் செல்லலாகாது என்று முனிவரைத் தடுத்தார்கள். கடவுள் பணிக்குத் தம்மை உரிமைப்படுத்தியவர்கள் எத்தகைய தீமை நேர்வதாய் இருந்தாலும் அஞ்சாது—மனம் தடுமாறாது—தலை நிமிர்ந்தே நிற்பார்கள். வீரமாமுனிவரும் ஊரார் கூறியதைக் கேட்டு அஞ்சாது—உள்ளம் தடுமாறாது—படை வீரர்களைக் கண்டு பேசப் புறப்பட்டார். நாவிலே தமிழும் நற்றவத்தின் திறமுமுடைய அவர், படை வீரர்களைக் கண்டு, தமக்கே உரிய துணிவோடு, "கள்வர்களோ, பகைவர்களோ செய்த குற்றத்திற்காகக் கரவறியாக் குடி மக்களைத் துன்புறுத்துவது வீரர்களுக்கு முறையாகுமா?" என்று முறையிட்டார். முனிவரது முறையீட்டிற்கு வீரர்கள் செவி சாய்த்தார்களில்லை. அவர்கள் மேலும் ஆவூரார்க்கு அல்லல் விளைவிக்கவே முனைந்து நின்றார்கள். கருவிலே திருவும் கனிந்த திருவருளுமுடைய முனிவர், அப்போதும் உறுதி தளராது, படை வீரர்கள் செய்த கொடுமைகளைச் சுடுசொல்லாலன்றி, இன்சொல்லால் கண்டித்துப் பேசலானார். முனிவர் பேச்சைப் பொருட்படுத்தாத வீரர்கள், "கள்வர்களுக்காகப் பரிந்து பேசும் முனிவரே,

களவு போன எங்கள் ஆக்களைத் தேடித்தாரும்; இன்றேல், எங்கள் தலைவன் முன் வாரும்,'' என்று கூறி முனிவரைப் பிடித்திழுத்து, குற்றவாளியைப் போல வழிநடத்திப் படைத்தலைவன் முன் கொண்டு போய் நிறுத்தினார்கள். சீலமே உருவாய முனிவர் அவன் முன்னே சிறிது நேரம் நின்றுகொண்டிருந்தார். படைத் தலைவன் முனிவரை உற்றுப் பார்த்தான். அவரது கம்பீரமான தோற்றத்தையும், மலர்ந்த முகத்தையும், கருணை பொழியும் கண்களையும், துறவின் தூய்மையை யும் கண்ட அவன், முனிவரிடம் பரிவு மிகக் கொண் டான்; அவரைத் தன்னருகில் அமரச் செய்து, வந்த காரணத்தை வினவினான். ''அன்பினால் அனைவரையும் அடக்கி ஆளலாம்; அன்புக்கு ஆட்படாதவர் யாரு மில்லை,'' என்பதைத் தம் பட்டறிவால் அறிந்திருந்த முனிவர், அகமும் முகமும் மலரப் படைத்தலைவனை நயந்து நோக்கி, படை வீரர்கள் ஊரின் உள்ளே புகுந்து செய்த அட்டூழியங்களை எல்லாம் கல்லும் கனியுமாறு எடுத்து உரைத்தார்,முனிவருடைய உருக்கமான மொழி களை எல்லாம் கனிவோடு கேட்ட படைத்தலைவன், வீரர் களைக் கடிந்துரைத்து, அவர்கள் இழைத்த கொடுமைக ளுக்குக் கழுவாய் காண்பானைப்போல, முனிவருக்குப் பலவகைப் பரிசில்களையும் கொடுத்தனுப்பினான். நிகழ்ந் ததை அறிந்த ஆவூர் மக்கள், அருண்மிகுந்த அடிகளா ரது அஞ்சா நெஞ்சத்தையும், எல்லையற்ற அன்பின் பெருக்கையும் நினைத்து உள்ளம் உருகினார்கள்; அவரை மனமாரப் போற்றி வாயார வாழ்த்தினார்கள்.

**சந்தா சாகிபுவின் நட்பு :**

அக்காலத்தில் தென்னாட்டில் **சந்தாசாகிபு** என்னும் மகமதிய மன்னன் ஆணை செலுத்தி வந்தான். அவன் காட்சிக்கு எளியவனாயும், கடுஞ்சொல் இல்லாதவனாயும்,

நீதி வழங்கும் நேர்மை உடையவனுயும் இருந்தான். அவனுடைய நல்லியல்புகளை நன்கறிந்திருந்த வீரமாமுனிவர், அவனது ஆதரவைப் பெற்ருல், தமிழகத்தில் தம் பணியை இடையூறின்றி இனிது நடத்தலாம் என்று உறுதியாக நம்பினுர்; ஆகையால், அவனைக் கண்டு பேசுவதற்கான வாய்ப்பைத் தேடித்தருமாறு படைத் தலைவனிடம் பணிவாக வேண்டினுர். படைத் தலைவன் அதற்கு இசைந்து, முனிவர் அம்மன்னனைக் கண்டு பேசுவதற்கான வகையில் உதவினுன். முனிவர், படைத் தலைவன் குறித்தவாறு அவன் ஏவல்வழிச்சென்று சந்தா சாகிபுவைக் கண்டார். அம்மன்னன், முன்பே முனிவரின் அறிவாற்றலையும் அன்புள்ளத்தையும் அறிந்து, அவரிடம் அளவளாவும் வாய்ப்பை ஆவலோடு எதிர் பார்த்திருந்தமையால், அவரை அன்புடன் வரவேற்று, ஆதரவோடு பேசினுன். முனிவரும் அவனிடம் உள்ளம் நிறைந்த அன்போடு உரையாடினுர். அடிகளாரிடம் அமைந்திருந்த சாந்தமும் எளிமையுமாகிய பண்புகள் சந்தா சாகிபுவின் மனத்தைப் பெரிதும் கவர்ந்தன. முனிவர் ஆழ்ந்த அறிவும் தேர்ந்த கல்வியும் உடையவராய் இருந்தும், அலை அடங்கிய ஆழியைப்போல அமைதியாக இருப்பதைக் கண்டும் இனிமை ததும்பப் பேசுவதைக் கேட்டும் அம்மன்னன் அகமிக மகிழ்ந்தான்; முனிவரது நட்பை விரும்பி ஏற்ருன். அவர்களது நட்பு அன்பின் வழி வந்த கேண்மையாய் அமைந்தது.

### முனிவர் வேண்டுகோள் :

வீரமாமுனிவர் அடிக்கடி சந்தா சாகிபுவைக் கண்டு உரையாடி மகிழ்வதை வழக்கமாகக் கொண்டார்; அம் மன்னனேடு மனங்கலந்து உரையாடி மகிழ்வதற்கென்று இந்துஸ்தானியையும் பாரசீக மொழியையும் மூன்றே திங்களில் கற்று, அம்மொழிகளில் பேசும் புலமை

பெற்றார். முனிவர், தன்மொழியில் உரையாடியது அவன் சிந்தைக்கும் செவிக்கும் இனித்தது. அவர் உரையாடலைக் கேட்ட அம்மன்னன், எல்லையற்ற இன்பம் எய்தினன். அவன் முனிவர்பால் முன்னையினும் பேரன்பு கொண்டான். அவனது அன்பைப் பெற்ற முனிவர், மகமதிய வீரர்கள் தம் சமயப்பணிக்கு இடையூறு இயற்றாதிருக்க அருளுமாறு அவனை வேண்டினர். முனிவர் உள்ளக் கனிவோடு விடுத்த வேண்டுகோளுக்கு இணங்கிய அம் மன்னன், அவ்வாறே ஆணை செய்தான். அன்று முதல் முனிவரது சமயப்பணி எவ்வித இடையூறுமின்றி இனிது நடந்து வந்தது. கிறித்தவ மதமும் தென்னாட்டில் தழைக்கத் தொடங்கியது.

**பட்டமும் பதவியும்:**

சந்தா சாகிபு, முனிவரின் ஆழ்ந்த படிப்பையும், அறிவின் பரப்பையும், தூய வாழ்வையும் துருவி ஆராய்ந்தான். முனிவரது கம்பீரமான தோற்றமும் கள்ளமற்ற உள்ளமும், அறிவின் ஆழமும், அருள் மொழியும் அவன் உள்ளத்தைக் கவர்ந்தன. முனிவரின் பெருமையை உள்ளவாறு உணர்ந்த அக்காவலன், முனிவருக்கு **'இஸ்மாஸ்தி சந்நியாசி'** என்னும் பட்டத்தைக் கொடுத்துப் பாராட்டினன். 'இஸ்மாஸ்தி சந்நியாசி' என்பது பாரசீக மொழிச் சொற்றொடர். அதற்குத் 'தூய துறவி' என்பது பொருள். மேலும், செம்மனம் படைத்த அம்மன்னன், வீரமாமுனிவரைத் தனக்குத் திவானாக அமர்த்திக்கொண்டான். முனிவரும் அப்பதவி தம் சமயப் பணி சிறப்பதற்கு உறுதுணை புரியும் என்னும் எண்ணத்தால் அதை ஏற்று மகிழ்ந்தார். அவர் அப் பதவியில் அமர்ந்திருந்தபோது, அரசியல் அலுவல்களை ஆற்றப் பல ஊர்களுக்குச் செல்ல நேர்ந்தது. அப்போதெல்லாம் முனிவர், அரசர்க்குரிய வரிசை

களோடு பரிமீது அமர்ந்து பரிவாரங்கள் சூழச் செல்வார். மெய்காப்பாளரான குதிரை வீரர்கள் அவரைத் தொடர்ந்து செல்வார்கள். இவ்வாறு முனிவர் திவான் பதவிக்குச் சிறப்பளித்து வந்தபோது, அவர் புகழ் திசை எட்டும் முழங்கியது. அக்காலத்திலும் முனிவர் தம் சமயக் கடமையை ஆற்ற ஒரு நாளும் தவறியதில்லை; தமிழ்ப்பணியையும் மறந்ததில்லை. முனிவரது உழைப்பின் திறத்தைக் கண்டு உவப்படைந்த சந்தா சாகிபு, தன் பாட்டனுர் பயன்படுத்திய தந்தப் பல்லக்கு ஒன்றை முனிவருக்குப் பரிசளித்ததோடு, ஆண்டு ஒன்றுக்குப் பன்னீராயிரம் ரூபாய் வருமானமுள்ள **பூக்குளம், மால்வை, அரசூர், நல்லூர்** என்னும் நான்கு ஊர்களையும் உவந்தளித்தான். அம்மன்னன் தென்னுட்டில் நல்லாட்சி நடத்திய காலம் வரையில்—1740 ஆம் ஆண்டு வரையில்—வீரமாமுனிவர் அமைச்சர் பதவியில் அமர்ந்திருந்ததோடு, தம் சமயப்பணியையும் தமிழ்ப் பணியையும் இனிது நடத்தி வந்தார்.

1740 ஆம் ஆண்டில் **நாதர் சிங்கு** தலைமையில் மராத்தியர் படையெடுத்து வந்து, திருச்சிராப்பள்ளியை முற்றுகையிட்டனர். சந்தா சாகிபு சீற்றமுற்றுப் பெரும் படையோடு சென்று அவர்களை எதிர்த்துப்போரிட்டான். இறுதியில் சந்தா சாகிபு தோல்வியடைந்து கைதியாக்கப் பட்டான். அக்காவலனுக்கு நேர்ந்த கதியை அறிந்த வீரமாமுனிவர், 'கன்றை இழந்த பசுவைப் போல'க் கவலையால் கண்ணீர் வடித்தார். சிறிது காலம் அவர் கரந்துறையவும் நேர்ந்தது.

# 4. தமிழ்ப்பணியும் தேம்பாவணியும்

## தமிழ்ப் பணி :

> "இருந்தமிழே, உன்னுல் இருந்தேன், இமையோர்
> விருந்தமிழ்தம் என்ருலும் வேண்டேன்!"

என்று தமிழ்ச்சுவை கண்ட பெருமகனுர் ஒருவர் தம் தமிழ் ஆர்வத்தை வெளிப்படுத்தினுர். விண்ணவர் அளிக்கும் விருந்தினும்—அமிழ்தினும்—இன்பம் பயக்கும் தமிழ் மொழி, உயிர்க்கு உறுதி அளிப்பதிலும் தலை சிறந்தது என்பது அவர் கருத்து. வானவர் விருந்து அமிழ்தத்தையும் வேண்டாவென வெறுத்துத் தமிழ் அமுதத்தையே விரும்பும் அறிஞர் பலர், தமிழகத்தில் இன்றுமுளர். தமிழ் மொழி இலக்கிய இலக்கணங்களால் சிறந்து, எண்ணம், பேச்சு, எழுத்து என்னும் மூன்று நிலைகளிலும் இன்பம் பயக்க வல்லது. இந்தச் சிறப்பியல்பினுலேயே, அஃது அயல்நாட்டினரைக் கூடத் தன்பால் ஈர்த்துத் தமிழரென வாழச்செய்த பெருமைக்கு உரியதாய் மிளிர்கின்றது. வீரமாமுனிவரோடு கப்பல் ஏறிக் கடல் கடந்து பாரத நாட்டுக்கு வந்து, மலையாள நாட்டில் சமயப்பணி ஆற்றச் சென்ருர் **ஆர்நால்டு**

என்னும் அடிகளார். அவரை அம்மொழி ஆட்கொள்ள வில்லை. அவர் மலையாள மொழியைக் கற்று மாண்பு மிகு காவியம் செய்து புகழ் பெறவில்லை. ஆனால், அவரோடு வந்து தமிழ் வளநாடு புகுந்த பெஸ்கி அடிகளாரைச் செந்தமிழ் மொழி தன் இனிய நீர்மையால் தன்பால் ஈர்த்ததோடு, அவரைத் தமிழ் முனிவராகவே வாழச் செய்தது. அவரும் தம் உடல் பொருள் ஆவி அனைத்தையும் தமிழகத்திற்கே உரிமைப்படுத்தியதோடு, சிந்தைக்கினிய செந்தமிழை விரும்பிப் பயின்று, அம் மொழியில் தேனினுமினிய தெவிட்டாத இலக்கியங்களை ஆக்கிப் புகழ் பெற்றார். அவர் பலவகைக் கடமைகளுக் கிடையே அகராதி, காவியம், சிற்றிலக்கியம், உரைநடை, மொழிபெயர்ப்பு என்னும் பலவேறு துறைகளில் நூல்களை இயற்றித் தண்டமிழ்ச்சோலையை வளப்படுத்தினார். அவர் தமிழ் மொழிக்குச் செய்த தொண்டு ஈடுமெடுப்பு மற்றது; என்றும் மறவாது போற்றற்பாலது. அவர் ஆற்றிய தமிழ்ப்பணியின் விரிவைப் புலவர் பெருந்தகை யார் ஒருவர் தம் கவியில் பின் வருமாறு தொகுத்துத் தந்துள்ளார் :

“ பிங்கலமும் திவாகரமும் நிகண்டுந் தேடிப்
 பேரலுப்புக் கொள்ளாத பெற்றி காண
இங்கெவரும் நினையாத பொழுதே பெஸ்கி
 எழிலியதோர் அகராதி இயற்றித் தந்தான் ;
தங்குதடை யில்லாமல் எவரும் கற்பான்
 சன்மார்க்க போதனைகள் தவரு தோங்க
அங்கனியும் நல்லமுதும் பாலும் தேனும்
 அமைதருதேம் பாவணிநூல் அளித்தான் சிங்கம்.

“ அந்தாதி மாலைஉலா வசன நூல்கள்
 அம்மானை அருள்புலவர் ஆங்காங் குண்டு;
பிந்தாத குணமுடைய அவரெல் லோரும்
 பின்பற்று வழிவகைகள் பெய்த வாறு

**சிந்தாத நெறிதெளிந்த இவனே முன்னூல்**
**செப்பியநூல் அத்தனையும் செய்து வைத்தான்;**
**எந்தாதை திருநாளைப் பெருநா ளாக**
**எவர்கொள்ளார் எவர்விள்ளார் இகத்தில் அம்மா !"**

வீரமாமுனிவர் ஆற்றிய அருந்தமிழ்ப் பணியின் பயனாகத் தமிழ் அன்னை அகராதி முதல் அம்மானை ஈறாக எத்தனையோ நூல்களைப் பெற்றுள்ளாள்! அவரது பணியால் தமிழ் மொழி வளம் பெற்று வளர்ந்தது என்பதற்கு எட்டுணையும் ஐயம் இல்லை.

இத்தாலி நாட்டில் எல்லாக் குழந்தைகளையும் போலவே ஒரு குழந்தையாய்ப் பிறந்த அடிகளார், அந்நாட்டில் முப்பது ஆண்டுகள் வாழ்ந்து பலகலைகளையும் கற்றுத் தேர்ந்தார்; பின்னர்த் தமிழகம் போந்து முப்பத்தேழு ஆண்டுகள் வாழ்ந்தார். இந்தக் குறுகிய காலத்தில் அவர் தமிழைக் கற்றுத் தேர்ந்து, ஆக்கித் தந்த நூல்களையே நாம் இங்குக் கண்டோம். அவர் ஆற்றிய இணையற்ற இந்தத் தமிழ்ப்பணியே தமிழ் இலக்கிய வரலாற்றில் அவருக்கு என்றும் அழியாத இடத்தைத் தேடித்தந்துள்ளது. ஆயினும், அவர் கூம்பா மலர்களால் தொடுத்துச் செய்த தேம்பாவணியே தமிழ் அன்னையின் கழுத்தில் என்றும் வாடாத ஒப்பற்ற மாலையாய்த் திகழ்கின்றது. அம்மாலையை அணிந்தமையால் தமிழ் அன்னை அரியாசனத்தில் எத்திசையும் புகழ் மணக்கக் கொலு வீற்றிருக்கின்றாள். அயல்நாட்டுப் பெருமகனார் ஒருவர், தன்னை விரும்பிப் போற்றியதோடு, தீஞ்சுவை மிக்க காப்பியம் ஒன்றையும் செய்து தனக்குச் சூட்டி மகிழ்ந்தார் என்பது தமிழ் அன்னைக்குத் தனி இன்பம் தருவதன்றோ ! இப்பெருங்காப்பியத்தை இயற்றிய பேராற்றலாலும் பெரும்புகழாலுமே வீரமாமுனிவரது தமிழ்ப்பணி தமிழகம் போற்றும் தகைமைசால் பெரும்பணியாய்ச் சிறந்துயர்ந்தது. வீரமாமுனி

வரும் இளங்கோவடிகள், கம்பர் போன்ற காவியப் புலவர் களோடு வைத்தெண்ணத் தக்க பெருமை பெற்றதோடு, தமிழ் இலக்கிய வரலாற்றிலும் நிலைத்த ஓர் இடத்தைப் பெற்று விளங்குகிறார்.

**காப்பியம் :**

மக்கள் வாழ்க்கையில் பெறும் இன்பங்களுள் காப் பிய இன்பமும் ஒன்றாகும். அவ்வின்பத்தைத் தலை சிறந்த இன்பம் என்றுகூடக் கூறலாம். காப்பியங் களைப் படித்துப் பாட்டின்பத்தை நுகராதவர், வாழ்க் கையில் ஒரு பேரின்பத்தை இழந்தவராகவே கருதப் படுவர். தமிழ் மொழியில் எழுகடலும் கலந்த பெருங் கடல் போன்ற காப்பியங்கள் பலவுள. அவற்றில் மூழ்கித் திளைப்போர் தனி இன்பம்—தெவிட்டாத இன்பம்—துய்ப்பர் என்பது உறுதி.

காப்பியம் என்பது தன்னிகரில்லாத் தலைவன் ஒருவனது வாழ்க்கையைக் கற்போர் உள்ளத்தில் இன்ப ஒளி ஊடுருவுமாறு, அணிநலம் தோன்றப் புனைந்துரை களோடு தொடர்நிலைச் செய்யுள்களால் பாடப்படுவ தாகும். இது வாழ்த்து, வணக்கம், செயப்படுபொருள் ஆகியவற்றை முன்னே கொண்டு, மலை, கடல், நாடு, நகர் என்னும் இப்பகுதிகளையும், பெரும்பொழுது சிறுபொழுது என்னும் காலப்பகுதிகளையும் சிறப்பித்து, ஞாயிற்றின் தோற்றம், திங்களின் உதயம் ஆகியவை பற்றிய வருணனைகளோடு, திருமணம், முடி சூட்டு, புனல் விளையாட்டு, பொழில் விளையாட்டுப் போன்ற வற்றைச் சுவைபட அமைத்து, தூது, போர், வெற்றி ஆகியவற்றை எடுத்துக் கூறி, **சருக்கம்**, **இலம்பகம்** போன்ற பிரிவுகளோடு ஒன்பான் சுவைகளும் சுரக்கப் பாடப்படும் கவிதைகளின் தொகுப்பாகும். தமிழில் இதைப் 'பொருள் தொடர்நிலைச் செய்யுள்' என

வழங்குவர். காப்பியம், கதைச்செய்யுள், அகலகவி, தொடர்நிலைச்செய்யுள் என்பன இதன் வேறு பெயர்கள். இது பெருங்காப்பியம் சிறுகாப்பியம் என இருவகையாய் வழங்குகிறது. இவ்விரு பிரிவிலும் இடம் பெருத காப்பியங்களும் உண்டு.

## பெருங்காப்பியம்

காப்பிய இலக்கணங்களோடு, அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு உறுதிப் பொருள்களையும் உணர்த்துமாறு இயற்றப்படுவது பெருங்காப்பியமாகும். தமிழில் பெருங்காப்பியங்கள் ஐந்தெனப் பேசுவது பண்டுதொட்டு வழக்கமாய் உள்ளது. 'நெஞ்சை அள்ளும் சிலப்பதிகாரமே' தமிழில் தோன்றிய முதற் பெருங்காப்பியமாகும். இதனைத் தமிழுலகிற்குத் தந்தருளிய பெருமை **இளங்கோவடிகள்** என்னும் சேர முனிவருக்கு உரியதாயிற்று. அவரைத் தொடர்ந்து **சீத்தலைச்சாத்தனுர்** என்பவர், **'மணிமேகலை'** என்னும் காப்பியத்தை இயற்றினுர். இவற்ருேடு **சீவகசிந்தாமணி, குண்டலகேசி, வளையாபதி** என்னும் மூன்று காப்பியங்களையும் சேர்த்து ஐம்பெருங்காப்பியங்கள் என வழங்குவர். இவ்வைம்பெருங்காப்பியங்களையும் தமிழன்னை ஐவகை அணிகளெனப் பூண்டு, திருக்குறளாகிய செங்கோலைத் தாங்கி, வீறு பெறக் கொலுவீற்றிருப்பாளெனக் கவினுறப் பாடிக்களித்தார் கவிஞர் சுத்தானந்த பாரதியார்.

## சிறுகாப்பியம்

காவிய இலக்கணம் முழுமையும் அமைய அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு உறுதிப் பொருள்களுள் ஒன்ருவது பலவாவது குறைந்து வரப்

பாடப்படுவது சிறுகாப்பியம் எனப்படும். தமிழில் **சூளாமணி, நீலகேசி, உதயகுமார காவியம், யசோதர காவியம், நாககுமார காவியம்** என்பன ஐஞ்சிறு காப்பியங்கள் என வழங்கப்படும்.

## பிற காப்பியங்கள்

சேக்கிழார் அருளிய பெரிய புராணமும், கம்பர் இயற்றிய இராமாயணமும், வில்லிபுத்தூரார் பாடிய பாரதமும், முற்கூறிய பெருங்காப்பியம் சிறு காப்பியம் என்னும் இரு பகுப்புள்ளும் இடம் பெருது, தனி நின்று தமிழ் மொழியின் எழிலுக்கும் ஏற்றத்திற்கும் எடுத்துக் காட்டாய் விளங்குகின்றன. இத்தகைய அருமை சான்ற காப்பியங்களோடு வைத்து எண்ணத்தக்க பெருமையுடைய காப்பியமே வீரமாமுனிவர் அருளிச்செய்த **தேம்பாவணி.** இஃது அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நாற்பொருளையும் நயம்பட விரித்துரைப்பதால், பெருங்காப்பிய வரிசையில் வைத்தெண்ணத்தகுந்த பெருமையுடையதே என்பதில் எட்டுணையும் ஐயமில்லை.

## தேம்பாவணியின் தோற்றம் :

வீரமாமுனிவர் கருவிலே திருவுடையவர்; கவிதை உள்ளம் வாய்க்கப்பெற்றவர்; தமிழ்க் காப்பியங்களை எல்லாம் கற்றுத் தேர்ந்து, அவற்றின் சிறப்புகளைச் சீரணித்துத் தமவாக்கிக்கொண்டவர். அன்றியும், அவர் **ஹோமர், தாந்தே, வர்ஜில்** போன்ற பிற நாட்டுப் பெருங்கவிஞர்களின் பனுவல்களிலெல்லாம் மூழ்கித் திளைத்து இன்சுவை நுகர்ந்தவர். இவ்வாறு தமிழ் மொழியிலும் பிற மொழிகளிலும் தாம் பெற்ற இன்பத்தை மற்றவர்கட்கும் வாரி வழங்குதல் வேண்டும் என்னும் ஆர்வத்தால் அவர் உந்தப்பட்டார். அருள் உள்ளம் படைத்தவர், 'யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்,' என்று எண்ணுவது இயல்புதானே!

வீரமாமுனிவரின் உள்ளம் இலக்கிய இன்பத்தின் கொள்கலமாய் இருந்த போதிலும், சமய தத்துவ உணர்வே அவர் உள்ளத்தில் மேலோங்கி நின்றது. அவ்வுணர்வே அவருக்கு உயிராயும் இருந்தது. 'சமயத்தைப் பரப்பவே நாம் தமிழகம் வந்தோம்,' என்பதை அவர் என்றும் மறந்ததில்லை. எனவே, அவர் கிறித்தவ சமய உண்மைகளை இலக்கிய இன்பம் ததும்ப மக்களிடையே பரப்புவதற்கான வழியை ஆராய்ந்தார்.

தமிழ் மொழிக்கும் சமயத்திற்கும் தொன்று தொட்டே மிக நெருங்கிய தொடர்பு இருந்து வருகின்றதன்றோ ? தொல்காப்பியர் காலத்திற்கும் பன்னூறு ஆண்டுகட்கு முன்னரே பண்பட்ட தமிழ் மொழி, சமய நெறியை வளர்த்து வந்த வரலாற்றைத் தமிழ் நூல்கள் ஒளிவு மறைவு இன்றி எடுத்துரைக்கின்றன. சங்க இலக்கியங்களில் தமிழும் சமயமும் பின்னிப் பிணைந்து வளர்ந்து வந்த உண்மையை இலக்கியப் பயிற்சியுடையார் எல்லாருமறிவர். எனவே, வாழையடி வாழையாய்ச் சமயத்தைத் தன் மூச்சாகக் கொண்டுவரும் தமிழ் மொழி மூலமாகவே தம் சமய உண்மைகளையும் பரப்புதல் வேண்டும் என்று வீரமாமுனிவர் தீர்மானித்தார். பத்தி நெறியைப் பரப்புவதற்குத் தமிழ் மொழியைப்போலப் பண்பட்ட மொழி வேறில்லையன்றோ? ஆதலாலேதான், முனிவர் தம் சமய உண்மைகளைத் தமிழ் மொழி மூலமாக வெளியிட வேண்டும் என்று முடிவு கட்டினர்.

இந்த முடிவுக்கு வந்த அவர், பெருங்காப்பியம் ஒன்று செய்யத் துணிந்ததற்கு வேறு காரணமும் இருந்திருத்தல் வேண்டும். தமிழகத்தில் சமயத் தொண்டாற்றிய பௌத்த சமணத் துறவிகள் தங்கள் மதக் கொள்கைகளைத் தமிழ்க் காப்பியங்கள் மூலமாகவே

பரப்பி வந்தார்கள். சமணத் துறவியாரான திருத்தக்க தேவர், **சீவகசிந்தாமணி** என்னும் செந்தமிழ்க் காப்பியத்தின் மூலம், தம் சமயக் கருத்துகளை வெளியிட்ட வரலாற்றை வீரமாமுனிவர் அறியாதிருப்பாரா! மேலும், தமிழகத்தில் ஒவ்வொரு சமயத்தினருக்கும் ஒவ்வொரு காப்பியம் இருத்தலையும் அவர் அறிந்தார். பௌத்தர்கள் மணிமேகலையையும், சைவர்கள் பெரிய புராணத்தையும், வைணவர்கள் இராமாயணத்தையும், இசுலாமியர் சீறாப் புராணத்தையும் போற்றிப் பயிலக் கத்தோலிக்கர்கள் மாத்திரம் அவ்வாறு பயில்வதற்கு ஒரு காப்பியமின்றி இருத்தலை எண்ணி அவர் குறைபட்டார். அக்குறையை எவ்வாறேனும் போக்குதல் வேண்டும் என்னும் உணர்ச்சி, அவர் உள்ளத்தை ஆட்கொண்டது. கவிஞர்கள் கொண்ட உணர்ச்சி வீணாகுமா ?

வீரமாமுனிவர் உள்ளம் இயேசு நாதரின் வளர்ப்புத் தந்தையாராகிய **சூசை மாமுனிவர்** வரலாற்றில் ஈடுபட்டது. சூதேயா நாட்டினரான சூசை மாமுனிவர் தவமும் நீதியும் படரும் கொழுகொம்பாய் விளங்கிய தாவீது மன்னரின் வழியில் வந்தவர் ; வரங்களால் உயர்ந்தவர். அவர் இறைவனிடம் பெற்ற வரங்கள் கடல் போன்றவை. இவ்வாறு வரங்களால் உயர்ந்து வையத்தில் வாழ்வாங்கு வாழ்ந்த சூசை மாமுனிவரின் வாழ்க்கை வீரமாமுனிவரின் மனத்தைக் கவர்ந்தது. மேலும், முனிவரின் இயற்பெயர் சூசை (Joseph) என்பதல்லவா ? எனவே, தம் பெயரின் முதல்வரான சூசை முனிவர் வரலாற்றில் அவர் உள்ளம் ஈடுபட்டது இயல்பேயன்றோ ? அன்றியும், அம்முனிவர் வரலாற்றின் இடையிடையே கிறித்து நாதரின் வரலாறு கலந்து வருமல்லவா ? இன்ன பல காரணங்களால் சூசை மாமுனிவர் வரலாற்றில் ஈடுபாடு கொண்ட வீரமாமுனிவர், அவர்

வரலாறு வாயிலாக அறம் முதலிய நல்லுணர்வுகளையும் சமய உண்மைகளையும் மன்பதைக்கு உணர்த்த வேண்டும் என்னும் ஆசையால், தாம் கற்ற காப்பியங்களின் பெருமைகள் எல்லாம் ஒருங்கே தோன்றுமாறு சூசையப்பர் என்னும் வளனுர் வரலாற்றைச் செவிக்கினிய செஞ்சொற்பாக்களால் தெவிட்டாத தெள்ளமுதமாக்கித் தமிழ்க்கலை நுட்பங்களெல்லாம் பொருந்திய ஒரு கிறித்தவக் கலைக்கோயிலாக்கித் தமிழ் உலகிற்கு உதவினுர். அவரது ஆசையில் மலர்ந்த காப்பியமே தேம்பாவணியாம் என்பதை,

**"சூசையுற் றனவ ரங்கட் டுய்கடல் கடக்க வில்லால்**
**ஓசையுற் ெறழுக மிர்தம் உடைகட லென்ன நண்ணிப்**
**பூசையுற் றதனை நக்கப் புக்கென வுளத்தைத் தூண்டும்**
**ஆசையுற் றூம னேனும் அருங்கதை யறைய லுற்றேன்.[1]**

என்றும், 'விருப்பம் தூண்டத் துணிந்த ணிந்தேன்' என்றும் அவரே கூறியுள்ளமையால் உணரலாம். கவிச் சக்கரவர்த்தியாராம் கம்பரும் இராமபிரானிடம் கொண்ட ஈடுபாட்டினுல் எழுந்த ஆசையாலேயே தாம் இராமன் கதையைப் பாடியதாகக் கூறுகிருர் :

**"ஓசை பெற்றுயர் பாற்கடல் உற்றொரு**
**பூசை முற்றவும் நக்குபு புக்கென**
**ஆசை பற்றி யறையலுற் றேன்மற்றிக்**
**காசில் கொற்றத்து இராமன் கதையரோ."**

என்பது கம்பரின் பாடல். பெருங்கவிஞர்கள் எந்தச் சூழ்நிலையில் வாழ்ந்தாலும், அவர்கள் உள்ளுணர்ச்சியால் ஒத்து விளங்குவது இயல்பு போலும்! இவ்வாறு

---

1. தேம்பா. பாயிரம். 4

ஒத்து விளங்கும் கவிஞர் உள்ளங்களை ஒப்பிட்டு நோக்கும் தமிழ் நெஞ்சங்கள் களிப்புக் கடலில் மூழ்கித் திளைக்கும் என்பது உறுதி.

கம்பர் ஆரிய மொழியைக் கற்றுணர்ந்தவர்; கன்னித் தமிழின் ஆழங்கண்டவர். அவர் சார்ங்கம் உதைத்த சரமழை போலக் கவி மழை பொழிந்தார். வீரமாமுனிவரோ, ஆரியத்தோடு அருந்தமிழையும் இத்தாலியம் முதலிய மேனாட்டு மொழிகள் பலவற்றையும் ஆராய்ந்து கற்றவர். அவர் கடல் மடை திறந்தாற் போன்று கவி பாடினார். இவ்விருவரும் அருளால் செய்த காப்பியங்கள் இரண்டும் தமிழன்னை பெற்றுள்ள நல்லணிகளோடு சேர்ந்து பொன்னணிகளாய் என்றும் பொலியும் என்பது உறுதி.

வீரமாமுனிவர் அருளிச் செய்த தேம்பாவணியை அயல் நாட்டினரான தமிழ்ப்புலமை சான்ற சாமியார் ஒருவர், 1726ஆம் ஆண்டில் திருத்தமாகப் பதிப்பித்து வெளியிட்டார். அன்று முதல் இன்று வரையில் தேம்பாவணி தமிழ்க்காப்பிய உலகில் நிலையான ஓர் இடத்தைப் பெற்று, படிப்பவரின் ஊனையும் உயிரையும் உருக்கிப் பேரின்பக் கடலிலும் பெருவியப்பிலும் ஆழ்த்தி வருகின்றது.

**பெயர்க்காரணம் :**

வீரமாமுனிவர் தாம் பாடிய காவியத்திற்குத் **'தேம்பாவணி'** என்று பெயரமைத்தார். அதை அவர் 'வேரியங்கொடியோன் காதை தேம்பாவணியெனப் பிணித்தல் செய்வாம்' என்றும், 'கன்னித்துணைவி களித்திசைத்த தேம்பாவணி இ∴து' என்றும் கூறுமாற்றால் உணரலாம். முனிவர் தாம் அருளிச்செய்த காப்பியத்திற்கு இப்பெயரமைத்த காரணத்தை ஊன்றி

உணர்தல் வேண்டும். பாட்டுடைத் தலைவரான சூசை மாமுனிவருக்குத் 'தேம்பாவணி' என்பது இறைவனால் சூட்டப்பட்ட பெயர் என்பதை வளன் சனித்த படலத்தில் வீரமாமுனிவர் தெளிவுறக் கூறுகின்றார். சூசை பிறந்தபோது அவர் அன்னையாரான **நீப்பி** என்பார், குழந்தையைக் கையிலேந்தி, 'வளன் என்னும் பெயரோய், நீ நல்ல நெறியில் நிலைத்து வளர்வாயாக!' என்று வாழ்த்தி இறைவனை வணங்கினார். அப்போது, 'ஆடா நிலையறத்து என்மார்பில் தேம்பாவணியாவான் வாடா அருள் மகன்,' என்று ஆண்டவன் அருட்குரல் ஒன்று ஆகாயத்தில் எழுந்தது. அக்குரலைக் கேட்ட உறவினர்கள் குழந்தையைத் 'தேம்பாவணியே!' என்று விளித்து வாழ்த்தினார்கள். இதனால், சூசைக்கு இறைவன் உவந்தளித்த பெயர் தேம்பாவணி என்பது தெரிகிறது.

இது சீவக சிந்தாமணி என்னும் நூலின் பாட்டுடைத் தலைவனுக்குச் **'சீவகன்'** என்னும் பெயர் அமைந்த வரலாற்றோடு ஒத்து விளங்குகிறது.

சச்சந்த மன்னன் மனைவி **விசயை** என்பாள் மயிற்பொறியிலேறி விண்ணிற்பறந்து, சுடுகாட்டில் இறங்க, நிறைசூலியான அவளுக்கு அங்கு ஒரு குழந்தை பிறந்தது. சுடுகாட்டில் தனியே கிடந்த அக்குழந்தையைக் **கந்துக்கடன்** என்னும் வணிகன் கையில் எடுக்க, அக்குழந்தை தும்மிற்று. அப்போது தெய்வம், 'சீவ! சீவ!' என்று குழந்தையை வாழ்த்திற்று. அதைக்கேட்ட கந்துக்கடன் குழந்தைக்குச் **'சீவகன்'** என்று பெயரிட்டான் எனச் சீவகசிந்தாமணி கூறும்.

இதனால், வீரமாமுனிவர் பாட்டுடைத் தலைவரின் பெயரையே தம் நூலுக்கு இட்டு வழங்கினார் என்பது தெளிவு.

மணிமேகலை வரலாறு கூறும் நூல் '**மணிமேகலை**' என்று பெயர் பெற்றாற்போன்று, '**தேம்பாவணி**' என்னும் திருப்பெயர் கொண்ட வளனுர் வரலாறு கூறும் நூல் **தேம்பாவணி** என்று பெயர் பெற்றது பொருத்தமே யாகும். இங்குச் சூசை மாமுனிவரை இறைவனின் வாடாத மாலையாகப் புனைந்துரைக்கும் வீரமாமுனிவரின் புலமை உணர்வு நாம் அறிந்து போற்றற்குரியது. அன்றியும், தம் சிந்தையைக் கவர்ந்த செந்தமிழ்க் காப்பியமான சிந்தாமணிக்குப் பெயர் அமைந்தாற் போன்று, தாம் அருளிச்செய்த காப்பியத்திற்கும் வீரமா முனிவர் பெயர் அமைத்தார் என்று கொள்வதும் பொருத்தமேயாகும்.

இனிப் புலவர் பெருமக்கள் தேம்பாவணி என்பதைக் காரணப் பெயராகக் கொண்டு, 'தேம்பா + அணி' எனப் பிரித்து வாடாத மாலை என்றும், 'தேன் + பா + அணி' எனப் பிரித்துத் தேன் போன்ற பாக்களின் வரிசை என்றும் பொருள் கூறி நூற்பெயர்க்காரணம் கூறுவர். இக்காவியம் தமிழ்மக்கள் என்றும் போற்றிப் பயிலு மாறு வாடாத மாலையாய் விளங்க வேண்டும் என்னும் விருப்பத்தால் புலவர்கள் இவ்வாறு பொருள் விளக்கம் செய்கின்றார்கள் போலும்! தேம்பாவணி என்றும் வாடாத மாலையாய் எத்திக்கும் மணம் வீசி நிற்கும் என் பதற்கு ஐயமுமுளதோ!

**முதனூல் :**

இராமகாதையைப் பாடிய கம்பர் வான்மீகத்தை முதனூலாகக் கொண்டாற்போலத் தேம்பாவணியைப் பாடிய வீரமாமுனிவர் '**மரி அகிர்தாள்**' என்னும் கன்னிப் பெண் எழுதிய சூசை மாமுனிவர் வரலாற்றை முதனூ லாகக் கொண்டார். இசுபானிய நாட்டில் **ஆகிருதம்**

என்னும் நகரில் 1665ஆம் ஆண்டில் மரி அகிர்தாள் என்னும் கன்னிப்பெண் வாழ்ந்திருந்தாள். அவள் தன் கன்னிமையைக் கர்த்தர் திருப்பணிக்கே அர்ப் பணித்த புனிதவதி. அவள் இறைவனைப் புதல் வனுய்ப் பெற்ற தேவமாதாவை வழிபட்டுப் புனித மடைந்தாள். தேவமாதா அவளிடம் அன்பு கொண்டு, தன் நாயகராகிய வளனார்வரலாற்றை அவளுக்கு உரைத் தருளி, அதனை ஒரு நூலாக எழுதுமாறு பணித்தாள். அப்பணியைத் தலைமேற்கொண்ட மரி, வளனார் வரலாற்றை ஒரு நூலாக எழுதினாள். அந்நூலே தேம் பாவணியின் முதனூலாய் அமைந்தது என்பர். வீரமா முனிவர் அந்நூலை முதனூலாகக் கொண்டிருந்த போதிலும், அதனை அப்படியே மொழி பெயர்க்கின்ற இயந்திர வேலையைச் செய்திரார் என்பது உறுதி. கம்பர் வான்மீகத்தை முதனூலாகக் கொண்ட போதிலும், அதனை அப்படியே மொழிபெயர்க்காது, தமிழகமரபிற்கு ஏற்றவாறு மாற்றியும் திருத்தியும் புதுக்கருத்துகளைப் புகுத்தியும் இராமாவதாரத்தைப் பொலிவுறச் செய்தார் என்பர். இது காப்பிய நெறி ; பெருங்காப்பியம் செய்யும் உலகக் கவிஞர் அனைவர்க்கும் உரிய நெறி. கிரேக்கப் புலவர் ஹோமரும், இலத்தீன் புலவர் வர்ஜிலும், ஆங்கிலப் புலவர் மில்டனும் இந்நெறி நின்றே காப்பியம் செய்து புகழ் பெற்றனர். இப்புலவர் பெருமக்களுடைய நூல்களில் எல்லாம் மூழ்கித்திளைத்து அவற்றின் அழகை எல்லாம் ஆரப்பருகி மகிழ்ந்த வீரமாமுனிவர் அந்நெறி யிலிருந்து விலகுவாரா? அவர் ஆகிருத நகரத்து மரி என்னும் கன்னிப்பெண் எழுதிய சூசை மாமுனிவர் வரலாற்றை முதனூலாகக்கொண்டபோதிலும், விவிலிய வேதத்தில்வரும் பல வரலாறுகளையும் இடத்திற்கேற்ற வாறு இணைத்தும், புதுக்கருத்துகளைப் புகுத்தியும், சிந்தையைக் கவரும் சந்தங்களோடு வளனார் வர லாற்றைச் செவிக்குத் தேனெனத் திருத்தி அமைத்தார்.

இதனாலேயே தேம்பாவணி கலை எழில்மிக்க காப்பிய மாய்ப் புதுமைப்பொலிவுடன் எல்லார் உள்ளங்களிலும் இடம் பெற்று விளங்குகின்றது.

## நூல் அமைப்பு :

வீரமாமுனிவரது தேம்பாவணி என்னும் செந்தமிழ்க் காப்பியம் மூன்று காண்டங்களையும், முப்பத்தாறு படலங்களையும், 3615 பாடல்களையும் கொண்டு விளங்குகின்றது. இந்த அளவில் நூல் அமைந்தமைக்கு ஆசிரியரே ஓர் அமைதி காண்கின்றார். 'வேரியங் கொடியோன்' என்று வீரமாமுனிவரால் போற்றப்பட்ட சூசை மாமுனிவருக்கு ஒளி முடி சூட்டியபோது, அவர் கையிலுள்ள நறுமணிக் கொடியிற்பூத்த மலர்கள் 3615 என்றும், அம்மலர்களால் தொடுக்கப்பட்ட மாலைகள் 36 என்றும் கணக்கிட்டு, அதற்கு ஏற்பவே நூலை அமைத்ததாக முனிவர் அமைதி கூறுகிறார்.

**" வான்மேல் மகுடம் புனை நாளில்**
**வரமா தவன்றன் கொடிபூத்த**
**தேன்மேல் தளம்புஆ றறுநூறு**
**சேர்ந்த மூவைந் திருமணிப்பூ**
**நூன்மேல் முறைநை யாத்தொடுத்த**
**நுண்மண் ணுருறு அணியிதென**
**மீன்மேல் விளங்கும் வளன்பதத்தில்**
**விரும்பிச் சாத்தி மீண்டுரைத்தார். "[1]**

என்று முனிவரே கூறியிருத்தலால், இந்நூல் முப்பத்தாறு படலங்களாக இயற்றப்பட்டது என்பது தெளிவாகிறது. ஆனால், இன்று தேம்பாவணி மூன்று காண்

1. தேம்பாவணி. முடிசூட்டு படலம், 131

டங்களாகப் பகுக்கப்பட்டு வழங்குகின்றது. அக்காண்டங்களுக்குப் பெயர்கள் காணப்படவில்லை. ஆகையால், அப்பகுப்பு முறையை ஏற்படுத்தியவர் முனிவரா பிறரா என்னும் ஐயம் எழுகின்றது. நுவலும் பொருள் பற்றிப் படலங்களுக்குப் பெயர் அமைத்த வீரமாமுனிவர் காண்டங்களுக்குப் பெயர் அமையாமையாலும், நூல் அமைப்புக்கு அமைதி கூறும் இடத்தில் காண்டங்களைப்பற்றிக் குறிப்பிடாமையாலும் தேம்பாவணியை மூன்று காண்டங்களாக வகுத்தவர் வீரமாமுனிவர் அல்லர் என்பது உறுதியாகிறது. எனவே, நூலைப் பதிப்பித்தவர்கள் முப்பத்தாறு படலங்களையும், முறையே காண்டத்திற்குப் பன்னிரண்டு வீதம் மூன்று காண்டங்களாக வகுத்து அமைத்தார்கள் போலும் !

**நூற்பொருள் :**

"ஆரிய வளன்றன் காதை அறம்முதல் விளங்கச் சொல்வாம்," என்று தேம்பாவணியைத் தொடங்கும் வீரமாமுனிவர், முதற்காண்டத்தில் பாயிரம் பகர்ந்து, நாட்டுப் படலம், நகரப்படலம் பாடி, பாட்டுடைத் தலைவரான வளனுர் வரலாற்றைக் கூறுகின்றுர். சூதேயா நாட்டில் எழில் மிக்க எருசலேம் நகரில் **தாவீது** என்னும் மன்னன் அறநெறி வழுவாது ஆட்சி புரிந்து வந்தான். அவன் **கோலியாத்து** என்னும் கொடியவனைக் கொன்று பெற்ற வெற்றிப் புகழால், மன்னன் மகளை மணந்து, அரசுரிமை பெற்றவன். இந்த மாண்பு மிக்க மன்னனது வழியில் வந்த **சகோபு** என்பவர், **நீப்பி** என்னும் மங்கை நல்லாரை மணந்து, மனையறம் நடத்தி வருகின்றுர். அவர்களுக்கு அருமை மைந்தராய்ப் பிறக்கின்றுர் சூசை. அவர் பிறந்த ஞான்றே தெய்வ நலங்கள் யாவும் பொருந்தப் பெற்று, மக்களுள் ஒப்பாரும் மிக்காருமின்றி, வளர்பிறை என வளர்ந்து

வருகின்றார். அவர் தம் பன்னிரண்டாம் அகவையில் தவநிலையை நாடி, அதற்கு ஏற்ற இடம் கானகமே எனக் கண்டு, வனத்தை நோக்கி வழி நடக்கின்றார். வானுறையும் தேவ தூதன் ஒருவன், நுரை போன்ற நரையுடைய முதியவன் வடிவில் அவர் முன் தோன்று கிறான். அவன் சூசையைத் தடுத்து நிறுத்தி, 'நீ எங் குச் செல்கிறாய் ?' என்று வினவுகிறான்.

" காரிடைக் குளித்த மின்போல்
கானிடைக் குளிப்பப் போகி,
நீரிடைக் குளித்த பேவு
நிறநரை குளித்(த)ஓர் மூப்பன்,
தாரிடைக் குளித்த தேன்போல்
தயையிடைக் குளித்த சொற்கொண்டு,
' ஏரிடைக் குளித்த பாலா !
இயம்புதி போவது,' என்றான். " 1

'நான் தவத்தை நாடி இம்மலைக்குச் செல்கிறேன்,' என்று சூசை விடையிறுக்கிறார். இளந்துறவியாரின் விடை யைக் கேட்ட முதியவன், சூசையின் மனநிலையை மாற் றக் கருதி அறிவுரை பல பகர்கின்றான். அறிஞரான இளந்துறவியார் தம் மனக்கருத்தை எல்லாம் அவனிடம் விரித்துரைக்கின்றார். அவற்றை எல்லாம் அன்புடன் கேட்ட அம்முதியவன், சூசை மனத்தில் படுமாறு பின் னும் நல்லுரைகள் பல பகர்ந்து, 'மாசற்ற வாழ்க்கை மனத்தால் அமையுமேயன்றி, இடத்தால் அமையாது,' என்று அறிவுறுத்துகிறான்.

" 'தீதிலா இடமே வேண்டின்,
சேணுலகு எய்தல் வேண்டும் ;

1. தேம்பா. பால மாட்சிப்படலம், 28

**கோதிலா வனத்தும் தன்னைக்**
**கொணர்ந்தகால் விளையும் வெம்போர்;**
**ஏதிலாது ஒழுகல், உள்ளத்து**
**இயல்பினால் ஆகு மன்றி,**
**வாதிலா இடத்தால் ஆகா;**
**மைந்தனே!' என்றான் சான்றோன்."[1]**

இவ்வாறு அம்முதியவன் உரைத்த மொழி சூசையின் உள்ளத்தை மாற்றுகிறது. சூசை தம் ஐயம் எல்லாம் நீங்குமாறு அம்முதியவனோடு நீண்ட நேரம் உரையாடுகிறார். இறுதியாக அம்முதியவன் சூசைக்கு 'நீ இல்லறத்தில் துறவறம் காணவேண்டும் என்பது இறைவன் ஆணை,' என்று அறிவுறுத்திவிட்டு மின்னல் வேகத்தில் மறைந்துவிடுகிறான். முதியவன் உரையால் தெளிவு பெற்ற சூசை, நகரை அடைந்து, அகப்புறப் பற்றுகளை அறவே விடுத்து, அருள் வாழ்வு நடத்தி வருகிறார்.

எருசலேம் தேவாலயத்தில் மங்கையர்க்கரசியாய்—மாதர்க்குள் மணி விளக்காய்—மாசிலா ஞானச் செல்வியராய்—கன்னித் தவம் பூண்டிருக்கிறார் மரியன்னையார். அவ்வம்மையார் திருவயிற்றில் இறைவன் அவதரிக்கத் திருவுளங்கொண்டு, வானவன் ஒருவனைத் தூதாக அனுப்புகிறான். இறைவன் பணியை ஏற்ற வானவன், மரியன்னையாரை அடைந்து, ஆண்டவன் விருப்பத்தை அறிவித்து, சூசையைத் திருமணம் செய்துகொள்ளுமாறு வற்புறுத்தி மறைகின்றான்.

சூசையப்பருக்கும் மரியன்னையாருக்கும் அற்புதமான முறையில் எருசலேம் ஆலயத்தில் திருமணம் நடைபெறுகிறது. அப்புனிதர் இருவரும் நாசரேத்து

1. தேம்பா. பாலமாட்சி. 38

என்னும் ஊரில் ஒரு சிறுமனையில் தங்கி, தம் நோன்பிற்கு மாசு நேராதவாறு ஈரறம் பொருந்திய ஒரற வாழ்க்கையை இனிது நடத்தி வருகின்றனர்.

**"ஐங்கதவு அடைத்து, அதற்கு அறம்நற் காவலாய்**
**தங்கதவு அடுத்தபல் பொருள்த டுத்துஉளத்து**
**இங்கது கொணர்உணர்வு இட்ட பின்விடைப்**
**பங்கது பகர்ந்து,உளப் பகையற்று ஓங்குவார்."[1]**

ஐம்பொறிகளை அடக்கி, அறத்தைக் காவலாக அமைத்து, பகை ஒழித்து, அவர்கள் இல்லறத்தை நல்லறமாக நடத்திவரும் நாளில், பரமன் திருவருளால் கன்னி மரியார் சூலுறுகின்றார். சூசை மனத்தில் ஐயம் தோன்றுகின்றது. **காபிரியேல்** என்னும் வானவன் தோன்றி, வளனார் ஐயத்தை அகற்றுகின்றான். கடவுளைக் கருத்தாங்கியுள்ள கன்னி மரியம்மையார்மீது ஐயம்கொண்ட அறியாமைக்குச் சூசை வருந்துகிறார்.

நாள்கள் பல கழிகின்றன. கதிரவன் தனுர் இராசியில் சேரும் மார்கழி மாதம் பிறக்கிறது. சூசையும் மரியும் அந்நாட்டு மன்னன் பணித்தவாறு குடிக்கணக்குக் கொடுப்பதற்காகப் பெத்தலேம் நகருக்குப் புறப்பட்டுச் செல்கின்றனர். செல்லும் வழியில் அவர்கள் ஆறுகள் பெருகி ஓடுவதையும், நெற்பயிர்கள் வளம்பெற வளர்ந்து நிற்பதையும், மரங்களில் புதுமலர்கள் பூத்துக் குலுங்குவதையும் கண்டு இறைவன் கருணையை வியந்து வழுத்தியவாறு வழி நடந்து, பெத்தலேம் நகரை அடைகின்றனர். அந்நகரில் ஆதரிப்பாரின்றி அவர்கள் பட்ட அல்லலுக்கு அளவில்லை. அவர்கள் துயரத்தைக் காணப் பொறாதவனாய்க் கதிரவனும் ஆழ் கடலில் மூழ்கினான் என்றால், வேறு கூறுவானேன்!

---

1. தேம்பா. ஈரறம் 25.

அவர்கள் பெத்தலேம் நகரில் தங்குவதற்கு ஒரு துச்சிலும் கிட்டாமையால், நகரின் வெளியேயுள்ள ஒரு குகையிற்சென்று ஓய்வு கொள்கிருர்கள். அங்கு மரியன்னையார், 'உருவில்லானை மனித உருவாகத் தம் திருமகனுராகப் பெற்றெடுக்கின்ருர். கண்ணுடியை ஊடுருவிச் செல்லும் விளக்கின் ஒளியைப் போல மரியன்னையாரின் கன்னிமைக்குக் கேடு வாராவண்ணம் தேவ குமாரர் அவதரிக்கின்ருர். கடவுள் அவதரித்த காலத்தைக் கவிஞர் கூறுவதைக் கேட்போம் :

**"மாதம் மார்கழி வைகல் ஐயைந்தாய்,**
**ஏதி லாநிசிக்கு இருத்தை மூவைந்தாய்,**
**ஆதி நாள்என, ஆதி நாதனைக்**
**காதல் நாயகி களிப்பின் நல்கினுள்."[1]**

மார்கழி மாதம் இருபத்தைந்தாம்நாள் ஞாயிற்றுக் கிழமை இரவு பதினைந்தாம் நாழிகையில் தேவகுமாரர் அவதரிக்கின்ருர். மிக்கயேல் காபிரியேல் என்னும் வானவர் தேவகுமாரரைத் தம் கைகளில் ஏந்தி மரியன்னையாருக்குக் காட்ட, அது கண்ட தேவ அன்னையார் கதிரவன் ஒளி பெற்ற திங்களைப் போல முகப்பொலிவு பெறுகிருர். இதை வீரமாமுனிவர் அழகிய மொழிகளால் வெளியிடுகிருர்.

**"பொதிர்கொள் பூமணம் போல்மகவு ஈன்றனள்**
**கதிர்கொள் சேயொடு கண்கள் கலந்தகால்**
**எதிர்கொள் வெஞ்சுடர் காண்முழு இந்துஎனு**
**முதிர்கொள் இன்பம் முகத்து விளங்கினுள்."[2]**

என்பது முனிவர் கூற்று. மரியன்னையார் தம் கன்னிமைக்குப் பழுதின்றிக் கடவுள் குமாரரைப் பெற்றெடுத்

1. தேம்பா. மகவருள். 96
2. தேம்பா. மகவருள். 110

தார் என்பதை வீரமாமுனிவர், 'பொதிர்கொள் பூமணம் போல் மகவு ஈன்றனள்' என்ற அடியில் நயமுற நவின்றுள்ளார். 'அரும்பு மணம் வீசுவதைப் போலக் கன்னி மரியார் தேவகுமாரரைப் பெற்றெடுத்தார்,' என்பது அவ்வடிகளின் பொருள்.

குழந்தையை வானவரும் ஆயரும் அரசரும் வந்து அடி தொழுது செல்கின்றனர். மரியன்னையாரும் சூசை முனிவரும் திருக்குமாரரைக் கண்ணிணைக் காக்கும் இமைகள் போலக் காத்து வருகின்றனர். அவர்கள் நாற்பதாம் நாள் திருக்குமாரரைக் கோவிலுக்கு எடுத்துச் சென்று கடவுளுக்கு நேர்ந்து கொடுத்து, காணிக்கை செலுத்தி வேதக்கடமை நிறைவேற்றக் கருதி, எருசலேம் நகரை நோக்கி வழி நடக்கின்றனர். கதிரவன் தேவகுமாரரைக் காண விழைந்து தன் இளங்கதிர்களைப் பரப்பி அவர் திருவடியை வருடி வணங்குகிறான். அவர்கள் இயற்கை வழங்கிய இனிய காட்சிகளை எல்லாம் ஆரநுகர்ந்துகொண்டே வழிநடந்து எருசலேம் நகரை அடைகின்றார்கள்; அங்குக் கோவிலினுள் புகுந்து திருக்குமாரரைக் கடவுளுக்கே காணிக்கையாக வைத்து வணங்கி நிற்கின்றார்கள். அக்கோவிலின் பெரிய குருவாகிய **சீமையோன்**, தேவகுமாரரைக் கண்டு பெருமகிழ்ச்சி அடைகின்றார். அக்கோவில் திருமடத்திலிருந்த, மரியன்னையாரை வளர்த்து வந்தவளாகிய அன்னம்மாள், மரியம்மையார் பெற்றெடுத்த மாமணியான தேவகுமாரரைக் கண்டு இன்பக் கண்ணீர் வடித்து, களிப்புக் கடலுள் முழ்கித் திளைக்கின்றாள். இதை வீரமாமுனிவர்,

**"இன்னியம் ஒலிக்கும் கோயில்**
**இவைஇவர்ந்து, அங்கண் வைகும்**
**கன்னிய மாதர்க் கெல்லாம்**
**கனிந்தகைத் தாயாய் மீன்செய்**

**மின்னிய முடியாள் தன்னை**
**விரும்பிமுன் வளர்த்த மாட்சி**
**துன்னிய அன்னம் என்பாள்**
**துன்னிவந்து இளவல் கண்டாள்.''[1]**

**"ஏற்றினுள் இளவல் தானை,**
**இணையறும் கன்னித் தாயைப்**
**போற்றினுள் இருவர் மாட்சி**
**புடையில்வந்த எவரும் கேட்பச்**
**சாற்றினுள்; இன்புள் பொங்கித்**
**தாரைநீர் தாரை யாகத்**
**தூற்றினுள்; பெருக்குற்று இன்பத்**
**தூய்கடல் அமிழ்ந்தி னுளே.''[2]**

என்று அழகிய சொல்லோவியமாக அமைத்துக் காட்டுகிருர். இச்சொல்லோவியத்தில் அன்னம்மாள் தேவ குமாரரைக்கண்டு தாள் வணங்கித் தாரை தாரையாக ஆனந்தக் கண்ணீர் வடித்து நிற்பது நம்கண்முன் காட்சி அளிக்கிறதன்ருே !

சூசை முனிவரும் மரியன்னையாரும் பழைய வேத முறைப்படி குழந்தைக்கு ஈடாகத் திருக்கோவிலுக்குப் புருக்களைக் கொடுத்துத் திருக்குமாரரை மீட்டுக்கொள் கின்றனர்.

இரண்டாம் காண்டத்தில், **ஏரோதன்** என்னும் அரசன் தெய்வத் திருக்குழந்தையைக் கொல்லத் தீர் மானித்திருப்பதை வானவர் மூலம் அறிந்த சூசையும் மரியம்மையாரும் திருக்குமாரரை எடுத்துக்கொண்டு

---

1. தேம்பா. மகன் நேர்ந்த. 96
2. தேம்பா. மகன் நேர்ந்த. 98

எகிப்து நாட்டிற்குச் செல்லும் செய்தியை ஆசிரியர் கூறத்தொடங்குகிறார். அவர்கள் வானவர் புடைசூழச் செல்வதாகக் கவி புனையும் வீரமாமுனிவர், பழைய ஏற்பாட்டு நிகழ்ச்சிகள் பலவற்றைக் கதையோடு தொடர்பு படுத்திக் கூறிக் காப்பியத்தைச் சுவைபட நடத்திச் செல்கிறார். இங்கு அவர் காவியத்தைப் படிக்கும் நாம் அவருடைய சிந்தனைக்கடலில் கைவீசி நீந்தத் தொடங்கி விடுகிறோம்; கரையேற மனம் வாராமல் கருத்துக் கடலிலேயே மூழ்கிவிடுகிறோம். அவ்வளவு கவர்ச்சியாகக் கதையை நடத்திச் செல்கிறார் கவிஞர்.

சூசையும் மரியம்மையாரும் திருக்குமாரரை எடுத்துக்கொண்டு எகிப்து நாடு நோக்கிச் செல்லும் போது, வழியிடையில் வானவர் தோன்றித் தெய்வக் குழந்தையைப் போற்றி வணங்குகின்றனர். திருக்குடும்பத்தார் நெடுவழி நடந்து, காடு மேடுகளை எல்லாம் கடந்து, பாலை வழியைத் தாண்டி, **சோர்தான்** என்னும் நதிக் கரையை அடைகின்றனர்; அங்குப் பழமுதிர்சோலை ஒன்றில் தங்கி, மெல்லிய இளங்காற்றை நுகர்ந்து இளைப்பாறிக் **களரி மாபுரம்** என்னும் நகரத்தை அடைகின்றனர். அந்நகர வாயிலில் காளமும் விளக்கும் தாங்கிய ஒரு பொற்பாவையைக் கண்டு, சூசை அதன் வரலாற்றை வினவுகிறார். அப்போது காபிரியேல் என்னும் வானவன் முன் வந்து, அவருக்கு அவ்வரலாற்றை விரித்துரைக்கிறான்; 'முன்னொரு காலத்தில் சேதையோன் என்னும் உழவன் ஒருவன் தெய்வத் தூண்டுதலால் படை வீரர் சிலரோடு மட்கலமும் விளக்கும் ஏந்திச் சென்று, மாற்றாரின் பெரும்படையை மாய்த்து வெற்றி கண்ட வரலாற்றை விளக்குவது இது', என்று கூறுகிறான்.

**"வான்முழுது இறைஞ்சும் நாய்கன்**
**வலிமையின் உருவ மாகத்**

**தேன்முழுது உமிழ்பூந் தண்தார்ச்**
**சேதையோன், மறைப கைத்த**
**ஊன்முழுது உடன்ற வேலார்**
**ஒருங்குஅழிந்து அறவெம் போரில்**
**வேன்முழுது இலகைக் கொண்ட**
**விளக்கும்கா ளமும்இது,' என்றான்."[1]**

மேலும் அவ்வானவன், அரசர் முப்பத்தொருவரை அவ்வுழவன் வென்று ஒழித்த வரலாற்றைக்கூறி, களரிமாபுரம் என அவ்வூருக்குப் பெயர் அமைந்த காரணத்தையும் விளக்கி, அங்குப் பாவை நிறுவிய நோக்கத்தையும் கூறுகிறான்.

**"ஏமப்போர்க் களம்இது என்ன,**
**'இவ்வூர் களரி,' என்றார்;**
**தாமத் தீபமொடு காளம் தந்த சயமது, ஓர்**
**வாமப் பாவை அவைஏந்தி, எந்தை வளம்மறவா**
**நாமத் திறல்காட்ட வைத்தார்**
**என்றான் நல்வானோன்."[2]**

திருக்குடும்பத்தார் அன்று இரவை அங்குள்ள ஒரு மண்டபத்தில் கழித்துவிட்டுப் பொழுது புலர்ந்ததும் அங்கிருந்து புறப்பட்டு, வழி நடக்கின்றனர். செல்லுமிடமெல்லாம் இயற்கை அவர்களுக்கு இனிய காட்சிகளை வழங்குகின்றது. கண்ணுக்கினிய நிறமும் காதுக்கினிய மொழியும் வாய்ந்த கிளிகளும், பூவை, குயில், தும்பி போன்றவைகளும் பாட்டிசைக்கக் கேட்டுக்கொண்டே அவர்கள் வழி நடக்கிறார்கள்.

---

1. தேம்பா. சேதையோன். 6
2. தேம்பா. சேதையோன். 54

**"தேமொழிக் கிள்ளையும் செழும்பொற் பூவையும்**
**பாமொழிக் குய்யிலும், பண்செய் தேனொடு**
**பூமொழித் தும்பியும் அருளிப் பொங்கு ஒலி**
**நாமொழிக் கீதம்போல் நரலப் போயினர்."[1]**

இவ்வாறு சென்றவர்கள் **'காசை'** என்னும் நகருக்குச் சிறிது தூரத்திலுள்ள ஓர் இடத்தில் ஒரு மரத்தடியில் தங்கி இளைப்பாறுகிறார்கள். அப்போது சூசை அந்நகரைக் காட்டி, 'அந்நகர் யாது?' என்று வினவ, **அறஞ்சயன்** என்னும் வானவன் அந்நகர வரலாற்றைக் கூறும்போது, அந்நகரில் தலைமயிரிற் பலம் பெற்ற **'சஞ்சோன்'** என்பவன் வாழ்ந்த வரலாற்றைக் கூறி, அவன் ஒரு விலை மாதின் தொடர்பால் தன் தெய்வ ஆற்றலை இழந்து அழிந்த இயல்பையும் கூறுகின்றான். சஞ்சோன் ஆதியில் பெற்றிருந்த ஆற்றலை,

**"வல்அரிக் குழவி போன்றே**
**வயத்தொடு பிறந்த தோன்றல்**
**செல்லரிது அடலோ டோங்கிச்**
**சிறுவனாய்ச் சிறுமை இன்றிப்**
**புல்லரிது அகன்ற கானில்**
**புடைத்துணை யின்றிப் போகின்,**
**கொல்லரி எதிர்ப்பக் கையால்,**
**கொறிஎன வகிர்ந்து கொல்வான்."[2]**

[கொறி - ஆடு]

என்று அறஞ்சயன் கூற்றாக வீரமாமுனிவர் கூறுவதைப் படிக்கும்போது, இந்திரசித்தன் போன்ற வீரர்

---

1. தேம்பா. காசை, 4
2. தேம்பா. காசை. 16

களது ஆற்றல் சஞ்சோனிடம் அமைந்திருப்பதைக் கண்டு அதிசயிக்கின்றோம்! இத்தகைய மாவீரன், 'நடம் புனைந்த அரிவையின்மேல் நவையுற்று நாசமானான்,' என்று அறஞ்சயன் கூறுவதைக் கேட்கும் போது, அவன் நிலைக்கு நாம் இரங்குகிறோம் அல்லவா?

திருக்குடும்பத்தார் அங்கிருந்து புறப்பட்டுக் காசை மாநகரை அடைகின்றனர். அங்கு அவர்கள் தங்கியிருந்தபோது திருக்குமாரரால் அந்நகருக்கு விளைந்த நன்மைகள் பல. அன்னையை இழந்து அழுது புலம்பிய கன்னியர் ஐவரின் அவல நிலைக்கு இரங்கிய சூசை முனிவர் வேண்டுகோளால், திருக்குமாரனார் அக்கன்னியரின் இறந்த அன்னையை உயிர் பெற்றெழச் செய்கிறார். முடம் பட்ட பெண் ஒருத்தி முடம் நீங்கித் திடம் பெறுகிறாள். இவ்வாறு நன்மைகள் பல விளைய மூன்று நாள் அந்நகரில் தங்கியிருந்த அவர்கள், அந்நகரை நீத்துச் **சீனை மாமலையை** அடைகின்றார்கள்; அம்மலையில் வேதத்தின் பல நிலைகளைக் காட்டும் அற்புத மரம் ஒன்று நிற்பதைக் கண்டு, அதன் தத்துவத்தைச் **சட்சதன்** என்னும் வானவன் மூலம் அறிந்து மகிழ்கின்றார்கள்; அங்கிருந்து புறப்பட்டு, **பேற்சபை** என்னும் பாலைவனத்தை அடைந்த போது, அங்கு முன்னாளில் வானவன் அளித்த அடையை உண்டு நாற்பது நாள்கள் உயிர் வாழ்ந்து, விண்ணினின்று வந்த விமானமூர்ந்து விண்ணுலகம் சென்ற **எலியாஸ்** என்னும் முனிவர் வரலாறு கூறப்படுகின்றது. திருக்குடும்பத்தார் அன்றிரவைக் கற்பகத் தருவெனக் கவின்பெற வளர்ந்து நின்ற ஒரு மரத்தடியில் கழித்துவிட்டுப் பொழுது புலர்ந்ததும், குளிர் நிழலைப் பரப்பி நின்ற பசுஞ்சோலை ஒன்றை அடைகின்றனர். அங்கு முனிவர் சிலர் வந்து அகமும் முகமும் மலரத் திருக்குடும்பத்தாரை அன்போடு வரவேற்று, ஓர் ஓவியக் கூடத்திற்கு அழைத்துச் செல்கின்றனர். சூசை

மாமுனிவர் அங்கிருந்த ஓவியங்களை நயந்து நோக்கி, அவற்றின் உட்பொருளை அம்முனிவர்கட்கு விளக்கித் தவநெறியையும் அறிவுறுத்துகிறார்.

திருக்குடும்பத்தார் அங்கிருந்து புறப்பட்டுக் கடுகி நடந்து, **கையாறு** என்னும் நதியை அடைகின்றனர். அந்நதி **மோயீசன்** என்பவனைப் பேழையில் வைத்து விடப்பட்ட வரலாற்றுச் சிறப்புடையதாதலால், அங்கு மோயீசனது வரலாற்றை வானவன் ஒருவன் விரித்துரைக்கின்றான். கையாற்றைக் கடந்த அவர்கள், எகிப்து நாட்டை அடைந்து, அந்நாட்டின் தலைநகரான **இராசமாபுரத்**தில் ஒரு சிறுமனையில் தங்குகின்றார்கள்.

அவர்கள் வருகையை அறிந்த பேயரசன் தன் பரிவாரங்களோடு வானமும் பூமியும் அதிர ஆரவாரித்தெழுந்து தவமுனிவரான சூசையின் தவத்தை அழிக்க முயல்கிறான்.

**"நீரணி உலகம் ஆட**
**நெடுங்கடல் ஒதுங்கிப் பொங்க,**
**காரணி வானம் விம்மக்**
**காரணம் அறியா மாக்கள்**
**சூரணி உளத்திற் கூசச்**
**சுடுநரகு அலகை யாவும்**
**பேரணி யாகச் செல்ல,**
**பேய்க்கரசு எழுந்த தன்றே"** [1]

என்ற பாடலில் பேய்க்கரசின் ஆரவாரம் கேட்கின்றது. இவ்வாறு எழுந்து வந்த அலகைகள் தியானத்திலிருந்த சூசையை அணுக, அவை ஒரு காத தூரத்தில் கொண்டு போய்த் தள்ளப்படுகின்றன. பேய்கள் எறிந்த ஆங்

1. தேம்பா. சோகு. 460

காரம் கோபம் போன்ற கருவிகள், தவத்தை அரணுகக் கொண்ட சூசை முனிவர் முன் வலி இழந்து இடை முறிந்து வீழ்கின்றன. அதனுல் மனமுடைந்த பேய்கள், அப்போர் முறையால் பயனில்லை என்பதை உணர்ந்து, மாயப்போர் செய்து, சூசையை மாய்க்கப் பார்க்கின்றன. அதற்கும் சூசை மனங்கலங்காமையைக் கண்ட பேய்கள், வெட்கித் தலை குனிகின்றன. இதனுல், கடவுள் திருவடியைச் சரணடைந்தவரைப் பேய்களாலும் கெடுக்க இயலாது என்பதைச் சூசை உணர்கின்ருர். ஆயினும், அவர் உலக மக்களைப் பேய்களின் தொல்லையிலிருந்து காக்கவேண்டும் என்னும் கருணையால் உந்தப்பட்டு, திருக்குமாரரை வணங்கி,

> **''புரிந்த நிந்தையைப் பொற்பொடஞ் சேன்ஐயா !**
> **விரிந்த மன்னுயிர் வேண்டிஇப் பேயெலாம்**
> **எரிந்த தீப்புகைத்து ஓட்டு' என, இன்னெளி**
> **சொரிந்த பூமுகத் தோன்றலை வேண்டினுர்.''**

மன்னுயிரையும் தம்முயிரென மதித்து வாழும் சூசை மாமுனிவர் இவ்வாறு வேண்டியதும், திருக்குமாரர் திருவாய் திறந்து முதன்முறையாக 'அப்பா' என அன்புடன் அழைத்து, அருளுடன் நோக்குகின்ருர். அந்த அளவில் பேய்கள் எல்லாம் பாதாளத்தில் வீழ்கின்றன. வானவர் மலர் மாரி சொரிந்து மகிழ்ச்சி ஆரவாரம் செய்கின்றனர்.

மூன்ருங்காண்டத்தில், திருக்குடும்பத்தார் எகிப்தில் வாழ்ந்திருந்த போது ஏரோதன் உலக இரட்சகரைக் கொல்லும் நோக்கத்தோடு தன் நாட்டில் பிறந்திருந்த எல்லாக் குழந்தைகளையும் கொல்லுமாறு கட்டளையிடுகிருன். இது கஞ்சன் கண்ணனைக் கொல்லக் கருதி எல்லாக் குழந்தைகளையும் கொல்லுமாறு கட்டளை

இட்டதை நினைவூட்டுகின்றதன்றோ? கொலைஞர்கள் மன்னன் கட்டளையை மறுத்தற்கஞ்சிப் பச்சிளங் குழந்தைகளை எல்லாம் படுகொலை செய்கின்றார்கள். இக்கொடுஞ்செயலை எகிப்து நாட்டிலிருந்த திருக்குடும்பத்தார் ஞானக்காட்சியாய்க் கண்டு வருந்துகின்றனர். அவர்கள் அங்கு அன்பும் அறனும் வழுவாதவாறு நல் வாழ்க்கை நடத்துகின்றார்கள். சூசை தம்பால் வந்தவர் கட்கெல்லாம் அறநெறியை அறிவுறுத்துவதோடு அவர்கள் ஐயம் அகல உண்மைப் பொருளையும் விளக்கிக் கூறுகிறார். இது சீவகசிந்தாமணியில் சீவகன், சித்திரகூடத்தில் வாழ்ந்த முனிவர்க்கு ஞானம் முதலிய வற்றை விளக்கிக் கூறியதை நினைவூட்டுகிறது.

எகிப்தில் இருந்தபோது சூசை மாமுனிவர் இயன்ற வாறெல்லாம் முயன்று சமயபோதனை செய்து வருகிறார். இது வீரமாமுனிவர் தமிழகத்தில் ஆற்றிய சமயத் தொண்டின் பிரதிபலிப்பாகவே உள்ளது என்பதை நாம் உணரலாம். எகிப்து வாழ்க்கையில் சூசை தம் நேரில்லாத் தலைவராய்க் காட்சி அளிக்கிறார்.

கொடியவனாகிய ஏரோதன் இறக்கின்றான். இதை வானவன் ஒருவனால் அறிந்த திருக்குடும்பத்தார், நாசரேத்துக்குத் திரும்பி, அங்குச் சில ஆண்டுகள் தங்குகின்றனர்; அப்போது எருசலேம் நகரில் நடை பெற்ற ஒரு திருவிழாவிற்கு இயேசுநாதரை அழைத்துச் செல்கின்றனர் பன்னிரண்டு வயதினரான இயேசு நாதர் பெருந்திரளான மக்கள் கூட்டத்தில் பெற்றோ ரைப் பிரிந்து போகவே, பெற்றோர் தனித்தனியே புதல் வரைத் தேடித் தவிக்கின்றனர்; உயிரை இழந்த உடம்பைப் போலவும், கன்றை இழந்த பசுவைப் போல வும் வருந்துகின்றனர். மரியன்னையார் ஊரெல்லாம் அலைந்து தேடுகின்றார். சூசையப்பர் ஊர்ப்புறத்துக் காவெல்லாம் சுற்றித் தேடுகின்றார். மூன்றாம் நாள்

மரியம்மையாரும் சூசையப்பரும் கோவிலினுள் செல்கின்றனர். அங்குத் திருக்குமாரர் வேதநூல் வல்லாரோடு அமர்ந்து அவர்கள் வியக்கும் வண்ணம் வேதவுண்மைகளை விளக்கிக் கொண்டிருக்கிறார். மைந்தரைக் கண்ட மரியன்னையார், ஈன்ற பொழுதினும் பெரிது உவந்து, இன்பக் கண்ணீர் வடித்து நிற்கின்றார். சூசை கொண்ட மகிழ்ச்சிக்கு அளவில்லை. அவர்கள் இயேசு நாதரை அழைத்துக் கொண்டு நெடுவழி நடந்து, நாசரேத்து ஊரை அடைகின்றனர். அங்குச் சில ஆண்டுகள் சூசையப்பரும் மரியம்மையாரும் ஒப்பற்ற இல்வாழ்க்கை நடத்துகின்றனர். சூசையப்பர் வாதநோய் வாய்ப்பட்டு எட்டாண்டுகள் வரை வருந்துகின்றார். வெந்தழலிற்பட்ட பைம்பூவைப்போல அவர் உடல் வாடுகின்றது.

**"விரைகிடந்து அலர்ந்த பைம்பூ**
**வெந்தழல் பட்ட தேபோல்**
**நரைகிடந்து இரிந்த மூப்பின்**
**நைந்துடல் தளர்ந்து வாட**
**வரைகிடந்து அதிர்ந்து மல்கும்**
**வாரியின் மலிந்த நோய்கள்**
**சிரைகிடந்து இழுத்துஎன் பெல்லாம்**
**சினங்கொடு குடைவ தாமால்."** [1]

என வீரமாமுனிவர், சூசை முனிவர் கொண்ட நோயின் கொடுமையைத் தெளிவாக எடுத்துரைக்கின்றார்.

இத்தகைய கொடிய நோய்க்கு ஆளான சூசையப்பர் இந்த நோயைத் தம் மனவலிமையால் எட்டாண்டுகள் பொறுத்திருக்கின்றார். அக்காலத்தில் மரியன்னையாரும் திருக்குமாரரும் வானவரும் வியக்கும் வண்ணம் அவருக்குப் பணிவிடை செய்து வருகின்றனர். இவ்வாறு

---

1. தேம்பா. பிணி தோற்று. 6

இருவரும் வளனுரைப் பேணிய முறையை வீரமா முனிவர் வியப்புத் தோன்ற விளக்குகிறார்.

இறுதியில் நோயால் துன்புற்று நலிந்த சூசை மாமுனிவரை வானவர் 'வருக' என்று அழைக்க, அவர், இவ்வுலக வாழ்க்கையை நீத்துக் கிறித்து நாதரின் வருகையைத் தெரிவிக்கும் தூதராக நல்லான்மாக்கள் இருக்கும் விண்ணுலகை அடைகின்றார். தூது என்பது காப்பிய உறுப்புகளுள் ஒன்றாதலால் இச்செய்தியைத் **'தூதுரைப் படலத்'**தில் ஆசிரியர் விரித்துரைக்கிறார். சூசை மாமுனிவர் தூதராய்ச் சென்ற காட்சியை ஆசிரியர்,

**"மெய்யிலார் நாட்டிற் றூது**
**விளம்பமெய் யுயிர்விட் டேகிப்**
**பொய்யிலா வுயிரா யன்புட்**
**புக்கெனக் கிடந்த யாக்கை**
**மையிலா மலர்ந்த கொம்போ,**
**வரைந்தநற் படமோ, தோன்றி**
**நையிலாத் துயில்கொண் டென்ன**
**நளியொளி வீசிற் றம்மா."[1]**

என்று கூறுகிறார்.

அங்குச் சூசை முனிவரை எல்லாரும் வாழ்த்தி வணங்குகின்றனர். அப்போது அங்கு வந்த மரியன்னை யாரின் வளர்ப்புத் தாயாரான அன்னம்மையார் முதலிய வருக்குச் சூசை மாமுனிவர் தேவ குமாரரது மாண்பினை எடுத்துரைக்கின்றார். எல்லாரும் இரட்சகரின் கருணைப் பெருக்கை வியந்து போற்றி அவர் வருகையை எதிர் பார்க்கின்றனர். இந்நிலையில், உலகில் எங்கும் மெய்ந் நெறியைப் பரப்பி மக்களைக் காத்துவந்த தேவகுமாரர்,

---

**1. தேம்பா. தூதுரை. 20**

தம் குருதியைச் சிந்தி மண்ணுலக மக்கள் மாசைக் கழுவ முன் வருகின்ருர். இதற்காக அவர் தம்மை நெடிய சிலுவையில் பலி கொடுத்துப் பின் அடக்கம் செய்யப்படுகின்ருர். அவர் ஆன்மா சூசை மாமுனிவர் புகுந்த நல்லுலகை அடைகின்றது. அங்குச் சூசையப்பர் முதலியவர் இரட்சகரை வரவேற்று வணங்கிப் போற்று கின்றனர். இயேசு நாதர் மூன்று நாள்களுக்குப் பிறகு நல்லான்மாக்கள் புடை சூழ மீண்டும் மண்ணுலகை அடைந்து, கல்லறையில் வைக்கப்பட்டிருந்த தம் திரு வுடலை அவர்களுக்குக் காட்டி, நீசர்கள் அடித்தும் அறைந்தும் குத்தியும் உடம்பில் காயங்களை ஏற்படுத் திய வகையை விளக்கிக் கூறுகிருர். தேம்பாவணியில் இதைக் கூறும் பகுதி கன்னெஞ்சையும் கரைப்பதாய் உள்ளது :

**"பகையரசு ஒழித்துஒன் ருய்நான்**
**படைத்துஅளித்து அழிப்ப வல்ல**
**தகையர சாகி மாக்கள்**
**தம்செருக்கு ஒழிப்ப என்னை**
**நகையர சாக்கி நீசர்**
**நகைத்துமுள் மகுடம் சூட்டி**
**மிகையர சாகி ஆய**
**வெருவிடும் உருவம் காணீர்"**[1]

"ஆக்கி அளித்து அழிக்க வல்ல அரசனுகிய என்னை, நஞ்சனைய நீசர்கள் ஒன்று சேர்ந்து வஞ்சனை யாகப் பிடித்துக் கொடுமைப்படுத்தி முள் முடி சூட்டிச் சித்திரவதை செய்த என் உருவத்தைக் காணுங்கள்!" என்று கூறித் தம் உடம்பிலுள்ள ஒவ்வோர் உறுப்பும் பட்ட பாட்டை விளக்கிக் கூறுகிருர் இயேசு நாதர்.

1. தேம்பா. உத்தான. 44

உலகம் உய்ய உழைத்த உத்தமருக்குக் கிட்டிய பரிசு களா இவை என்று எண்ணும்போது நம்மை அறியாமல் நம் கண்கள் நீரைச் சிந்துகின்றன அல்லவா?

இயேசு நாதர் மூன்றும் நாள் தம் உடற்காயங்களை மாற்றித் தெய்வ ஒளியோடு உயிர்த்தெழுகின்றார்; சூசை முனிவரையும் உயிர்த்தெழச் செய்கின்றார். உயிர்த் தெழுந்த இயேசு நாதரும் சூசையப்பரும் மற்றப் புண் ணிய ஆன்மாக்களும் நிலவுலகில் செஞ்சுடர் உருவாக உலவி இன்பம் விளைத்து வருகின்றனர். நாற்பது நாள் களுக்குப் பிறகு அவர்கள் மரியன்னையாரை வாழ்த்தி விட்டு நல்லான்மாக்கள் சூழ்ந்து வரப் பெரியதொரு மலை முகட்டை அடைகின்றனர்.

திருக்குமாரர், சூசை மாமுனிவரை நோக்கி, 'விண் ணில் எழுந்து வருக!' என்று அழைக்க, அவர் மண் ணுலகை விட்டெழுகின்றார். இயேசு நாதர் மோட்ச வாயிலைத் திறந்துகொண்டு, எல்லாரும் தொடர்ந்து வர உள்ளே நுழைகின்றார். அங்கு அவர், பூவுலகில் தம் மைப் பேணிக்காத்த சூசை முனிவருக்கு முடிசூட்டுமாறு பரம பிதாவைப் பணிந்து வேண்டுகின்றார். அவ் வேண்டுகோளை ஏற்றருளிய இறைவர், சூசை மாமுனிவ ருக்கு ஏழு வரங்களை ஈந்து, ஏழு மணிகள் பதித்த முடி யையும் சூட்டி, வாழ்த்துகின்றார். அவ்வாறே இயேசு நாதரும் பரிசுத்த ஆவியும் சூசை முனிவருக்கு முடிசூட்டி வரங்களை வழங்குகின்றனர் முனிவருக்கு மண்ணுலகி லும் முடி சூட்டப்படுகின்றது. இங்குச் சூசை மாமுனிவர் மண்ணும் விண்ணும் போற்றும் தந்நேரில்லாத் தலைவ ராய்க் காட்சியளிக்கின்றார்.

வீரமாமுனிவர் தம் காவியத்தை மங்கலமான முறை யில் முடித்து இதை இ. பியற் காவியமாகச் செய்த மாண்பு போற்றத்தக்க..ன்றோ? இக்காவியததின முடிவு

சிலப்பதிகாரத்தின் முடிவை ஒத்து விளங்குவது எண்ணி மகிழத்தக்கதாகும்.

"இந்நூலை உரைப்பவரும் கேட்பவரும் வானுலக வாழ்வு பெறுவர்; சூசையப்பரும் மரியம்மையாரும் அவர்கட்குத் தம் திருக்குமாரரோடு அருள் வழங்குவர்," என்று நூற்பயன் நுதலி, வீரமாமுனிவர் தேம்பாவணியை முடிக்கின்றார்.

**துணைக்கதை :**

ஒரு காவியத்தின் இடையிடையே விரவி வரும் துணைக்கதைகள், அக்காவியத்தை விரிவுபடுத்துவதோடு அழகுபடுத்தவும் செய்கின்றன. பகவற்கீதை பாரதத்தின் ஒரு பகுதியாய் இருப்பதால் அக்காவியம் பெற்ற சிறப்புப் பகர்வதற்கரியதாயிற்று. குசேலோபாக்கியானத்தைக் கிளைக்கதையாகப் பெற்றிருப்பதால் பாகவதம் பலராலும் பயனுடைய நூலாகப் பாராட்டப் படுகின்றது. இவற்றை எண்ணிப் பார்த்தால், துணைக் கதைகளின் மாண்பை நாம் ஒருவாறு உணர்ந்து கொள்ளலாம். மாபாரதம் பல வேறு துணைக் கதைகளின் மாண்பினாலேயே இன்று உலக நூல்கள் பலவற்றுள்ளும் சிறப்புப் பெற்று விளங்குவதை நாம் அறிவோம். காப்பியப் புலவர்களுக்குப் பல கருத்துக்களை விளக்கியும், இலட்சியங்களை உணர்த்தியும், உணர்ச்சியை ஊட்டியும், காப்பியத்தைக் கவினுறச் செய்வதற்கு இத்துணைக் கதைகளைப் போலத் துணையாவது வேறில்லை. தென்மொழி வடமொழி இலக்கியங்களைக் கற்றவர்கள் இவ்வுண்மையை நன்கு உணர்வார்கள். வீரமாமுனிவர் ஆரியம் நன்குணர்ந்து, அருந்தமிழை ஆய்ந்துணர்ந்து, உலக இலக்கியங்களை எல்லாம் படித்து மகிழ்ந்தவர் அல்லரா? அவர் இவ்வுண்மையை உணராது இருப்பாரா? அவர் தாம் இயற்றிய தேம்பாவணி என்னும் தீந்தமிழ்க்காப்பியத்தில்

இடமறிந்து பல துணைக்கதைகளை இணைத்துள்ளார். அவற்றில் கலை மணம் கமழ்வதோடு மக்கள் அறிந்து பின்பற்ற வேண்டிய பல நீதிகளும் நிரம்பியுள்ளன.

காப்பியப் புலவர்கள் தாங்கள் இயற்றும் காப்பியங்கள் வெறுங்கலையாகவும் இலக்கியமாகவும் இருத்தல் போதும் என்று மட்டும் எண்ணுவதில்லை; அவை மனித வாழ்க்கையைத் திருத்தி அமைத்துப் பண்பாட்டை உருவாக்கவும் பயன்படவேண்டும் என்பதையே முக்கியமாகக் கருதுகின்றார்கள். அதற்காக அவர்கள் உலக இயல்பை நுண்ணிதின் ஆராய்ந்து, புதிய படைப்புகளைப் படைக்கிறார்கள். அவர்கள் படைப்பு, பல நுட்பங்களை உணர்த்தித் தீமையைக் கடிந்து, நன்மையை வளர்க்கும் வழிகாட்டியாய் அமைவதுமுண்டு. புலவர்கள் படைப்பு அற்புதப் படைப்பாய்—என்றும் அழியாத படைப்பாய்—விளங்குவதாலேதான் 'படைப்புத் தொழிலைச் செய்யும் மலரவனும், வண்டமிழ்ப் புலவர்களுக்கு ஒப்பாகான்,' என்று அறிஞர்கள் கூறியுள்ளார்கள்.

இங்கு வீரமாமுனிவர் தேம்பாவணியில் இணைத்துள்ள ஒரு துணைக்கதை மக்கள் வாழ்க்கைக்கு எந்த அளவு வழி காட்டுவதாயுள்ளது என்பதையும், அதில் அவர் படைத்துள்ள பாத்திரம் மக்கள் பண்பாட்டை வளர்க்க எந்த அளவு பயன்படுகிறது என்பதையும் காண்போம்:

நாசரத்து என்னும் ஊரில் நல்வாழ்வு நடத்திவந்த சூசை மாமுனிவர், மன்னவன் பணியை ஏற்றுக் குடிக் கணக்குக் கொடுப்பதற்காகப் பெத்தலேம் என்னும் ஊருக்குச் சென்றார் அல்லரா? திருமகவைக் கருக்கொண்டிருந்த மரியன்னையாரும் உடன் சென்றார். அவர்கள் கால்நடையாகவே காடு மேடுகளை எல்லாம் கடந்து சென்றுகொண்டிருந்தார்கள். அவர்கள் சென்ற இட

மெல்லாம் நன்மை மிகுந்தது; தீமை தேய்ந்தது. ஆகையாலேதான், 'நம்பி, மாதொடு நன்னெறி போயினன்,' என்று குறிப்பிடுகிருர் வீரமாமுனிவர். சூசையப்பரும் மரியம்மையாரும் இயற்கையின் இனிய காட்சிகளைக் கண்டு களித்துக்கொண்டே வழி நடந்தனர். அங்கே தான் தீய செயலால் ஆடவரை மயக்கும் காந்தரி என்னும் வஞ்ச மகள் ஒருத்தி வந்து சேர்ந்தாள். அவள் யார் யாரை வஞ்சிக்கக் கருதி அங்கு வந்து சேர்ந்தாளோ, தெரியவில்லை. அவள் வருகையை வீரமாமுனிவர்,

> "தூமஞ் சூடிய தூய்துகி லேந்துபு
> தாமஞ் சூடிய தாரொடு பூண்மலி
> காமஞ் சூடிய காந்தரி யென்ருெரு
> நாமஞ் சூடிய நாரியைக் கண்டுளார்."[1]

எனச் சொல்லோவியமாகத் தீட்டிக் காட்டுகிருர். அவ் வஞ்ச மகள் வருகை, அண்ணல் இராமனை வஞ்சிப்பதற்கு வந்த நஞ்சமகளான சூர்ப்பணகையின் வருகையை நினைப்பூட்டுகிறது. சூர்ப்பணகையின் வருகையைக் கம்பர்,

> "பஞ்சியொளிர் விஞ்சுகுளிர் பல்லவம் அனுங்கச்
> செஞ்செவிய கஞ்சநிமிர் சீறடிய ளாகி
> அஞ்சொலிள மஞ்ஞையென அன்னமென மின்னும்
> வஞ்சியென நஞ்சமென வஞ்சமகள் வந்தாள்."

என்று கூறுகிருர். வஞ்ச மக்கள் வருகை எங்கும் ஒன்றுபோலவே அமையும் போலும்! இருவரும் கொஞ்சு நடை போட்டு வருவது அவர்கள் வஞ்சக நெஞ்சங்களைத் திறந்து காட்டுகிறதன்றே?

சூசையப்பரும் மரியம்மையாரும் செல்லும் வழியிடையில் வந்த வஞ்சமகள் காந்தரி என்னும் பெயரி

1. தேம்பா. மகவருள். 27

னள். அவளுக்குத் தமிழ்ப் பெயரைச் சூட்டி மகிழ்கின்ருர் கவிஞர். வந்த மங்கை ஆடை அணிகளாலும் அழகிய மலர்களாலும் தன்னை அலங்கரித்திருந்தாள். அவள் உள்ளத்தில் காமப்பேய் தலை விரித்தாடியது. இதைக் 'காமஞ்சூடிய காந்தரி' என்று அடக்கமாகக் கூறுகின்ருர் கவிஞர். மரியன்னையார் காந்தரியின் மன இயல்பைத் தெரிந்துகொண்டு சூசைமுனிவருக்கு அவள் நிலையைக் குறிப்பாக உணர்த்திஞர். முனிவர் அவளுடைய அவல நிலைக்கு இரங்கினர். அதனுல் மரியன்னையார், அவ்வஞ்ச மகளைத் துரத்திவிட எண்ணுது, அவள் மனமாசினை மாற்ற எண்ணி அவள் உள்ளத்திற் குடியிருந்த காமப்பேயை அகன்று ஓடுமாறு பணித்தார். அந்த அளவில் காந்தரியின் உள்ளத்தில் குடிகொண்டிருந்த காமப்பேய் அகன்று ஓடியது. அஃது ஓடிய வேகத்தை வீரமாமுனிவர் அரிய ஓர் உவமையால் விளக்குகின்ருர்.

உலகத்தில் உண்மை விரைவில் பரவுவதில்லை. அஃது ஆமை வேகத்திலேதான் அசைந்துகொண்டிருக்கும். ஆனுல் பொய்யோ, விரைவில் பரவும். மூவுலகிற்கும் தலைவியராய் விளங்கும் மரியன்னையார் ஏவலினுல், சோகு, தான் நெடுங்காலம் குடியிருந்த அந்நஞ்ச மகளின் வஞ்ச மனத்தை விட்டுப் பொய்யின் வேகத்தில் ஓடி மறைந்து நரகத்தை அடைந்தது. இங்குக் காமத்தின் ஓட்டத்திற்குப் பொய்யின் வேகத்தை உவமையாகக் கூறியிருப்பது பொருத்தமேயன்ருே? பொய்யும் காமமும் உடன் பிறப்புகள் தாமே! அவை ஒன்ருக ஓடி மறையும் ஆற்றலுடையவை என்று கவிஞர் புதியதொரு கருத்தைப் புலப்படுத்திபிருப்பது உவகை விளைக்கின்றது. இதை வீரமாமுனிவர்,

**"மொய்கொள் நீரொடு மூவுல கிற்கெலாம்**
**மெய்கொள் நாயகி மேவியுள் ஏவலால்**

மைகொள் சோகு பழம்பதி மாற்றிவாய்ப்
பொய்கொள் வேகம் நாகுறப் போயதே."[1]

என்று கூறுகிறார். சோகு, பொய் வேகத்தில் சென்று நரகில் புகுந்தது என்கிறார் அதன் புகலிடம் நரகந் தானே !

காந்தரி தன் உள்ளத்திலிருந்து காமப்பேய் ஓடி மறைந்ததை உணர்ந்தாள் ; காரிருள் போர்த்திருந்த உள்ளத்தில் பேரருள் பொலிவதைக் கண்டு வியப்பும் திகைப்பும் கொண்டாள். பிறவிக்குருடன் ஒருவன் திடீரென்று கண்ணொளி பெற்று, இரவியைக் கண்டு இறும்பூதடையும் நிலையில் அவள் நின்றாள். குருடன் புற ஒளியைக்கண்டு இறும்பூதடைவான். காந்தரி அக வொளி பெற்று அதிசயித்தாள். இந்த அகவொளியினால் காந்தரியின் மனநிலை முற்றிலும் மாறிவிட்டது. தான் அணிந்த பொன்னாலும் மணியாலும் செய்த அணிகலன் கள் யாவும், இது வரை ஆடவரைத் தன்பால் ஈர்த்துத் தனக்குக் கேடு விளைத்து வந்ததை அவள் உணர்ந்தாள். அணிகலன்கள் தன்னை அகப்படுத்தும் வலைகளாய் இருந்துசெய்த அல்லல்களை எல்லாம் எண்ணிய காந்தரி, அவ்வணிகலன்களை நோக்கி, "வலைகளே, உங்களால் இத்தனைக் காலம், வீணாகப் பிறரும் குழைய நானும் குழைந்தேனே !" என்று கூறி நொந்து அழுதாள் ; தன் கேட்டுக்குக் காரணமாய் இருந்த நகைகளை எல் லாம், மின்னி மின்னிப் பெய்யும் மழையைப் போலச் சித றிச் சிதறி விழுமாறு அறுத்தறுத்து எறிந்தாள். இதை வீரமாமுனிவர் எழில் மிக்க சொற்களால் உணர்ச்சி ததும்ப எடுத்துரைக்கிறார். (மகவருள். 45.)

இது நகைப்பித்துடைய மாதர்க்கு அறிவுறுத்துவ தாகத் தோன்றுகிறதல்லவா ? 'விழ ஈர்த்தெறிந்தாள்'

---

1. தேம்பா மகவருள். 39

என்னும் தொடர் ஒவ்வொரு மங்கையரும் இவ்வாறே அணிகலன்களை அறுத்தெறிதல் வேண்டும் என்று உணர்த்தும் முறையில் அமைந்துள்ளது.

வீரமாமுனிவர் பல ஆண்டுகள் தமிழகத்தில் பணி புரிந்தவர். இங்குச் செல்வமகளிர் பொன்னாலும் மணியாலும் செய்த நகைகளை அணிந்து செருக்கித் திரிவதையும், ஏழை மகளிர் அவர்களைப்போல நகையணிவதற்கு வகையில்லையே என்று ஏங்கித் தவிப்பதையும் பலகாலம் கண்டு மனம் கொதித்திருத்தல் வேண்டும். இரண்டும் அறியாமையின் விளைவுதானே! "நகைப்பித்தினால் சில இடங்களில் நங்கையரின் வாழ்வே நாசமடைகின்றது. எத்தனையோ ஏழை மக்களின் உழைப்பு, பட்டினி, பசி, துயரம், கண்ணீர்—இவைதாமே ஒருத்தியின் கழுத்திலும் காதிலும் நகை நட்டுகளாக நடனம் புரிகின்றன? தமிழ் நாட்டில் ஒருத்தி அணிந்துள்ள நகை எத்தனையோ ஏழைகளுக்கு உணவளிக்கும்; உடையளிக்கும்; தொழிலளிக்கும். இவ்வாறு பல்லாற்றாலும் பயன் படத் தக்க பெரும்பொருள் நகைச்சுமையாக நங்கையர் கழுத்திலும் காதிலும் நடம் புரிவதால் நாட்டிற்கு என்ன பயன்? பக்கத்து வீடுகளில் ஏழை மக்கள் பட்டினியால் வருந்த—அடுத்த வீட்டுச் செல்வி ஒருத்தி பெருமதிப்புள்ள நகைகளைச் சுமந்துகொண்டிருப்பது அறமாகுமா? எனவே, அன்பு, அருள் ஆகிய நற்பண்புகளை எல்லாம் அழிக்கும் நகைப்பித்து நங்கையர்க்கு நாசம் விளைப்பதன்றோ?" என்றெல்லாம் சிந்தனைச் செல்வரான வீரமாமுனிவர் பலவாறு எண்ணிப் பார்த்திருத்தல் வேண்டும். ஆகவேதான், அவர் நகைப்பித்தை ஒழிக்க வேண்டும் என்னும் நல்லுணர்வைத் தமிழ் மங்கையர் உள்ளத்தில் நாட்டவேண்டும் என்று கருதிக் காந்தரியின் கதையைத் துணைக்கதையாகக் கொண்டாரோ என்று எண்ணத் தோன்றுகிறது. இங்கு 'அணிகலன்கள்

பெண்களைப் பிணிக்கும் வலைகள்' என்று வீரமாமுனிவர் கூறியிருப்பது தமிழ் மங்கையர் ஒவ்வொருவரும் உணர்ந்து நடப்பதற்குரியதன்றோ?

அடுத்ததாகக் காந்தரி காமத்தைக் கடிந்து, நகைப் பித்தைத் துறந்து, நல்லறிவு பெற்ற நிலையை எடுத்து விளக்குகிறார் வீரமாமுனிவர். அவள் தன் இழிந்த நிலையை உணர்ந்து நொந்து வடித்த கண்ணீரில் மூழ்கித் தன் மனவழுக்கைக் கழுவினாள்; உயர்ந்த ஞானம் என்னும் தெளிந்த நீரில் ஆடி மனத்தெளிவு பெற்றாள். தெளிவு பெற்ற அவள் உள்ளத்தில் இறையருளாகிய நீர் நிரம்பியது. அந்நீரில் ஆடி மனம் குளிர்ந்த காந்தரி, தவறுது பயன் விளைக்கும் அறக்கடலில் ஆடிக் குணங்களால் உயர்ந்து மேன்மை அடைந்தாள்.

இவ்வாறு காந்தரி என்னும் அருநஞ்சமுகள் தன் குற்றத்தை உணர்ந்து அழுதழுது உள்ளத்திலும் உடலிலும் தூய்மை பெற்றுப் பரமபிதாவின் பாசத்திற்குரியவளானாள் என்று வீரமாமுனிவர் விளக்கி உரைக்கிறார். இங்கு 'அழுதால் நின்னைப் பெறலாமே,' என்னும் மாணிக்கவாசகரின் அனுபவமொழி நினைக்கத்தக்கது.

காந்தரியின் கதையால், 'தீய உள்ளமுடைய மங்கையரும் மனமாசகற்றி மாண்புறலாம்,' என்பதை வீரமாமுனிவர் மங்கையர் உலகுக்கு அறிவுறுத்தியுள்ளார். நகைப்பித்து ஆகாது என்பதையும், மனத்தூய்மை வேண்டும் என்பதையும் நம் நாட்டு மங்கையர் உணர்ந்து நலம் பெறுவார்களாக!

**பத்திச் சுவை :**

தமிழகத்தில் ஞானச் சுடராய் உலவிய வீரமாமுனிவர், மக்கள் உள்ளத்தில் கிறித்துவின் பத்தி

நெறியை ஊட்ட வேண்டும் என்பதைக் கருத்திற் கொண்டே தேம்பாவணியைப் பாடினர். தேம்பாவணி காவிய நலன்களெல்லாம் கவினுற அமையப் பெற்று, மக்கள் வாழ்வு சிறக்க வழி காட்டும் அறநெறிகள் பல வற்றைக் கொண்டு, இலக்கியச் சுவைகளோடு இயன் றுள்ளது. அதில் பிறமொழிக் காப்பியங்களில் காணப் படும் எல்லாச் சுவைகளும் எழில் பெற அமைந்திருப்ப தோடு, பத்திச்சுவையும் சிறக்க அமைந்துள்ளது. தமிழ் மணமும் தெய்வ மணமும் கமழும் நாடு தமிழ் நாடு நாயன்மார்களும் ஆழ்வார்களும் மக்கள் உள்ளத்தைப் பத்தி நெறியிற் செலுத்தக் கருதிப் பாடிய தேவாரப் பாடல்களும் திவ்வியப் பிரபந்தப் பாடல்களும் மக்கள் உள்ளங்களை உருக்குவன. அயல்நாட்டினரான வீரமா முனிவர், மேனுட்டு இலக்கியங்களில் காணுத பத்திச் சுவையைத் தமிழிற்கண்டு அனுபவித்திருத்தல் வேண் டும். பிறவியிலேயே பத்தியால் பண்பட்ட உள்ளம் படைத்த அவர் மானிடர் மனத்தை உருக்கி அதன் மாசுகளைப் போக்கி வானவர் மனமாக வளர்க்க வல்ல வகையில் பத்திப் பாடல்கள் பலவற்றைப் பாடியுள் ளார். பெரியபுராணம் இயற்றிய சேக்கிழார் 'பத்திச் சுவை நனி சொட்டக் கவி பாடுவதில் வல்லவர்,' என்று மகாவித்துவான் மீனுட்சி சுந்தரம்பிள்ளை அவர்கள் கூறினர்கள். தேம்பாவணியை ஒருமுறை படித்தவர்கள் கூட வீரமாமுனிவரையும் அவ்வாறு போற்றிப் புகழ் வது பொருத்தம் என்பதை உடனே உணர்ந்துகொள் வார்கள். கிறித்தவ நெறிக்கண் நின்று தொண்டாற் றிய வீரமாமுனிவர், தம் மதக் கொள்கைகளும் பத்தி நெறியும் மக்களிடையே பரவும் வகையில் பத்திச்சுவை நிறைந்த ஒரு காப்பியத்தைச் செய்தது பொருத்தமே. அவர் பன்மொழிப்புலமை பெற்றிருந்த போதிலும், தமிழிற்காப்பியஞ் செய்யப்புகுந்தது, அது பத்திக்குரிய மொழி என்பதை மனத்திற்கொண்டே யாகும் என்பதை

முன்பும் குறித்தோம். எனவே, அவர் அயல் மொழிப் புலவர்களைப் போலாது தமிழ் மரபின்படி கடவுளை வாழ்த்தித் தம் காப்பியத்தைத் தொடங்குவது கருதத் தக்கது. தாம் எடுத்த செயல் இடையூறின்றி இனிது முடிவதற்குக் காணுமிடமெல்லாம்—கருதுமிடமெல்லாம் —நீக்கமற நிறைந்து நிற்கும் கடவுளை வாழ்த்தியே எச் செயலையும் தொடங்குவது பண்பட்ட பழங்குடி மக்க ளான தமிழர்களுக்குரிய தனிப்பண்பு. தமிழரோடு தமிழராய் வாழ்ந்த வீரமாமுனிவரும் தமிழ்ப்பண்புடன் வாழ்ந்து வந்தவர் அல்லரா?

பெருங்கோவிலின் முகப்பிற்காணும் கோபுரம் போலக் காப்பியத்தின் முகப்பில் கவினுற விளங்குவது **பாயிரம்** என்னும் முகவுரை. நூலுக்கு முகம் போல விளங்குவதால் அது **'முகவுரை'** எனவும் வழங்கப்படு கிறது. அந்த முகவுரைக்கும் முகவுரையாய் விளங்கும் முதற்பாட்டிலேயே வீரமாமுனிவர் கடவுளை வாழ்த்தி நூலைத் தொடங்குகிறார்.

> **''சீரிய உலகம் மூன்றும்**
> **செய்தளித் தழிப்ப வல்லாய்**
> **நேரிய எதிரொப் பின்றி**
> **நீத்தவோர் கடவுள் தூய**
> **வேரிய கமல பாதம்**
> **வினையறப் பணிந்து போற்றி**
> **ஆரிய வளன்றன் காதை**
> **அறமுதல் விளங்கச் சொல்வாம்''**[1]

என்பது தேம்பாவணியின் தொடக்கச் செய்யுள். இக் கடவுள் வாழ்த்துச் செய்யுள், அறிஞர்கள் மிகப் பாரித்து உரை கூறும் அளவிற்குப் பொருட்செறிவு பெற்று

1. தேம்பா. பாயிரம். 1

விளங்குகிறது. தமிழ்ப்பெருங்கவிஞர்கள் பரந்த சிந்தையும் விரிந்தநோக்கமும் உடையவர்களாதலின், அவர்கள் ஊர், நாடு என்னும் குறுகிய அளவில் எண்ணாது, உலகப் பொதுமையில் ஈடுபட்டு, உலக நலத்தை உன்னுவார்கள். ஒல்காப் பெரும்புகழ்த் **தொல்காப்பியம்** "வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத் தமிழ்கூறு **நல்லுலகம்**" என்ற பாயிரத்துடனே தொடங்குகின்றது. உலகப் பெரும்புலவரான **திருவள்ளுவர்** தம் நூலில் முதற் செய்யுளிலேயே, **'உலகு'** என்னும் சொல்லை அமைத்தே நூலைத் தொடங்கியுள்ளார். **'உலகம் உவப்ப'** என்ற தொடர் பத்துப்பாட்டுள் முதற்பாட்டான திருமுருகாற்றுப் படையை அணி செய்கின்றது. கம்பர் **'உலகம் யாவையும்'** என்றும், சேக்கிழார் **'உலகெலாம்'** என்றும் தம் நூல்களைத் தொடங்கி முழுமுதற்கடவுளை வழிபடுகின்றனர். சங்ககாலம் முதல் காப்பியகாலம் வரையில் உள்ள தமிழ்ப்புலவர் எல்லோரும் இவ்வாறு உலகப் பொதுமையில் ஈடுபட்டு ஒரே உலகக் குறிக்கோளை உணர்த்தும் நோக்குடன் 'உலகு' என்னும் சொல்லை நூலின் முதற்கண் அமைத்துக் கடவுளை வாழ்த்தி நூலைத் தொடங்கியிருப்பதைக் காணலாம். இந்த உலக ஒருமைப்பாடு தமிழர்களுக்குரிய தனிச் சொத்து. தமிழரோடு தமிழராய் வாழ்ந்த வீரமாமுனிவர் இச் சொத்தை இழக்கத் துணிவரோ? அவர், 'சீரிய உலகம்' என்னும் தொடரை முதலில் அமைத்துக் கடவுளை வாழ்த்தித் தம் காப்பியத்தைத் தொடங்குகிறார். இஃது அடிகளாரது பத்தியையும் பரந்த மனப்பான்மையையும் காட்டுவதன்றோ? பார்க்கும் இடமெங்கும் பரந்திருக்கும் பரமனைப் பரந்த நோக்கத்தோடு வணங்குவது தானே பக்தர்களுக்குகந்த பண்பு!

இவ்வாறு பரந்த நோக்கத்தோடு கடவுள் வாழ்த்துப் பாடிய வீரமாமுனிவர், கவிச் சக்கரவர்த்தியாரான

கம்பர் பாடிய கடவுள் வாழ்த்தை அடியொற்றித் தம் பாடலை அமைத்திருப்பது ஒப்புநோக்கிப் பார்ப்பவர்க்குப் புதியதோர் இன்பம் பயப்பதாகும்.

**"உலகம் யாவையும் தாம்உள ஆக்கலும்**
**நிலைபெ றுத்தலும் நீக்கலும் நீங்கலா**
**அலகி லாவிளை யாட்டுடை யார்அவர்**
**தலைவர் அன்னவர்க் கேசரண் நாங்களே."**

என்பது கம்பர் பாடிய கடவுள் வாழ்த்துச் செய்யுள் இங்குக் கம்பர் கடவுளைச் சமயச் சார்புடைய எப்பெயராலும் சுட்டாமல், '**தலைவர்**' என்னும் சொல்லால் குறிக்கின்றார். படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழில்களையும் ஆற்றும் முழுமுதற்பொருளைத் 'தலைவர்' என்று குறித்தது சாலவும் பொருத்தமன்றோ? இவ்வாறே வீரமாமுனிவரும் 'சிறப்புப் பொருந்திய மூன்று உலகங்களையும் படைத்துக் காத்து அழிக்கும் ஆற்றலுடையவராய்த் தமக்கு நேரில் எதிரும் ஒப்பும் இல்லாமல் எல்லாவற்றையும் கடந்து நிற்கும் ஒப்பற்ற தலைவரைக் 'கடவுள்' என்னும் பொதுச் சொல்லாற் குறிக்கின்றார். தமிழ் மக்கள் தெய்வத்தைக் கடவுள் என்ற சொல்லாலேயே தொன்றுதொட்டுக் குறித்து வந்தார்கள். இறைவன் தன்மையை அச்சொல்லைப் போலத் தெளிவாகக் காட்டும் சொல் வேறில்லை என்றே சொல்லலாம். எல்லாவற்றையும் கடந்து உள்ள பொருள் எதுவோ, அதுவே கடவுள். கடவுள் இல்லாத இடமே இல்லை. 'அவனின்றி ஓரணுவும் அசையாது,' என்பது பண்டுதொட்டு வழங்கிவரும் பழமொழி. இவற்றை எல்லாம் உணர்ந்தே வீரமாமுனிவர் பரமபிதாவைக் 'கடவுள்' என்னும் சொல்லாற்குறித்து வணங்குகிறார்.

கம்பர் தம் காப்பியத்தைச் சரணகதி நூலாகவே இயற்றினர் என்பர். ஆகையாலேதான் 'அன்னவர்க்கே

சரண் நாங்களே,' என்று ஆண்டவனைச் சரண மடைந்து, அவர் தம் நூலைத் தொடங்குகிருர். இச் சரணுகதி முறை கிறித்தவருக்கும் உரியதாகும். முனி வரும் இம்முறையை மனத்திற்கொண்டே 'கடவுள் கமல பாதம் வினையறப் பணிந்து' என்று கூறி நூலைத் தொடங்குகிருர். மேலும், திருவள்ளுவர், 'இறைவன் திருவடியைச் சேர்ந்தவர் இம்மையிலும் மறுமையிலும் நீடு வாழ்வர்,' என்றும் எந்த இடத்திலும் துன்புருர் என் றும், மனக் கவலையை மாற்றி இன்பக்கடலுள் ஆழ்வர் என்றும் கூறிய கருத்துகளை எல்லாம் மனத்திற் கொண்டே வீரமாமுனிவர், கமலமாதம் வினையறப் பணிந்து' என்று கூறினுர் போலும்! சுருங்கக் கூறின், வீரமாமுனிவரது கடவுள் வாழ்த்துச் செய்யுள் உலக மக்களை எல்லாம் இறைவனிடம் ஆற்றுப்படுத்துகின்ற முறையில்—சரணுகதித் தத்துவத்தை எல்லாருக்கும் அறிவுறுத்தும் முறையில்—அமைந்துள்ளது கருதத் தக்கது.

பத்தி உள்ளம் படைத்த முனிவர், வளனுர் பிறந்த சூதேயா நாட்டைப் பார்க்கின்ருர். அந்நாட்டு மக்கள் உள்ளங்களில் எல்லாம் பத்தி நிரம்பியிருத்தலால் அவர் கள் ஆண்டவனைத் துதிப்பதிலேயே காலமெல்லாம் போக்குகின்ருர்கள். நாட்டில் எங்குச் சென்ருலும் கட வுளை வாழ்த்தும் வாழத்தொலியோ கேட்கின்றது. இதை அவர், 'யாவிடையாயினும்' என றும், 'அருந்தயை எநதையை வாழ்த்தினவே,' என்றும் கூறிச் சூதேயா நாட்டை ஒரு பத்தி நாடாக நமக்கு அறிமுகம் செய்து வைக்கிருர். உள்ளத்தில் நிரம்பியிருந்த பத்திதான் அவரைச் சூதேயா நாட்டை இவ்வாறு பக்தி நாடாகக் காணச் செய்கிறது.

இத்தகைய பத்தி உள்ளம் படைத்த முனிவர், பல வகைப் பத்திப்பாடல்களால் தம் காவியத்தை நிரப்பி விடுகிருர். தேம்பாவணியில் அங்கங்கே காணப்படும்

துதிப்பாடல்கள் தேவாரங்களாய் மிளிர்கின்றன ; திருவாசகங்களாய்த் திகழ்கின்றன. சூசையப்பரும் மரியம்மையாரும் திருக்குமரரோடு ஆலய வழிபாட்டிற்குச் செல்கின்றனர். அங்குச் **சீமையோன்** என்னும் பத்தன் திருக்கரத்திலேந்தி மார்போடு அணைத்து இன்புறுகிறான். அவன் அப்போது ஆனந்த மேலீட்டால் பாடிய தோத்திரப் பாடல்கள் நம் உள்ளத்தை உருக்கும் உயர்ந்த பாடல்களாய் (மகன் நேர். 82) உள்ளன. அவற்றை நாம் பாடினால், நம் உள்ளத்தில் கனிந்து சுரப்பது தெய்வ பத்தியால் தோன்றும் பேரின்பமே யாகும்.

மனம் கரைத்து மலம்கெடுக்கும் தோத்திரப் பாடல்கள் சிலப்பதிகார வரிப்பாடல்களின் ஓசை நயம் பெற்றுப் படிப்போர் உள்ளத்தில் பத்திப் பெருக்கெடுத்தோடச் செய்யும் பான்மையோடு விளங்குகின்றன. இத்தகைய பாடல்கள் பல தேம்பாவணியில் காணப்படுகின்றன. இவற்றை நம் நெஞ்ச வீட்டில் உலாவ விட்டால், பத்தி நிலை தானே வந்தெய்தப் பரவசம் அடையலாம்.

தமிழில் பத்தி நெறியைப் பரப்புவதில் தேவார திருவாசக திவ்வியப்பிரபந்தங்களுக்குத் தனி இடம் உண்டு. சைவ சமய குரவர்களுள் ஒருவரான அப்பர் பாடிய தேவாரம் பத்தியைப் பரப்புவதோடு அறநெறிகளையும் உணர்த்துவதாய் உள்ளது. அவர் ஒரு பாட்டில்,

> "மெய்ம்மையாம் உழவைச் செய்து
> விருப்பெனும் வித்தை வித்திப்
> பொய்ம்மையாம் களையை வாங்கிப்
> பொறைஎனும் நீரைப் பாய்ச்சித்
> தம்மையும் நோக்கிக் கண்டு
> தகவெனும் வேலி யிட்டுச்
> செம்மையுள் நிற்ப ராகில்
> சிவகதி விளையும் அன்றே !"

என்று கூறினர். அப்பரது இவ்வமுதவாக்கு வீரமா முனிவரது உள்ளத்தை உருக்கியிருக்க வேண்டும். இதை மனத்துட்கொண்ட முனிவர்,

**"ஊக்கஏர் பூட்டி, நோன்பால்**
**உடற்செறு உழுது, நன்றி**
**வீக்கமேல் விரதச் செந்நெல்**
**வித்தி,நல் லொழுக்க நீரைப்**
**போக்கநீடு இறைத்துத் தன்ஐம்**
**பொறியெனும் வேலி காக்கில்**
**ஆக்கமாய்ப் பெருவீட் டின்பம்**
**அண்டமேல் விளைக்குந் தானே."[1]**

என்று பாடியுள்ளார். அப்பர் எடுத்தாண்ட உருவக வணியைப் பின் பற்றி அரிய உண்மைகளை விளக்கும் வீரமாமுனிவரது இப்பாட்டில் தெய்வமணம் கமழ்கின்ற தன்றோ?

தேவார திருவாசகப் பாடல்களையும் பிரபந்தப் பாடல்களையும் படித்து உள்ளம் உருகிய வீரமாமுனி வர் தேம்பாவணியில் அவற்றிற்கு ஈடான பல பாடல் களை இடையிடையே பாடி அமைத்துள்ளார். அவை மக்கள் உள்ளத்தைப் பத்தி நெறியிலே செலுத்துவன வாய் உள்ளன. தேம்பாவணியில்,

**"அறக்கடல் நீயே; அருட்கடல் நீயே**
**அருங்கரு ணாகரன் நீயே**
**திறக்கடல் நீயே; திருக்கடல் நீயே**
**திருந்துளம் ஒளிபட ஞான**
**நிறக்கடல் நீயே; நிகர்கடந் துலகில்**
**நிலையும்நீ; உயிரும்நீ; நிலைநான்**

1. தேம்பா. கருணையன். 111

பெறக்கடல் நீயே; தாயும்நீ எனக்குப்
பிதாவும்நீ; அனைத்தும்நீ அன்றோ ?"[1]

என்பது போலும் தோத்திரப் பாடல்கள் பல காணப்படுகின்றன. இவற்றைத் தெய்வப் பண்பினை நல்கும் செவி நுகர் கற்பகக் கனிகள் என்று கூறலாம். இத்தகைய பாடல்களால் பொலிந்து விளங்கும் தேம்பாவணி ஒரு தெய்வப் பூம்பொழிலாகவே காட்சியளிக்கின்றது.

**தமிழகக்காட்சி :**

வான்மீகத்தை முதனூலாகக்கொண்டு இராமகாதையைப் பாடிய கம்பர், வடக்கிலுள்ள நாடு நகரங்களை உருவாக்கும் போது, தமிழ் நாட்டு நாடு நகரங்களைக் கருவாகக் கொண்டே உருவாக்குகின்றார். அவர் பாடுவது அயோத்தியாய் இருந்தாலும், அதில் தமிழ் நாட்டு நகரமே காட்சி தரும்; கங்கையைப் பாடினாலும் அதில் காவிரியே பெருக்கெடுத்தோடும். 'கல்வி சிறந்த தமிழ் நாட்'டைத் தாயகமாகக் கொண்ட வீரமாமுனிவரும் இம் முறையில் கம்பர் காட்டிய வழியிலேயே நிற்கிறார். அவர் சூதேயா நாட்டைப் பாடினாலும், அதில் தமிழ் நாடே காட்சி அளிக்கிறது. அவர் பாடிய எருசலேம் நகரும் தமிழ் நகரமாகவே தென்படுகிறது. இயற்கையோடு தோன்றி வாழ்ந்த வீரமாமுனிவர், தமிழ்நாட்டின் இயற்கை வளங்களை எல்லாம் கண்டு களித்தவர்; ஐவகை நிலங்களின் இயல்புகளை எல்லாம் இனிது அறிந்தவர். அவர் தமிழகத்தில் வான்முகில்கள் வரைகளின்மீது தவழ்வதையும், பைங்கிளிகள் மரக்கிளைகளில் தாவி விளையாடுவதையும்,கானமயில்கள் தோகையை விரித்து ஆடுவதையும்,

1. தேம்பா. ஈரறம். 34

குயில்கள் மறைந்து நின்று பாடுவதையும், புள்ளி மான்கள் துள்ளிக் குதிப்பதையும் கண்டும் கேட்டும் அனுபவித்தவர்; செக்கர் வானின் செவ்வியும், பொழி லின் பொற்பும், ஆற்றின் அழகும் கண்டு களித்தவர் ; தமிழ் இலக்கியங்களிலும் இவற்றைப் படித்து மகிழ்ந் தவர். இவ்வாறு பல்லாற்ருனும் தமிழ் உள்ளம் பெற்ற வீரமாமுனிவருக்குப் பார்க்கும் இடமெல்லாம் தமிழகமே தென்பட்டதில் வியப்பில்லை அன்ருே ?

பாட்டுடைத் தலைவராகிய சூசையப்பர் சூதேயா நாட் டிற் பிறந்தவர். அந்த நாட்டை வருணிக்கப் புகுந்த வீரமாமுனிவருக்கு அது தமிழ்நாடாகவே காட்சி வழங்கு கிறது. அந்நாடு பசியும் பிணியும் பகையும் அற்று, வசியும் வளனும் நிறைந்து விளங்குகிறது. அங்குக் கலையும் கற்பும் கடவுள் நெறியும் வளர்கின்றன. அந்த நாட்டில் வீரமாமுனிவர் கற்பனைத் தேரூர்ந்து உலா வரு கிருர். அங்குத் தமிழ்நாட்டு ஆய்ச்சியர் தயிர் கடைந்து கொண்டிருக்கின்றனர். அவர்கள் தயிர் கடையும் ஒலி அவர் காதுகளிலும் ஒலித்தது போலும்! அக்காட்சியை அவர், 'ஆய்ச்சியர் வேர்வை எழக் கைவளை ஆர்ப்பத் தயிர் கடையும் போது, வெண்ணெய் மேலெழுகின்ற தோற்றம் பெரியோர்கள் துன்புறும் போது அறத்தை மேலோங்கச் செய்தலை ஒத்திருக்கின்றது,' என்னும் பொருள்பட,

"வேர்ப்பெ ழக்கயல் விழியர் கைவளை
ஆர்ப்பெ ழக்கடை தயிரில் ஆயநெய்
கூர்ப்பெ ழத்துயர் குறுக மேல்அறம்
ஏர்ப்பெ ழச்செய்வோர் இயல்பு மானுமே."[1]

என்று பாடுகிருர். இப்பாடலில் தமிழ் வளநாட்டு,

1. தேம்பா. நாட்டு. 22

**"முல்லையங் கோதை நல்லார்**
**முகமதி வெயர்வு தோன்ற**
**வல்லிநுண் மருங்குல் நோவ**
**வால்வளை வாய்விட் டார்ப்ப**
**மெல்லிய காந்தள் சேப்ப**
**வெண்டயிர் கடையும் ஓதை"**

அன்றோ கேட்கின்றது ?

வீரமாமுனிவர் சூதேயா நாட்டிற்கண்ட மற்றொரு காட்சியைக் காண்போம்: எருமைகள் பிரிந்த கன்றுகளை நினைத்துப் பாலைப் பொழிகின்றன. அப்பாலை அன்னங்கள் குடித்து மகிழ்கின்றன. இக்காட்சி அடிகளாரின் உள்ளத்தைக் குளிர்வித்தது. இதை அவர்,

**"உண்ட கன்றகன் றுள்ளி மேதிகள்**
**மண்ட அன்புறீஇ வழிந்த பால்திரள்**
**கொண்ட அன்னமேகுடித்த லாவது**
**கண்ட தங்குள களவி தாமரோ."[1]**

என்று ஒழித்துக் காட்டணியின் மணங்கமழுமாறு சொல் ஓவியமாக்கிக் காட்டுகின்றார். இதைப் படிக்கும் நாம் சூதேயா நாட்டில் காண்பது என்ன? தமிழகக் காட்சிதானே ! கம்பரும் கோசலநாட்டில் இத்தகைய காட்சியையே கண்டார்.

அன்னங்கள் தம் இளங்குஞ்சுகளைத் தாமரை மலர்களில் கிடத்திவிட்டுத் தடாகக் கரைகளில் உலாவித் திரிகின்றன. அப்போது அந்நீர் நிலைகளில் எருமைகள் வந்து படிகின்றன. அவை தம் கன்றுகளை நினைத்துப் பாலைச் சொரிகின்றன. அப்பாலை அன்னக்குஞ்சுகள்

---

1. தேம்பா. நாட்டு. 24

பருகி மகிழ்ந்து, தவளைகள் தாலாட்ட, உறங்குகின்றன. இவ்வழகிய காட்சியை,

"சேலுண்ட வொண்க ணாரில்
திரிகின்ற செங்கா லன்னம்
மாலுண்ட நளினப் பள்ளி
வளர்த்திய மழலைப் பிள்ளை
காலுண்ட சேற்று மேதி
கன்றுள்ளிக் கனைப்பச் சோர்ந்த
பாலுண்டு துயிலப் பச்சைத்
தேரைதா லாட்டும் பண்ணை."

என்று கம்பர் கூறுகிறார்.

வீரமாமுனிவர் கண்ட சூதேய நாடும், கம்பர் கண்ட கோசலமும் ஒத்து விளங்குவதைக் காண்கின்றோம். இஃது இருவரும் தமிழ்க்கண்களைக் கொண்டு கண்டமையால் நேர்ந்த ஒற்றுமை நயம் என்பதற்கு ஐயமும் உளதோ?

இன்னம் ஒரு காட்சியைக் காண்போம்: தமிழகத்தில் மயிலையும் குயிலையும் கண்டு பழகிய வீரமாமுனிவருக்குச் சூதேய நாட்டிலும் அவையே காட்சியளிக்கின்றன. ஆலைகளிலிருந்து ஆர்த்து எழும் புகையைக் கண்ட மயில்கள் கருமேகம்திரண்டதெனக் கருதித் தோகையை விரித்து ஆடுகின்றன. குயில்கள் தீயாரைக் கண்ட நல்லாரைப்போல வாடுகின்றன. இக்காட்சியை வீரமாமுனிவர்,

"ஆலை யார்புகை முகிலென் றார்ப்பெழச்
சோலை யார்மயில் துள்ள மாங்குயில்
மாலை யாரிருள் விரும்பு மாக்கள்காண்
மேலை யாரென மெலிந்து தேம்புமால்"[1]

---

1. தேம்பா. நாட்டுப். 19

என்று தமது வளமார்ந்த வாக்கில் வடித்துத் தந்த கவிதையைப் படிக்கும் போது, அவர் கண்ட சூதேயா காட்டில், நாம் தமிழகத்தையே கண்டு களிக்கின்றோம் என்னும் உணர்வே எழுகின்றது.

வீரமாமுனிவர் எருசலேம் நகர வாயிலைக் காண்கின்றார். அந்நகர வாயில் அவருக்கு மதுரை நகர வாயிலாகவே தோற்றமளிக்கின்றது. அதை அவர்,

**"காரணி பசும்பொற் குன்றின்**
**காட்சிபோல் மதிளைச் சூழ்ந்து**
**சீரணி யனைத்துஞ் சேர்த்த**
**செழுநகர் திறந்த வாயில்**
**பேரணி யெவையு மீட்டிப்**
**பின்னவை யுவப்பிற் காட்டப்**
**பாரணிப் பேழை யாரும்**
**பயன்படத் திறந்த போன்ற."[1]**

என்று நமக்குக் காட்டித் தருகிறார். நமக்கு இந்நகர வாயிலோ, இளங்கோவடிகள் காட்டித்தந்த மதுரை நகர வாயிலாகவே காணப்படுகின்றது. **இளங்கோவடிகள்** மதுரை நகர வாயில் திறந்திருந்த தோற்றத்தை,

**"ஆயிரங் கண்ணோன் அருங்கலச் செப்பு**
**வாய்திறந் தன்ன மதிலக வரைப்பில்"**

என்று ஓர் அழகிய ஓவியமாக்கித் தருகிறார். இந்தக் காட்சியையே வீரமாமுனிவர் எருசலேம் நகரில் கண்டு நமக்கும் காட்டியுள்ளார் போலும்! இவை போன்ற தமிழகக் காட்சிகள் பல தேம்பாவணியில் காணப்படுகின்றன. தமிழ் முனிவரான வீரமாமுனிவர் பார்க்கும்

---

1. தேம்பா. நாட்டுப். 12

இடமெங்கும் தமிழகத்தையே கண்டதில் வியப்பில்லை யன்றோ ?

## இலட்சிய நகர் :

கவிஞர்கள் கனவு காண்கின்றவர்கள். அவர்கள் தங்கள் கனவில் எத்தனையோ நாடு நகரங்களைப் படைக்கின்றார்கள் ; சிறந்த இலட்சியங்களை உருவாக்குகின்றார்கள். இத்தகைய கவிஞர்கள் வரிசையில் வைத்தெண்ணத் தகுந்தவரே வீரமாமுனிவர். அவர் கனவுலகிலிருந்து வருணிக்கப் புகுந்த எருசலேம் நகரைப் பார்க்கின்றார். அந்நகர் நீர் வள நிலவளத்தால் நிறைந்து, செல்வத்தாற்சிறந்து காணப்படுகின்றது. அங்குள்ள மக்கள் எவ்விதக் குறையுமின்றி மனநிறைவோடு மகிழ்ந்து வாழ்கிறார்கள். மற்ற நகரங்களில் மக்கள் இங்குமங்கும் அலைந்து திரிவதைப் போல, அந்நகரில் அலைந்து திரிகின்றார்களா என்று கவிஞர் கவனிக்கின்றார் ; அங்குத் தண்ணீர் அலைகின்றதேயன்றி, மக்களுள் அலைவார் எவருமிலர் என்பதை அறிகின்றார். அப்போது கவிஞர் அந்நகரில் மக்களை மாய்த்து வருகின்ற போர் நடைபெறுவது உண்டா என்பதை உன்னுகின்றார். ‘கொள்’ எனக் கூறிக் கொடுப்பாருக்கும், ‘கொள்ளேன்’ என்பாருக்கும் இடையிலே நடைபெறுகின்ற போரையன்றி, மக்களைக் கொன்று குவிக்கின்ற போருக்கு அங்கு இடமில்லை என்பது புலனாகின்றது. பின்னர்க் கவிஞர் அங்குள்ள மக்களின் மனநிலையை அறிய ஆர்வம் கொள்கின்றார். மாந்தர் மாசற்ற மனத்தினராய் வாழ்கின்றனர். கறுப்பு என்பது அங்கு மேகத்தில் காணப்படுகின்றதேயன்றி, மக்கள் மனத்தில் காணப்படவில்லை. கவிஞர் இத்தகைய தூய உள்ளம் படைத்த மக்கள் வாழ்கின்ற நகரில் சிறைச்சாலை இருக்கின்றதா என்று தேடுகின்றார். அந்நகர்,

சிறையில்லா நகராகவே அவர் கண்ணுக்குத் தென்படுகின்றது. அங்கு அறவேலியன்றிச் சிறைவேலி இல்லை என்பதைக்கண்ட கவிஞர், பெருவியப்படைகின்றார். இந்நிலையில் அவர் கனவு தெளிகின்றது. எருசலேம் நகர் இப்படி இருந்ததோ இல்லையோ! இத்தகைய நகரங்களே உலகில் தோன்றுதல் வேண்டும் என்னும் ஆர்வத்தால், கவிஞர் தாம் கனவுலகிலிருந்து கண்ட எருசலேம் நகரத்தை ஒழித்துக்காட்டணியாக ஒரு கவிதையில் அமைத்துக் காட்டுகிறார். அஃது ஓர் இலட்சிய நகரமாய் இயங்குகின்றது. அவர் கவிதையைக் காண்போம் :

**"நீரல்லதும் அலையில்லது; நிறைவான்பொரு ளிடுவார்**
**போரல்லது பகையில்லது; புரிவான்மழை பொழியுங்**
**காரல்லது கறையில்லது; கடிகாவலு மறனுற்**
**சீரல்லது சிறையில்லது திருமாநக ரிடையே."**

இந்தக் கவிதையில் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழன் போர் என்பது இல்லாத நல்லுலகம் தோன்றுதல் வேண்டும் என்றும், நாஞ்சிலைத் தவிரப் பிற படைக்கலங்களை அறியாத வாழ்க்கை நிலவுதல் வேண்டும் என்றும் கண்ட கனவு நிழலிடுவதைப் பார்க்கின்றோமல்லவா ? இக்கவிதையை,

**"செஞ்ஞாயிற்றுத் தெறலல்லது**
**பிறிதுதெறல் அறியார்நின் நிழல்வாழ் வோரே;**
**திருவில் லல்லது கொலைவில் லறியார்;**
**நாஞ்சி லல்லது படையு மறியார்."**

என்னும் புறநானூற்று அடிகளோடு ஒப்பு நோக்கிச் சுவைப்பது சிறந்த இன்பம் பயப்பதொன்றாகும்.

---

1. தேம்பா. நகரப். 66

## தமிழ் மணம் :

வீரமாமுனிவர் தமது காப்பியத்தை 'முன்னோர் மொழி பொருளேயன்றி அவர்மொழியும் பொன்னே போல் போற்றுவம்,' என்னும் தொன்னெறி வழுவாது ஆக்கியுள்ளார். அவர் திருவள்ளுவர், திருத்தக்க தேவர், கம்பர், ஆழ்வார்கள், சமய குரவர்கள் போன்ற தமிழ்ச் சான்றோர்களின் நூல்களிலெல்லாமிருந்து ஒவ்வோர் அகப்பை முகந்து, கற்போர் உள்ளத்தைக் கவருமாறு ஆங்காங்குக் கவியமைத்துள்ளார். தேம்பாவணியைப் படிப்போர் அந்நூலில் வள்ளுவரின் வழியைக் கண்டு நடப்பர்; சிந்தாமணியின் செழுஞ்சுவையை நுகர்ந்து இன்புறுவர்; கம்பரின் கவி இன்பம் கண்டு களிப்பர்; சிற்றிலக்கியங்களின் சிறப்பைப் பார்த்துப் புகழ்வர்; வள்ளலார் முதலியவர் கவிகளையும் அந்நூலில் கண்டு மகிழ்வர்.

## வள்ளுவரின் வழி :

> "வள்ளுவன் றன்னை உலகினுக் கேதந்து
> வான்புகழ் கொண்ட தமிழ்நாடு"

என்று பாடிப் பெருமிதமடைந்தார் **பாரதியார்.** அவருக்கும் ஒரு படி மேலே சென்று, "வள்ளுவரைப் பெற்றதால் புகழ் பெற்றதே இவ்வையகம்" என்று வாய் மணக்கப் பாடி மகிழ்ந்தார் **பாரதிதாசனுர்.** புலவர் பெருமக்களால் பாராட்டப்பட்டு அனைத்துலகும் அறிந்து போற்றும் ஒரு நூல் உண்டென்றால், அது வான் புகழ் வள்ளுவர் திருக்குறளேயாகும். ஒன்றோடு ஒன்று மாறுபட்டுப் போராடும் பல்வேறு சமயங்கள்கூட ஒரு சேரத் தத்தம் நூல் என்று உரிமை கொண்டாடும் பெருமை உடைய நூல் திருக்குறளேயாகும். திருக்குறளுக்குப் பின் தோன்றிய தமிழ் நூல்கள் எல்லாம்,

திருவள்ளுவர் மொழி பொருளோடு அவர் மொழியையும் பொன்னே போலப் போற்றி ஏற்றுள்ளன. நம் அருந் தமிழ் மொழியில் அழகிய நூல்கள் பல இயற்றிப் புகழ் சிறந்த இத்தாலி நாட்டு வித்தகரான வீரமாமுனிவரும் இதற்கு விலக்காவரா? அவர் அருளிய தேம்பாவணியில் ஆதி முதல் அந்தம் வரை வள்ளுவரின் வழி தென்படு வதைக் காணலாம்.

வீரமாமுனிவர், தெய்வப் புலமை வள்ளுவர் இயற் றிய திருக்குறளிலுள்ள ஆயிரத்து முந்நூற்று முப்பது குறளையும் பாயிரத்தோடு படித்துப் பயனடைந்தவர். அவர் தாம் பெற்ற அப்பெரும்பயனைத் தம் நாட்டினரும் பெறுதல்வேண்டும் என்னும் விருப்பால் திருக்குறள் அறத்துப் பாலையும் பொருட்பாலையும் இலத்தீன் மொழி யில் மொழி பெயர்த்து அமைத்தார். இதனால், திருக் குறளை முதன் முதலில் வெளி உலகிற்கு அறிமுகம் செய்து வைத்த பெருமை அவருக்கு உரியதாயிற்று. அன்றியும், அவர், தாம் அருளிய தேம்பாவணி என்னும் காப்பியத்தையும் திருக்குறள் வழி நின்றே ஆக்கினர் என்று கூறுவது தவருகாது. வீரமாமுனிவர் திருக் குறளின்பால் வைத்த பெருமதிப்பினல், அந்நூலின் நயஞ்சான்ற சொல்லையும் பொருளையும் எடுத்துச் செல் லும்வாய் எல்லாம் அமைத்துத் தேம்பாவணியில் திருக் குறளின் தெள்ளிய மணம் கமழச் செய்துள்ளார்.

'அகத்தின் அழகு முகத்தில் தெரியும்,' என்பது தமிழகத்தில் வழிவழியாக வழங்கி வரும் பழமொழி. இப் பழமொழிக்கு விளக்கம் தரும் முறையில் திருவள்ளுவர்,

**"அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம்**
**கடுத்தது காட்டும் முகம்."**

என்னுமழகிய குறட்பாவை இயற்றினர் இக்குறளைத் தேம்பாவணியில் தக்கதோர் இடத்தில் அமைத்துப்

போற்றுகிறார் முனிவர். ஆண்டவன் கன்னி மரியம்மையாரின் வயிற்றில் கருக்கொண்டு மனித உருக்கொள்ள எண்ணுகிறான்; தன் எண்ணத்தை நிறைவேற்றும் பொருட்டுக் கன்னி மரியம்மையாரின் இசைவைப் பெற்று வருமாறு காபிரியேல் என்னும் வானவனைத் தூது அனுப்புகிறான். காபிரியேல் மரி அன்னையாரை அடைந்து ஆண்டவன் எண்ணத்தை அறிவிக்கிறான். செய்தி அறிந்த மரி அன்னையார், மனங்கலங்குகிறார். அப்போது, கண்ணாடி தன்னை அடுத்த பொருள்களின் சாயலைக் காட்டுவதைப் போல, மரியன்னையாரின் அகத்தின் நினைவை எல்லாம் அவர் முகம் எடுத்துக் காட்டுவதைக் காபிரியேல் காண்கிறான். இதை வீரமாமுனிவர்,

''பளிங்கடுத் தவற்றைக் காட்டும்
பான்மையால் இவள்மு கத்தில்
உளங்கடுத் தவற்றை ஓர்ந்த
கபிரியேல் உறுதி சொல்வான் ;
விளங்கடுத் திறைவற் கன்பு
மீதுற உவகை பூத்த
வளங்கடுத் துயர்ந்த மாதே !
மயக்குற வருந்து வானேன் ?''[1]

என்ற பாடலில் எடுத்துக் காட்டுகிறார். இப்பாட்டில் திருக்குறள், உடலில் உயிர்போல மறைந்து நின்று ஒளி விடுவதைக் காண்கிறோம்.

உழவுத் தொழிலின் உயர்வை உணர்ந்த நாடு தமிழ் நாடு. இது பண்டு தொட்டு உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்து வரும் நாடு. இந்நாட்டில் பிறந்து வளர்ந்த திருவள்ளுவர், உழவுத்தொழிலின் சிறப்பை

1. தேம்பா. ஐயந்தோற்று. 9

உள்ளவாறு உணர்ந்தார்; அத்தொழிலின் பெருமையைப் பத்துக் குறள்களாற்பாடி மகிழ்ந்தார்.

**"உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்;மற் றெல்லாம்**
**தொழுதுண்டு பின்செல் பவர்."**

என்பது அக்குறள்களுள் ஒன்று. 'உழவுத்தொழிலே உலகில் உயர்ந்த தொழில்; மற்றத் தொழில்களெல்லாம் அடிமைத் தொழில்களே,' என்பது இதன் கருத்து. வீரமாமுனிவரும் தமிழகத்தைத் தாயகமாகக் கொண்டு வாழ்ந்தவர் அல்லரா? அவர் உழவின் சிறப்பை உணரா திருக்க இயலுமா? திருவள்ளுவர் உழவுத்தொழிலைப் பற்றிக் கூறிய கருத்து அவர் உள்ளத்தில் எதிரொலித் துக்கொண்டிருந்தது போலும்! அவர் அக்குறட்கருத் தைத் தேம்பாவணி மகிழ்வினைப் படலத்தில் சூசையப்பரும் மரியம்மையாரும் அறம் ஆற்றிய முறையைக் கூறும் பகுதியில் அழகாக அமைத்துக் காட்டுகிறார்:

**"உழுதுண் பார்உயிர் வாழ்பவர் ; மற்றெலாம்**
**தொழுதுண் பார்எனின், தாம்தொழில் செய்தபின்**
**அழுதுண் பார்கொடை கோடல்இல் லாயின**
**பொழுதுண் பாரிலி யார்எனப் பூசவே "[1]**

என வீரமாமுனிவர் உள்ளத்தில் உருக்கொண்ட பாடல், வள்ளுவரின் வழியில் தோன்றியது என்பதை இதைப் படித்த அளவில் உணர்ந்துகொள்ளலாமன்றோ?

திருவள்ளுவர் அருட்செல்வம் பொருட்செல்வங் களின் இயல்பை விளக்கும்போது,

**"அருட்செல்வம் செல்வத்துட் செல்வம்; பொருட்செல்வம்**
**பூரியார் கண்ணு முள."**

என்று கூறுகிறார். அருட்செல்வரான வீரமாமுனிவர் உள்ளத்தில் இக்குறள் ஆழப்பதிந்துள்ளது. அவர் இக்

---

1. தேம்பா, மகிழ்வினை. 36

குறளை மகவருள் படலத்தில் மாண்பறிந்து எடுத்தாள் கின்றார். சூசையப்பரும் மரியம்மையாரும் குடிக்கணக் குக் கொடுப்பதற்குப் பெத்தலேம் நகர் சென்றனர் அல் லவா? அங்குத்தங்கும் இடம்தேடி வீதிதோறும் அலைந்த னர். எங்கும் இடம் கிட்டவில்லை; ஏனென்று கேட்பாரும் இல்லை. ஆதலால், அவர்கள் நகரின் வெளியேயுள்ள ஒரு குகையை நாடிச் சென்றார்கள்; வானவர் துணைக்கு வரக் குகைக்குள் நுழைந்தார்கள். துறவினால் இரவல ராய்த் தோன்றிய அந்த அருட்செல்வர்கட்குக் குகையே புகலிடமாய் அமைகிறது. இதைக் கூறும்போது வீரமா முனிவர்,

**"பூரியர் கணும்உள பொருள்செய் செல்வம்நீத்து**
**ஆரியர் விரும்பிய அருளின் செல்வமாய்ச்**
**சீரியர் வழிஇதே என்னச் சேண்தள**
**வீரியர் விருப்புஎழீஇ விளம்பிப் போயினார்."** [1]

என்று வள்ளுவர் வழிநின்று வகுத்துரைக்கிறார்.

உலகக்கவிஞரான திருவள்ளுவர் புறக்கோலத்தைப் புறக்கணிப்பவர்; அகத்தூய்மையை ஆதரிப்பவர். அவர் கூடாவொழுக்கம் என்னும் அதிகாரத்தில், "உலகம் பழிக்கும் தீயொழுக்கத்தை விட்டவர்க்கு மொட்டை யடித்தலும் சடை வளர்த்தலுமாகிய புறக்கோலங்கள் வேண்டா," என்னும் கருத்துப்பட,

**"மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம்**
**பழித்த தொழித்து விடின்."**

என்று அமைத்துத் தந்த அழகிய குறளின் திருந்திய கருத்தை வீரமாமுனிவர்,

**"கோலமே வீணடா ; குளித்தல் வீணடா ;**
**சூலமே வீணடா ; துறவு வீணடா ;**

1. தேம்பா. மகவருள். 79

காலமே மந்திரம் கதைத்தல் வீணடா ;
சீலமே கெடநசை செகுத்தில் காலென்பார்."[1]

என்று தம் நூலிற்கேற்றவாறு புதுக்கியும் திருத்தியும் அமைத்துள்ள நயம் அறிந்து மகிழ்வதற்குரியதாகும்.

திருவள்ளுவர் அன்பின் பெருமையைப் பத்துப் பாடல்களில் விரித்துரைத்துள்ளார். ஏன்? அவர் நூல் முழுவதுமே அன்புமயம் என்றாலும், அது மிகையாகாது. அவர் அன்புடைமை என்னும் அதிகாரத்தில் 'அன்பிலார் பிணம்,' என்னும் கருத்துப்பட,

"அன்பின் வழிய துயிர்நிலை ; அஃதிலார்க்
கென்புதோல் போர்த்த உடம்பு."

என்று ஓர் அழகிய குறள் அமைத்துத் தந்துள்ளார் இக்குறளைத் தம் மனத்தகத்து அமைத்து மகிழ்ந்த வீரமாமுனிவர், இதற்கு விரிவுரை செய்வார் போன்று,

"அன்பு வாய்ந்த உயிர்நிலை ; அஃதிலார்க்கு
என்பு தோலுடல் போர்த்ததென் றன்புறை
இன்பு தோய்ந்த நிலைஎனத் தானிவண்
துன்பு காய்ந்த உயிர்த்துணை யாயினன்."[2]

என்று பாடி, பாட்டுடைத் தலைவரான சூசை மாமுனிவர் அன்புள்ளத்தோடு அனைத்துயிர்க்கும் துணைவராய் வாழ்ந்த வாழ்க்கையை வள்ளுவர் வழி நின்று எடுத்துக் காட்டியுள்ளார்.

இவ்வாறு தொடர்ந்து ஆராய்ந்து பார்த்தால், தேம்பாவணி முழுவதும் வள்ளுவரின் வழி தென்படுவதைக் காணலாம். அதைக் காணுந்தோறும் நம் உள்ளத்தில் புதியதோர் இன்பம் தோன்றுவது இயல்புதானே!

---

1. தேம்பா. சித்திரகூட. 127
2. தேம்பா. பாலமாட்சி. 65

## சிந்தாமணியின் செழுஞ்சுவை :

நம் பண்ணியல் பசுந்தமிழ் பாங்குற வளரும் வகையில் பணி புரிந்த பெரும்புலவர் **திருத்தக்கதேவர்.** செல்வம் மிக்க சோழர் குடியிற்பிறந்த அவர், சீவகன் என்னும் ஒப்பற்ற தலைவனது வாழ்க்கையின் மூலம் மன்பதை உய்வதற்குரிய உண்மைகளை உணர்த்தக் கருதிச் **சீவகசிந்தாமணி** என்னும் ஒப்பற்ற பெருங் காப்பியத்தை இயற்றினர். அஃது இன்பப் பேரூற்றுயும், கருத்துக் கருவூலமாயும், கற்பனைச் சுரங்கமாயும், வாழ்க்கைக்கு வழி காட்டியாயும் விளங்குகிறது. அன்றியும், அது தமிழ்க் காப்பியங்கள் பல தோன்றுவதற்கு ஒளி காட்டிய கலங்கரை விளக்கமாயும் உதவியது. நம் செந்தமிழ் மொழியில் கடவுள் வாழ்த்து, நாட்டுவளம், நகரவளம் ஆகியவற்றை அமைத்து, விருத்தப்பாவால் பாடிய முதற்காப்பியம் சிந்தாமணியேயாகும். தெய்வத் தமிழில் பெரிய புராணம் பாடிய சேக்கிழாருக்கு வழி காட்டியதும் அக்காவியமேயாகும். சிந்தாமணியின் செழுஞ்சுவையில் ஈடுபட்டு உள்ளம் தோய்ந்த உணர்ச்சிப் பெருக்கினுலேயே கம்பர் உள்ளத்திலிருந்து இராம காதை மலர்ந்தது என்பர். தமிழ் வளர்த்த வீரமா முனிவரும் சிந்தாமணியின் செழுஞ்சுவைக்குத் தம் உள்ளத்தைப் பறிகொடுத்தார்; தம்மைப்போலவே தவக்கோலம் கொண்ட திருத்தக்கதேவர், சமணம் தழைக்கவும், தமிழ் வளரவும் சிந்தாமணியைப் பாடியதைப்போலத் தாமும் கிறித்தவம் தழைக்கவும் தமிழ் வளரவும் ஒரு காப்பியம் செய்தல் வேண்டும் என்று ஆர்வம் கொண்டார்; அந்த ஆர்வத்தின் முதிர்வாலேயே தேம்பாவணி என்னும் தெய்வக் கலைக்கோவிலை ஆக்கித் தந்தார். ஆகையாலேதான், தேம்பாவணியில் சிந்தாமணியின் நடை காட்சியளிக்கிறது; செழுஞ்சுவை சுரக்கின்றது. வீரமாமுனிவர், சிந்தாமணியில் அங்

கங்கேயிருந்து ஒவ்வோர் அகப்பை முகந்து நிரப்பித் தம் காவியத்தை அழகுபடுத்தியுள்ளார்.

திருத்தக்கதேவர் நன்னுடாயும் பொன்னுடாயும் திகழ்ந்த ஏமாங்கத நாட்டு வளத்தைக் கூறத் தொடங்குகிருர். இயற்கை வளம் நிறைந்த அந்நாட்டில் தென்னேக்கும் கமுகுக்கும் பலாவுக்கும் வாழைக்கும் குறைவில்லே. அங்குத் தென்னே மரங்கள் வானுற வளர்ந்து நிற்கின்றன. அவற்றிற்குலேகுலேயாய்க் காய்கள் காய்த்துத் தொங்குகின்றன. அவற்றில் தேங்காய்களே வெட்டுவாரின்மையாலோ என்னவோ, அவை தாமே விழுகின்றன. ஒரு மரத்திலிருந்து ஒரு தேங்காய் விழுந்தால், அஃது அருகே நிற்கும் கமுகைத் தாக்கி, அதிலுள்ள தேனிருலேக் கீறி, பலா மரத்திலுள்ள பலாப்பழத்தைப் பிளந்து, மாமரத்திலுள்ள மாங்கனிகளேச் சிதறி, பிறகு வாழையில் தாவி அதிலுள்ள பழங்களே நசுக்குமாம். அப்போது அவற்றின் இனிய சாறு துளிக்குமன்றே? இதைத் திருத்தக்கதேவர், சீவகசிந்தாமணியில்,

**"காய்மாண்ட தெங்கின் பழம்வீழக்**
**கமுகின் நெற்றிப்**
**பூமாண்ட தீந்தேன் தொடைகீறி**
**வருக்கை போழ்ந்து**
**தேமாங் கனிசிதறி வாழைப்**
**பழங்கள் சிந்தும்**
**ஏமாங் கதமென் றிசையால்**
**திசைபோய துண்டே."**

என்று சுவை நலங்கனிந்த இனிய கவிதையில் வெளியிட்டார். இக்கவி இன்பம் முனிவர் உள்ளத்தைக் கவர்ந்தது போலும்! அவர் பாட்டுடைத் தலேவரான சூசைமா முனிவர் பிறந்த சூதேயா நாட்டின் வளம் கூறும்போது,

"பாய்ந்த தெங்கதின் பழங்கள் வீழ்தலால்
வாய்ந்த வாழைமா வருக்கை ஆசினி
சாய்ந்த தீங்கனி சரிந்த தேன்புனல்
தோய்ந்த வாயெலாம் இனிமை தோய்ந்தன."[1]

என்று சிந்தாமணிச் செய்யுளின் செழுஞ்சுவை அப்படியே தம் கவிதையில் ததும்பித் தோன்று மாறு அமைக்கின்ருர். இங்குச் சூதேயா நாட்டில் முக் கனிச் சாறும் ஆற்று நீரிலே கலந்து, அந்நீரைப் பருகு வோர் வாயெல்லாம் இனிமை ஊட்டத் தொடங்கிவிட் டது என்று அவர் கற்பித்துக் கூறிச் சிந்தாமணியாசிரி யருக்கும் ஒரு படி மேலே சென்றுவிடுவதைக் காண் கிருேம்.

'பொய்யாது அளிக்கும் பொன்னி'யாற்ருல் வளம் பெற்று விளங்கும் செழுமை மிக்க சோழநாட்டுப் புலவ ரான திருத்தக்க தேவருக்கு ஏமாங்கத நாடு சோழ நாடாகவே தோற்றமளித்தது போலும்! அவர் ஏமாங்கத நாட்டு நெற்பயிரின் நிலைமையைக் கூறத் தொடங்கு கிருர். அந்நாட்டு வயல்களில் நெற்பயிர்கள் தழைத்து வளர்ந்து கரு முற்றிக் கதிர்களை ஈன்றன. வயல் வளம் நிறைந்த சோழ நாட்டினரான தேவர், அப்பயிர் களின் மூன்று நிலைகளையும் கூர்ந்து கவனித்திருக்கிருர்! முதலில் கதிர் வெளி வருவதற்கு முன் இடை கனத் திருப்பதால் அது கருக்கொண்ட பச்சைப் பாம்பைப் போலக் காட்சி அளிக்கிறது; அடுத்துக் கதிர் வெளி வந்து முற்ருத நிலையில் தலை தூக்கி நிற்கிறது. இது பண்பாடு இல்லாத கீழ் மக்கள் திடீரென்று பெருஞ்செல் வம் பெறுவார்களாஞல், யாருக்கும் தலைவணங்காது செருக்குடன் நிமிர்ந்து நிற்பதைப்போலத் தோற்றமளிக் கிறது. கதிர் முற்றியதும் பயிர் தலைசாய்ந்து நிற்கிறது. இது சிறந்த கல்வியறிவுடைய சான்ருேர்கள் அடக்கத்

1. தேம்பா. நாட்டுப். 33

தோடு யாவருக்கும் தலை வணங்கிப் பணிவுடன் நடப்பதைப் போலக் காட்சி தருகிறது. இவ்வாறு சிந்தாமணியாசிரியர் பயிரின் மூவகை நிலைகளைக்கொண்டு மக்களின் நிலைகளை விளக்குகிறார். அவர் இதனை,

**"சொல்லருஞ் சூல்பசும் பாம்பின் தோற்றம்போல்**
**மெல்லவே கருவிருந் தீன்று மேலலார்**
**செல்வமே போல்தலை நிறுவித் தேர்ந்தநூல்**
**கல்விசேர் மாந்தரின் இறைஞ்சிக் காய்த்தவே."**

எனப் பாடுகிறார்.

திருத்தக்க தேவரின் இச்சொல்லோவியம் வீரமாமுனிவரின் உள்ளத்தைப் பெரிதும் கவர்ந்திருத்தல் வேண்டும். அவர் இக்கவிதைப் பொருளைத் தம் நூலில் அழகாக அமைத்துக் காட்டுகிறார்.

**"பூரி யார்திருப் போல்தலை பசியகூழ் நிறுவி**
**நீரி னார்தலை நேரநேர் வளைவொடு பழுத்த**
**ஆர மானுநெல் லறுத்தரி கொண்டுபோ யங்கட்**
**போரி தாமெனக் களித்தனர் போர்பல புனைவார்."[1]**

என்பது வீரமாமுனிவர் பாட்டு. இதில் அவர் பெரியாரைப் போலத் தலை சாய்ந்து நின்ற நெற்பயிரை அறுத்துச் சென்று போராகக் குவிப்பர் என்று முடித்துக் காட்டுகிறார்.

இவ்வாறு வீரமாமுனிவர் சிந்தாமணிச் செய்யுள்களின் செழுஞ்சுவையைத் தம் நூலில் அப்படியே அமைத்துச் சுவைப்பதோடு, சில கற்பனைகளைத் தம் போக்கிற்கு ஏற்ப மாற்றியும் அமைத்துள்ளார்; அவ்வழகினை இங்குக் கண்டு இன்புறுவோம்:

---

1. தேம்பா. நாட்டுப். 14

ஏமாங்கத நாட்டில் வானம் பொய்யாது மழை பெய்கின்றது. மழை நீர் எங்கும் பெருக்கெடுத்து ஓடு கின்றது. மலைகளினின்றும் அருவி இழிதரும் காட்சி யில் திருத்தக்கதேவரின் உள்ளம் ஈடுபடுகின்றது. அவ் வருவியைத் தேவர் ஒரு வள்ளலெனக் காண்கிறார். வள்ளல் தன் செல்வங்களை எல்லாம் இல்லாதவர்களுக்கு வாரி வழங்குவதைப் போல, அருவி காட்டிலுள்ள பொன்னும் மணியுமாகிய கொழுநிதிக் குப்பையைக் கொண்டு வந்து, ஊக்கம் இன்றி இருக்கும் சோம்பேறி களிடம் உய்த்துச் செல்கிறது என்கிறார் தேவர். இதை அவர்,

**"வள்ளற் கைத்தல மாந்தரின் மால்வரைக்**
**கொள்ளை கொண்ட கொழுநிதிக் குப்பையை**
**உள்ளம் இல்லவர்க் கூர்தொறும் உய்த்துராய்**
**வெள்ளம் நாடு மடுத்தது விரைந்தே."**

என்று கூறுகிறார். இந்த அருவிக் காட்சியை முனிவர் சிந்தாமணியிற்கண்டார் என்பது உறுதி. ஆனால், சிந்தாமணி ஆசிரியருக்கு வள்ளலெனக் காட்சி அளித்த அருவியை வீரமாமுனிவர், 'படித்த நூல்களை விரித் துரைக்கும் ஒரு பேராசிரியராய்'க் காண்கிறார். பேராசிரி யர் தாம் படித்த நூற்பொருள்களை எல்லாம் மாணவர் கள் பயனடைய விரித்துரைப்பதைப் போல, மலை குடித்த மழை நீரெல்லாம் அமுதென எங்கும் பரக்கப் பாய்ச்சுகிறது என்கிறார்.

**"படித்த நூலவை பயன்பட விரித்துரைப் பவர்போல்**
**தடித்த நீல்முகில் தவழ்தலை பொலிந்தபொன் மலையே**
**குடித்த நீரெலாம் கொப்பளித்து, அமுதென அருவி**
**இடித்து அருவொலி எழத்திரை எறிந்துருண் டிரிவ"[1]**

என்பது வீரமாமுனிவர் பாட்டு.

---

1. தேம்பா. நாட்டுப். 4

பொருட்செல்வத்தைப் பெரிதென மதித்த தேவருக்கு, அருவி, ஒரு வள்ளலெனக் காட்சி அளிக்க, கல்விச் செல்வத்தைச் சிறந்ததெனக் கருதிய தைரியநாதருக்கு அருவி பேராசிரியரெனக் காட்சி அளித்த திறம் எண்ணி எண்ணி மகிழ்வதற்குரியதன்றோ !

வீரமாமுனிவர் சிந்தாமணியின் கற்பனைக் கருத்துகளைத் தம் நூலில் கையாண்டிருப்பதைப் போல, பிற பகுதிகளையும் எடுத்தாண்டிருக்கிருர். திருத்தக்கதேவர் சமயக் கருத்துகளைத் தத்துவமாகத் தம் நூலில் விரித்துரைப்பதைப் போல, வீரமாமுனிவரும் தம் சமயத் தத்துவங்களை விரித்துரைக்கும் இடங்கள் ஒப்பு நோக்கி உணர்வதற்குரியன.

வழிப்போக்கன் ஒருவன் சீவகனைப் பார்த்து, "நீர் எவ்வூரினீர்? எவ்வூருக்கு வந்தீர்? உம் மனைவிமார் எத்தனை பேர் ? பிள்ளைகளுள் ஒழுக்கமில்லாதவர் எத்தனை பேர், ஒழுக்கமுடையவர் எத்தனை பேர்?" என்றெல்லாம் வினவ, அவனுக்கு அறிஞனை சீவகன், "இவ்வுடம்பினிடத்தேன்; இவ்வுடம்பு எடுத்தற்கு வந்தேன்; என் மனைவியர் நால்வர்; பிள்ளைகளுள் இணங்காதவர் ஒருவருமிலர்; மனத்திற்கு ஒப்பானவன் ஒருவன் உளன்," என்று விடையிறுக்கிருன். சீவகன் இறுத்த விடையின் பொருள் வழிப்போக்கனுக்கு விளங்குமா? அவன் சீவகனை எள்ளி நகையாடுகிருன். பின் வழிப்போக்கன் அதன் பொருளை விளக்குமாறு சீவகனை வேண்ட, சீவகன், "தானம், சீலம், தவம், இறைவர் பூசை என்னும் நான்குமே எனக்கு மனைவியர். இந்நால்வர் வயிற்றில் பிறந்து பயன் தருவாஞகிய **'நல்வினை'** என்னும் ஒரு மகனே உயர் பதவிக்குக் கொண்டு செல்லும் வலிமையுடையவன். அவனைப் பெற்றவரே மக்களைப் பெற்றவராவர். மற்றவர் மகனைப் பெற்றவருமல்லர்; பெற்ற மக்களும் அவர் மக்களல்லர்," என்று

விளக்கி உரைக்கிறான். இவ்வாறு திருத்தக்கதேவர் தம் சமயத் தத்துவங்களை நூலின் இடையே நயம்பட விரித்துரைப்பது வீரமாமுனிவர் உள்ளத்தைத் தொட்டிருத்தல் வேண்டும். அவர் இம்முறையைத் தழுவிக் கிறித்தவ சமயக் கருத்துகளைத் தம் நூலில் அமைக்க முற்படுகிறார். எருசலேம் நகரத்திருவிழாவின் போது, பெற்றோரைப் பிரிந்த இயேசுநாதர் ஆலயத்தினுள் சென்று அங்கிருந்து வேதம் வல்லார்களோடு தத்துவ ஆராய்ச்சியில் ஈடுபடுகிறார். அப்போது இயேசுநாதர் உலகரட்சகர் அவதரித்துவிட்டார் என்பதைக் காரணம் காட்டி விளக்குகிறார். அதைக் கேட்டுக்கொண்டிருந்த ஒருவர் இயேசு நாதரை நோக்கி, 'நின் பெற்றோர் யார்? ஊர் யாது? குலம் யாது?' என்று வினவ, இயேசு நாதர் மறைபொருளாய் மறுமொழி கூறலானார் :

"'தாதைஉண் டென்னில் தாய்இலை ; அவனும்
தாய்உளதெனில் இலை ; உதித்த
காதையும் தெளிப்ப எனக்குஓரூர் இல்லை ;
கலந்துஇரு குலத்துஉதித்து, இல்லை ;
கோதையுண்டு அழிந்த குலம்எனக்கு' என்றான் ;
'கூவிடத் தின்னவர் இலை' என்று,
ஓதையுண்டு எவரும் வியப்புறீஇ நக்கு, ஆங்கு
உணர்ந்தவை ஓர்ந்துபோ யினரே."[1]

"எனக்குத் தந்தை உண்டு என்பேனாயின், தாய் இல்லை"—(கடவுள் தத்துவத்தில்)

"தாய் உண்டு என்பேனாயின் தந்தை இல்லை"—(மனித தத்துவத்தில்)

"நான் இருக்குமிடம் நோக்கில் எனக்கு ஓர் ஊரில்லை."

1. தேம்பா. பிரிந்த மகவைக்காண். 93

"நான் இரு குலத்தில் பிறந்தவனுயிருந்தாலும், என் குலம் குறைகொண்ட குலமன்று," என்று விடையிருத்ததைக் கேட்டவர் பொருள் விளங்காமையால் நகைத்தலைச் செய்கின்றனர். இவ்வாறு வீரமாமுனிவர் சமயத் தத்துவங்களைக்கூடச் சிந்தாமணி முறையைத் தழுவித் தம் நூலில் விளக்கிச் செல்கிருர். இன்னம் இவை போலும் ஒப்புமைகள் பல இரு நூல்களிலும் காணப்படுகின்றன. கண்டு மகிழ்க !

**கம்பர் கவி இன்பம் :**

'செந்தமிழினுக்குச் சாவா வரமளிக்க மாகாவியம் செய்து மண்ணில் நிலைபெற்றவர்' கம்பர். 'கம்பன் வீட்டுக் கட்டுத்தறியும் கவிபாடும்' என்னும் பழமொழி அவர் கவி பாடும் ஆற்றலை விளக்க எழுந்தது. 'கம்பநாடன் கவிதையிற்போல் கற்ருேர்க்கு இதயம் களியாதே' என்பது அவர் கவி இன்பத்திற்குச் சான்று பகரத் தோன்றியது. 'கண்டின் சுவையெல்லாம்—சொல்லில் கனியக் காட்டி' அவர் ஆக்கித் தந்த இராம காதையைப் படித்து இன்புருத தமிழ்ப்புலவர் இருக்க இயலுமா ? தமிழ் வளர்த்த வீரமாமுனிவரும் இதற்கு விலக்கானவரல்லர். அவர் 'பாவின் சுவைக்கடல் உண்டெழுந்து, கம்பன் பொழிந்த தீம்பாற்கடலை,' ஆரப் பருகி இன்புற்ருர். கம்பரது 'செவ்விய மதுரஞ் சேர்ந்த சீரிய கூரிய தீஞ்சொல்' அவர் உள்ளத்தில் ஆழப்பதிந்தது. இதனுல், கம்பரின் புகழ்பாடிக் கன்னித் தமிழ் வளர்க்க ஆர்வம் கொண்ட வீரமாமுனிவர், கம்பரின் சொல்லையும் பொருளையும் தாம் பாடிய தேம்பாவணி முழுவதும் போற்றி அமைத்துக் கவி இன்பத்தைக் கனியச் செய்துள்ளார்.

கம்பர் அயோத்தி மாநகரை வருணிக்க முயல்கிருர். அந்நகர் எப்படி இருந்ததோ ! யார் அறிவார் ? கவிஞர்

கனவுலகிலே உலவுகிறார்; ஒரு நகர் எப்படி இருக்க வேண்டும் என்று எண்ணிப்பார்க்கின்றார். ஓர் இலட்சிய நகர் அவரது கண்ணிற்குக் காட்சி அளிக்கிறது. அந்த இலட்சிய நகரையே அயோத்தி மாநகராகப் படைத்துக் காட்டுகிறார் கம்பர்.

**"தெள்வார் மழையுந் திரையா ழியுமுட்க நாளும்**
**வள்வார் முரசம் அதிர்மா நகர்வாழு மாக்கள்**
**கள்வா ரிலாமைப் பொருள்கா வலுமில்லை; யாதும்**
**கொள்வா ரிலாமைக் கொடுப்பார் களுமில்லை மாதோ."**

என்பது கம்பர் வாக்கு.

"அயோத்தி மாநகரில் முரசம் முழங்குகின்றது. அலைகடலும் மேகமும் அவ்வோசைக்கு அஞ்சுகின்றன. அந்நகரில் கள்வர்கள் இல்லை; அதனால் ஈட்டிய பொருள்களைக் காப்பவர்களும் இல்லை. இரப்பவர்கள் இல்லை; அதனால், கொடுப்பவர்களுமில்லை," என்று கூறுகிறார் கம்பர். இத்தகைய நகரங்களே எதிர்காலத்தில் தோன்றுதல் வேண்டும் என்பது கம்பரது அவா. இன்று வினோபா பாவே அடிகளார் பாரதத்தில் வேறுபாடற்ற நிலை மலர வேண்டும் என்றுதானே முயன்று வருகிறார்! இதுவே அவர் காணும் **சர்வோதயம்.** இந்தச் சர்வோதய நகரைக் கம்பர் ஆயிரம் ஆண்டுகட்கு முன்பே காண எண்ணினார் என்பது வியப்பிற்குரியதன்றோ !

கம்பரது இக்கவியை வீரமாமுனிவர் எத்தனை முறை படித்து இன்புற்றாரோ, தெரியவில்லை. இத்தகைய நகரங்களே உலகெங்கும் தோன்றுதல் வேண்டும் என்றே அவரது நல்லெண்ணம் எண்ணியிருத்தல் வேண்டும். எனவேதான், அவர் காணும் எருசலேம் நகரும் கம்பர் கண்ட அயோத்தி நகரமாய்க் காட்சி அளிக்கிறது.

**"தெள்வாருரை முகிலுங்கடல் திரையுங்கெட முகியா**
**வள்வார்முர சதிர்மாநகர் வயின்வாழ்பவர் கொடையைக்**

**கொள்வார்இல குறையல்லது குறைவில்லதும் எனவே,**
**கள்வார்இல, கடையார்இல, கழிவார்இல நயவார்.''[1]**

இப்பாடலைப் படிக்கும்போது இதில் கம்பரின் கவி இன்பம் கனிவதைக் காண்கின்றோமல்லவா? இவ்வாறு ஒப்பிட்டுப் பார்த்து மகிழ்வது தமிழ் உள்ளம் படைத்தவர்கட்கு நல்விருந்தாகும்.

கவிச்சக்கரவர்த்தியான கம்பர் உவமைகளை இடமறிந்து எடுத்தாண்டு அரும்பொருள்களை விளக்குவதில் வல்லவர். ஒரு சமயம் கோசிக முனிவர் தயரதனை அடைந்து, தாம் செய்யும் வேள்விக்கு இடையூறாய் இருக்கும் அரக்கர்களை அழிப்பதற்கு இராமனைத் தந்துதவுமாறு, "நின் சிறுவர் நால்வரினும் கரிய செம்மல் ஒருவனைத் தந்திடுதி," என்று வேண்டினார். இதைக் கேட்ட தயரதன் எத்தகைய துன்பம் உற்றான் என்பதைக் கம்பர் அரிய உவமையால் விளக்குகிறார் :

**"எண்ணிலா அருந்தவத்தோன் இயம்பியசொல்**
**மருமத்தின் எறிவேல் பாய்ந்த**
**புண்ணிலாம் பெரும்புழையில் கனல்நுழைந்தா**
**லெனச்செவியில் புகுத லோடும்**
**உண்ணிலா வியதுயரம் பிடித்துந்த**
**ஆருயிர்நின் றூச லாடக்**
**கண்ணிலான் பெற்றிழந்தான் எனவுழந்தான்**
**கடுந்துயரம் கால வேலான்."**

என்பது கம்பர் கூற்று. இராமன் தயரதனுக்குக் கண்ணினும் சிறந்தவன்; உயிரினும் சிறந்தவன். 'நின் சிறுவர் நால்வரினும் கரிய செம்மல் ஒருவனைத் தந்திடுதி,' என்று கோசிகர் கூறிய சொல், 'புண்ணிலாம் பெரும்புழை

---

1. தேம்பா, நகரப், 64

யில் கனல் நுழைந்தாலென'த் தயரதனைப் பெருந் துன்பத்திற்குள்ளாக்கியது என்று கம்பர் கூறுகிறார். இங்குத் தயரதன், **சுரோசனன்** என்பவனைக் கொன்ற போது, அவன் பெற்றோர், 'நீயும் எம்மைப்போல மகப் பிரிவால் இறக்கக் கடவாய்,' என்று சபித்தனர். அச்சாப மொழி தயரதன் உள்ளத்தில் எறிவேல் பாய்ந்த புண் ணாய் இருந்ததென்றும், கோசிக முனிவர் மொழி அப் புண்ணில் கனல் நுழைந்தாற்போன்று புகுந்த தென்றும் குறிக்கவே கம்பர் இவ்வுவமையை எடுத்தாள் கிறார். கோசிக முனிவர் கூறிய சொல்லின் கொடுமையை விளக்கக் கம்பர் எடுத்தாண்ட உவமையின் நுண் மையை நுனித்துணர்ந்த வீரமாமுனிவர், இதைத் தம் நூலில் எடுத்தாளும் இடம் போற்றற்குரியதாகும்.

மரியன்னையார் கருத்தாங்கி ஐந்து திங்கள் கழிந் தன. அன்னையாரின் வயிறு வளர்ந்து தோன்றியதைக் கண்ட சூசையப்பர் கொண்ட ஐயம் அவர் நெஞ்சைப் புண்படுத்துகிறது. அவர் சோகத்தின் சிகரத்தில் நின்று உள்ளம் குமுறுகிறார். அதைக் குறிப்பாலுணர்ந்த மரி யன்னையார், சூசையப்பரிடம் துன்பத்தின் காரணத்தை வினவுகிறார். இது வளனார் முன்பே ஐயத்தால் கொண் டிருந்த மனப்புண்ணில் தழல் நுழைந்தாற்போன்று வருத்துகிறது. இத்தழல் தந்த துயரத்தைப் பொறுக் கலாற்றாத சூசையப்பர் மரியன்னையாரைப் பிரிய எண் ணுகிறார். இதை வீரமாமுனிவர்,

**"கண்ணலாள் உரைத்தசொல் காதி னுட்புக,**
**புண் அளாம் பெரும்புழை புகுந்த தீயென**
**எண்ணலால், அருந்துயர் எய்திச் சூசைஉள்**
**நண்ணலாம் தழல்பொருப் பிரிதல் நாடினான்."[1]**

---

1. தேம்பா. ஐயந்தோற்று. 84.

என்று கூறுகிறார். இங்கு ஐயத்தால் புண்ணுற்ற சூசையப்பரிடம் மரியன்னையார், 'பெருகிய துயர்செயும் பிணிகள் ஏதையா?' என்று வினவியது 'புண்ணில் தீப் புகுந்தாற் போன்றிருந்தது' என்று வீரமாமுனிவர் கூறுவது, கம்பர் ஆண்ட உவமையின் அருமை விளங்குமாறு அமைந்துள்ளதன்றோ!

திருத்தொண்டர் புராணம் பாடிய சேக்கிழாரும் இவ்வுவமையைத் தம் நூலில் திறம்பட எடுத்தாண்டிருப்பது இங்கு ஒப்பு நோக்கி இன்புறத்தக்கதாகும். சிறுத்தொண்டநாயனரிடம் வந்த வைரவர் கூறப் போகும் செய்தி கடுமையானது என்பதைச் சேக்கிழார், "புண்செய்நோவில் வேல் எறிந்தாற்போலும் புகல்வது ஒன்று என்றார்," என்று கூறினர். இங்குப் புண்ணில் வேல் நுழைந்தாற்போல் என்னும் உவமையைச் சேக்கிழார் இடமறிந்து எடுத்தாண்டுள்ளது இன்பம் பயக்கின்றது. இவற்றால், உவமைகளை எடுத்தாளுவதில் பெரும்புலவர்களின் உள்ளங்கள் ஒத்து விளங்குவதை அறிகின்றோம்.

கோசல நாடு செய்தவப்பயனால் தோன்றிய இராமன், வில்லின் செல்வனாய் விளங்குகிறான். அவன் தருவனத்துள் கோசிகர் செய்த தவவேள்வியைத் தடுத்து அழித்து வந்த தாடகை வதத்தை முடித்துவிட்டு, முனிவரோடும் தம்பி இலக்குவனோடும் மிதிலைத் திருநகரை அடைகிறான். அங்கு எண்ணரு நலத்தினளான சீதையைத் திருமணம் செய்யும் வாய்ப்பு அவனுக்கு எய்த இருக்கிறது. அதற்கு அவன் மேரு மலை போன்ற சிவ தனுசை நாணேற்ற வேண்டும். ஆண் சிங்கம் போன்ற இராமன் அது செய்ய இசைகிறான். உறுவலி யானையை ஒத்த வீரர் அறுபதினயிரவர் வில்லை எடுத்து வந்து அவன் முன் இடுகின்றனர். நிமிர்ந்த தோளையும் நீண்ட கைகளையுமுடைய இராமனைக் கண்ட ஜனகன், 'சீதைக்கு ஏற்ற கணவன் இவனே!" என்று முடிவு

கட்டுகிருன்; எப்படியாவது சீதையை இராமனுக்கு மணம் முடித்திட வேண்டும் என்று துடிக்கிருன். ஆனுல், திருமணத்திற்கு இடையூருக வில் இடையிலே கிடக்கின்றது. ஜனகன், போதகம் அனைய இராமனது பொலிவை நோக்கித் தன் மாதினை நோக்கி, வேதனை தருகின்ற வில்லையும் நோக்குகிருன். இராமன் ஆண் சிங்கம் போல எழுந்து வில்லை நெருங்குகிருன். அது சீதைக்குச் சூட்டுவதற்குரிய மணமாலையாக அவனுக்குக் காட்சி அளிக்கிறது. இராமன் வில்லை நாணேற்றுவதைக் காண மக்கள் பெருந்திரளாய்க் கூடி இமை கொட்டாது பார்த்து நிற்கின்ருர்கள். அப்படி நிற்கின்றவர்கள், இராமன் வில்லை எடுத்ததைக் கண்டார்கள்; பின் அது முறிந்த ஒலியைக் கேட்டார்கள்; ஆனுல், வில்லை நாணேற்றியதை அவர்களால் காண இயலவில்லை. அவ்வளவு விரைவில் இமைப்பொழுதில் யாவும் நிகழ்ந்துவிடுகின்றன. இதைக் கம்பர்,

**"தடுத்திமை யாம லிருந்தவர் தாளின்**
**மடுத்ததும் நாணுதி வைத்ததும் நோக்கார்**
**கடுப்பினி லியாரும் அறிந்திலர் கையான்**
**எடுத்தது கண்டிலர் இற்றது கேட்டார்."**

என்று கூறுகிருர். இந்த அமுதக் கவிதையைப் பலமுறை படித்து இன்புற்ற வீரமாமுனிவருக்கு இக்கருத்தைத் தம் நூலில் அமைப்பதற்குரிய ஓர் இடம் பொருத்தமாய் வாய்க்கிறது. **தாவீது** என்பவன் **கோலியாத்து** என்னும் கொடியவனைக் கவண் எறிந்து வீழ்த்துகிருன். ஆனுல், எல்லாம் இராமன் சிவதனுசை நாணேற்றிய கதையாகவே நடக்கின்றன. அங்குக் கூடி நின்று இமை கொட்டாது பார்த்து நின்ற மக்கள் தாவீது கவணிற் கல்லை வைத்ததையும், அதைச் சுழற்றிக் கோலியாத்தின் நெற்றிக்குக் குறிவைத்துச் செலுத்தியதையும் காண

வில்லை; ஆனால் அந்தக் கல் பாய்ந்தமையால் கோலியாத்து வீழ்கின்றதைமட்டும் பார்க்கின்றார்கள். இதை வீரமாமுனிவர்,

**"கல்லை ஏற்றலும் கவணினைச் சுழற்றலும் அக்கல்**
**ஒல்லை ஓட்டலும் ஒருவரும் காண்கிலர்; இடிக்கும்**
**செல்லை ஒத்தன சிலைநுதற் பாய்தலும் அன்னான்**
**எல்லை பாய்ந்திருள் இரிந்தென வீழ்தலுங் கண்டார்,"[1]**

என்று கூறுகிறார். இச்செய்யுளை ஒரு முறைக்கு இரு முறை இசையுடன் படித்து இன்புறுங்கால் இராமன் வில்லை முறித்த காட்சியும், தாவீது கோலியாத்தை வீழ்த்திய காட்சியும் நம் மனக்கண் முன் மாறிமாறி வந்து நிற்கின்றன அல்லவா?

இராமன் தாயுரை கொண்டு தாதை உதவிய தரணியைத் தீவினை என்ன நீத்துக் கானகம் செல்கிறான். அயோத்தி நகரம் கவலைக்கடலுள் ஆழ்ந்து கிடக்கிறது. தசரதன் கதறி அழுது மூர்ச்சித்துக் கிடக்கிறான். அனைவரும் அழுது புலம்புகின்றனர். மக்கள் மட்டுமா?

**"ஆவும் அழுத அதன்கன் றழுத அன்றலர்ந்த**
**பூவும் அழுத புனற்புள் ளழுத கள்ளொழுகும்**
**காவும் அழுத களிறழுத கால்வ யப்போர்**
**மாவும் அழுதஅம் மன்னவனை மானவே."**

என்று பாடுகிறார் கம்பர். இதைப் படிக்கும் நாமும் அழுகிறோம்! வீரமாமுனிவர் தமிழ் உள்ளம் படைத்தவர். ஆயினும், இதைப் படித்த அவரும் உள்ளம் உருகி இருத்தல் வேண்டும். அந்த உருக்கத்தாலேதான் அவர் இப்பாடலைத் தம் காப்பியத்தில் ஊடுருவச் செய்கிறார்.

1. தேம்பா, வளன் சனித்த. 29.

சூசை முனிவரும் மரி அன்னையாரும் இயேசு நாதரை அழைத்துக்கொண்டு எருசலேம் நகரில் நடை பெற்ற திருவிழாவிற்குச் செல்கின்றனர். அங்குக் கூடி யிருந்த கூட்டத்தில் பன்னிரு வயதினரான இயேசு நாதர் காணுமற்போய்விடுகிருர். அப்போது அவர்கள் கொண்ட பெருந்துயரத்தை என்னென்று உரைப்பது! அவர்கள் கன்றை இழந்த பசுவைப் போல வருந்தி நக ரின் அகத்தும் புறத்தும் மைந்தரைத் தேடி மனங்குலை கின்றனர். சூசை முனிவர், 'என் மகிழ்ச்சியை எல்லாம் என் உயிர் காவலன் எடுத்துச் சென்றுவிட்டானே!' என்று கூறி வாய் விட்டு அழுகின்ருர். சூசையப்பர் மட்டுமா அழுகின்ருர்?

**"கிளியொடு அன்னம் அழக்குயில்கள் கெழுமியழ**
**அளியொடு அலரும் அழப்புனலும் விம்மியழ**
**வளியொடு அங்கா வருந்தி அழ, வளன் அழுவான்;**
**'களியொடு அகன்ருன் என் காவலன்' என் ஓதையினுன்."**

என்று பாடுகின்ருர் முனிவர். இங்குத் தயரத மன்னனை மானவே சூசை முனிவரும் அழ, அந்நாட்டு இயற்கைப் பொருள்கள் எல்லாம் அழுகின்றனவல்லவா? அவற் ருேடு நம்மையும் அழ வைக்கின்ற கவிஞரது ஆற்றலை என்னென்பது!

கம்பர் தீட்டும் மற்ருேர் ஓவியத்தைக் காண்போம்: ஒரு நாள் இராமன் பஞ்சவடியில் சீதையோடு இன்பமாய் உலவி வருகின்ருன். அங்கு நடமாடி நின்ற பெண் அன் னங்கள் சீதையின் நடையழகைக் கண்டு நாணத்தால் ஒதுங்கி ஒளிக்கின்றன. அவை அவ்வாறு ஒதுங்குவ தன் காரணத்தை உற்று ஆராய்ந்த இராமன், சீதை யின் நடையழகிற்குத் தம் நடையழகு ஒப்பாகாது என்ற வெட்கத்தாலேயே அவை அவ்வாறு ஒதுங்குகின்றன என்பதை உணர்கிருன். அப்போது அவன் சீதையின்

நடையின் உயர்வையும் அன்னங்களின் இயல்பையும் கண்டு முறுவல் பூத்து நிற்கிறான். இதைக் கம்பர் சொல்லோவியமாக்கிக் காட்டுகிறார்:

"ஓதிமம் ஒதுங்கக் கண்ட
உத்தமன் உழையள் ஆகும்
சீதைதன் நடையை நோக்கிச்
சிறியதோர் முறுவல் செய்தான்."

எனுமிச் சொல்லோவியம் வீரமாமுனிவரது உள்ளத்தைக் கொள்ளை கொண்டது. அவருக்குச் சூதேயா நாட்டு மயில்கள், கம்பர் கண்ட அன்னங்களாய்க் காட்சி அளிக்கின்றன. அன்னப்பறவை என்பது அழிந்துபோன ஓர் இனமன்றோ? ஆகையால், தேம்பாவணியில் அன்னம் மயிலாக மாறிவிடுகின்றது போலும்! வீரமாமுனிவர் கம்பர் கண்ட அன்னத்தைப் போலச் சூதேயா நாட்டுச் சோலை ஒன்றில் மயில்கள் நாணி நாணி நடந்த செயலை எடுத்துக்காட்டும் இடம், அறிந்து இன்புறத்தக்கதாகும்.

'ஒரு சோலையில் பெண்டிர் உலா வருகின்றனர். அவர்களைக் கண்ட மயில்கள் அவர்கள் சாயலோடு தம் சாயலை ஒப்பிட்டுப் பார்க்கின்றன; பெண்கள் அவர்கள் சாயலழகினால் தங்களை வெற்றிகொண்டு விட்டதாக மயில்கள் கருதுகின்றன. நாணத்தால் அவை மரக்கொப்புகளில் மறைகின்றன. இதைக் கண்ட பிற பறவைகள் சிரிக்கின்றன,' என்று கூறுகின்றார் வீரமாமுனிவர்:

"தோகைகொள் மயிலென மாதர் தோன்றலின்,
வாகைகொண் டாரென மயில்ஒ டுங்கலால்,
சாகைகொண்டு ஏனைய புள் சிரித்த." [1]

1.தேம்பா. நாட்டுப். 49

முனிவர் காட்டும் மயில்கள், கம்பர் காட்டிய அன்னங்களை நினைவூட்டுகின்றன. 'மயில்குயிலாச்சு தடி' என்றவாறு இங்கு அன்னம் மயிலாகிவிட்டது போலும்!

இங்ஙனம் வீரமாமுனிவர், கம்பரின் கவி இன்பத்தில் திளைத்து, அவ்வின்பத்தைத் தம் காப்பியத்திலும் கனியச் செய்துள்ள திறம், அறிந்து மகிழ்வதற்குரியதாகும்.

**பன்னூல் மணம்:**

தேம்பாவணியைப் படித்துக் காப்பியச் சுவை காணப் புகுவார், சங்க காலத்தும் இடைக்காலத்தும் பிற்காலத்தும் எழுந்த சீரிய செந்தமிழ்ப் பனுவல்களில் காணும் நயங்கள் பல அந்நூலில் மணப்பதைக் காண்பர். வீரமாமுனிவர் தாம் கற்ற தமிழ் நூற்கருத்துகளை எல்லாம் ஆங்காங்குச் சுவைத்துத் தேம்பாவணியை அழகு செய்திருப்பதைப் போல, மேலைநாட்டுக் கவிஞர்களது காப்பியக் கருத்துகளையும் எடுத்தாண்டிருப்பார் என்பதற்கு ஐயமில்லை. எனவே, தேம்பாவணியைப் பிற நூல்களோடு ஒப்பிட்டுப் படிப்பவர், அந்நூலில் பன்னூல் மணம் பரிமளிப்பதைக் காண்பர்; தேம்பாவணி உலகெலாம் அளந்த நெடுமாலைப் போல, உலக இலக்கிய வளங்களை எல்லாம் தன்னகத்துக் கொண்டு ஒப்பற்ற பெருங்காப்பியமாய் விளங்குவதை அறிவர். வனவே, தமிழ் இலக்கிய வரலாறு எழுதப் படும்பொழுது அருமை சான்ற இந்தக் காப்பியத்திற்கும் பல பக்கங்கள் உரிமை செய்ய வேண்டியிருக்கும் என்பது உறுதி.

**அணி நலம் :**

செய்யுட்கு அழகு செய்து நிற்பது அணி எனப் படும். அது சொல்லணி, பொருளணி என இரு வகைப் படும். இவ்விரு வகை அணிகளும் தேம்பாவணியை அழகு செய்கின்றன. இவ்விரண்டனுள்ளும் பொரு ளணியையே புலவர் விரும்பிப் போற்றுவர். பொருளணி களுள் சிறப்புடையது உவமை அணி. அவ்வணி பிற அணிகளுக்கெல்லாம் தாயெனக் கொள்ளத் தக்கது. இதனாலேதான் தொல்காப்பியனார் **'உவமவியல்'** மட்டும் கூறி, அதில் அவ்வணியை விரித்து விளக்கினார். கவிஞன் ஒரு பொருளை விளக்குவதற்குப் பல உபாயங் கள் உண்டு. அவற்றுள் உவமை மூலம் பொருளை விளக்குவது சிறப்புடையது. உவமை, காணப்பட்ட பொருள்களை ஒப்பிட்டுப் பார்க்கும் மனித இயல்பி லிருந்து இயற்கையாகத் தோன்றுவது. ஆகையால், இத்தகைய சிறப்புடைய உவமையை நுனித்துணர்ந்து இடமறிந்து எடுத்தாள்வது பெரும்புலவர்களுக்கே இய லுவதாகும். ஒரு பொருளுக்குரிய பல உவமைகளுள் உவமேயத்தை நன்கு விளக்குவதற்குரிய சிறந்த உவமையைத் தேர்ந்து எடுப்பது என்பது எல்லாக் கவி ஞர்களுக்கும் இயலுவதன்று. கம்பரைப் போன்ற பெரிய கவிஞர் உவமையைக் கூறிய அளவில் கேட் போரின் அறிவுக் கண்ணைத் திறக்கச் செய்துவிடு வர். வீரமாமுனிவரும் உவமை மூலம் பல அரிய உண் மைகளை எளிதில் விளங்கச் செய்துள்ளார். அவர் பழைய முறையிலுள்ள உவமைகளை எடுத்தாண்ட தோடு, புத்தம்புதிய சுவை மிக்க உவமைகளையும் ஆண்டுள்ளார். 'சிறந்த உவமைகள் பொருளின் தன்மையை விளக்குவதோடு அதனைச் சிறப்பிக்கவும் வேண்டும்,' என்று அறிஞர் **ஜான்சன்** கூறினார். வீர மாமுனிவர் எடுத்தாளும் உவமைகள் பொருளின் தன்

மையை விளக்கி அதனைச் சிறப்பிப்பதையும் காண லாம்.

வானத்தில் மேகம் திரண்டு எழுந்து கறுத்து மின்னி மழையைப் பெய்து உலகை வளப்படுத்து கிறது. இதை வீரமாமுனிவர் பல உவமைகளால் விளக்க முற்படுகிறார். "ஒருவனது புகழ் அவன் ஆக் கிய நூல் வழியாகப் பரவுவதைப் போல, வானில் மேகம் பரவியது; அவ்வாறு பரவிய மேகம், வேலாயுதம் ஒளி விடுவதைப் போல மின்னி, இறைவன் இன்னரு ளைப் போல மழையைப் பெய்தது. அதனால் உலகம் ஓவியத்தைப் போல அழகுடன் பொலிந்தது," என்று கூறுகிறார். இதை அவர்,

**"நூல்வழிப் புகழே போன்று**
**நொடிப்பினில் பரந்த மேகம்**
**வேல்வழி ஒளியே போன்று**
**மின்னியார்த் திறைவன் அன்பின்**
**பால்வழிப் பயனே போன்று**
**பகல்இரா அளவிற் றூவிக்**
**கோல்வழிப் படமே போன்று**
**கூவெலாம் கேழ்த்தது என்றான்."[1]**

என்று அழகிய கவிதையாக்கித் தருகிறார். முனிவர், வானத்தில் கார்மேகம் பரந்து செல்வதைக் கண்டு களித்திருக்கிறார். அம்மேகம் பரந்து செல்வது, ஒருவ னது புகழ் அவன் ஆக்கிய நூல் வழிப் பரவுவதைப் போல அவருக்குத் தோன்றுகிறது. மேகம் மின்னுவது வேலாயுதம் ஒளி விடுவதைப் போலத் தோன்றுகிறது. அம்மேகம் மழை பெய்வது, இறைவன் இன்னருள் சொரிவதைப் போலத் தோன்றுகிறது. இந்த அற்புதக்

1. தேம்பா. மகன் நேர். 18

காட்சியைச் சிறந்த உவமைகள் அமைய ஒரு கவிதை யாக்கித் தந்த வீரமாமுனிவர், அம்மழைக் காட்சிவைய நம்மையும் கண்டு களிக்கச் செய்துள்ளாரல்லரோ! நாம் அவர் பாடலில் மழைக் காட்சியை மட்டுமா காண்கின் ரும்! ஆண்டாளும் மாணிக்கவாசகரும் பாடிய திருப் பாவை, திருவெம்பாவைப் பாடல்களின் அழகையு மன்ரே கண்டு வியக்கின்ரும்!

கற்போரைக் களிப்புக் கடலில் ஆழ்த்தும் அணி களுள் **தற்குறிப்** பேற்ற அணி தலை சிறந்ததாகும். இயற்கை நிகழ்ச்சியில் கவிஞன் தன் குறிப்பை ஏற்றிக் கூறுவது 'தற்குறிப்பேற்றம்' எனப்படும். கவித்துறை யிலும் காப்பியத்துறையிலும் தலைமை இடம் பெற்று விளங்கும் கம்பர், இவ்வணியைத் தம் காப்பியத்தில் தக்க இடங்களில் அமைத்துப் புகழ் பெற்றுள்ளார். இராமன் கோசிக முனிவரின் வேள்வியைக் காத்துத் தாடகை வதத்தை முடித்துவிட்டு வெற்றிக்களிப்போடு முனிவரோடும் தம்பி இலக்குவனேடும் மிதிலை நோக்கி மெல்ல நடந்து வருகின்ருன். அந்நகரின் மாட மாளி கைகளில் எல்லாம் கொடிகள் பட்டொளி வீசிப் பறக் கின்றன. இராமன் வருவதையும் கொடிகள் பறப்பதை யும் தம் அகக்கண்ணல் கண்ட கம்பரின் கற்பனை உள்ளம் சிறகடித்துப் பறக்கின்றது. அவர் கற்பனை உலகிலிருந்து மிதிலை நகரத்தையே பேச வைக்கிருர். கேட்போம்:

''மிதிலை நகரமானது வருகிற இராமனைப் பார்த்து, 'சீதை உனக்காக இங்குக் காத்திருக்கின்ருள். அவளை மணந்துகொள்வதற்கு விரைந்து வா, வா!' என்று தன் கொடிகளாகிய கைகளை நீட்டி அழைப்பது போன்றிருந் தது,'' என்று கூறுகிருர்:

**''மையறு மலரின் நீங்கி**
**யான்செய்மா தவத்தின் வந்து**

செய்யவள் இருந்தாள்,' என்று
செழுமணிக் கொடிகள் என்னும்
கைகளை நீட்டி அந்தக்
கடிநகர், கமலச் செங்கண்
ஐயனை, 'ஒல்லை வா!' என்
றழைப்பது போன்ற தம்மா."

என்று தற்குறிப்பேற்றமாக அமைத்துக் காட்டுகிறார்.

இவ்வாறே வீரமாமுனிவரும் தம் நூலில் பல இடங்களில் தற்குறிப்பேற்ற அணியை நயம்பட அமைத்துள்ளார். கன்னி மரியம்மையாரும் சூசை மாமுனிவரும் திருக்குமாரரோடு நாசரத்தை விட்டு நீங்கி, எகிப்துக்குச் செல்கின்றனர். அந்நாட்டுத் தலைநகரான இராசமாபுரத்தை நெருங்குகின்றனர். அங்கு மாடங்களின் உச்சியில் மெல்லிய துகிற்கொடிகள் அசைந்து ஆடிக்கொண்டிருக்கின்றன. அவற்றின் செயல், மூவரையும் வாய் விட்டு அழைத்தால், அவ்வொலி அவர்கள் வரும் தூரத்திற்கு எட்டாதென எண்ணித் தென்றலைத் தூதாகப் போக்கியும் அழகிய கரங்களை நீட்டியும் அவர்களை அழைப்பதைப் போல அசைந்துகொண்டிருந்தன என்னும் கருத்தை,

"வரையுயிர்ப் பெனப்புகை மாட நெற்றிமேல்
நுரையுயிர்ப் பெனவிடா நுடங்கும் பூங்கொடி
உரையுயிர்ப் புறுதென வொளிர்கை நீட்டியே
விரையுயிர்ப் பொடுமிவர் விளித்தல் போலுமால்."[1]

என ஓர் அழகிய கவிதையாக்கித் தருகிறார். தெவிட்டாத தமிழ் இன்பம் தோய முனிவர் தந்த இக்கவிதை நம் உள்ளத்தில் உவகையூட்டுவதாய் உள்ளது.

---

1. தேம்பா. எசித்து. 28

நெஞ்சை அள்ளும் சிலப்பதிகாரத்திலும் இத்தகைய ஒரு காட்சி காணப்படுகிறது. கோவலனும் கண்ணகியும் மதுரையை நெருங்கும் போது,

> **"ஆரெயில் நெடுங்கொடி**
> **'வாரல்'என் பனபோல் மறித்துக்கை காட்ட"**

என்று இளங்கோவடிகள் இயம்புகிறார். மதுரை நகரத்து மீனக்கொடிகள், "கோவல கண்ணகியரை, 'வாரா தீர்' என்று கையசைத்துப் பறந்தன என்கிறார் இளங்கோவடிகள். இவற்றை எல்லாம் ஒப்பிட்டுப் பார்க்கும் போது, புலவர்களின் சிந்தனை ஓட்டத்தைச் சீர்தூக்கி அறிவதோடு நாமும் புதிய **இன்பம்** பெற்றுப் பூரிப்படைகிறோமல்லவா?

## இயற்கைப்புனைவு :

இயற்கைக் காட்சிகளைப் புனைந்துரைப்பதில் **'வோர்ட்சுவொர்த்து'** (Wordsworth) என்னும் ஆங்கிலப் புலவர் வல்லுநர் என்பர். தமிழ்ப்புலவர்களைப் பொறுத்த வரையில் பலர் வோர்ட்சுவொர்த்தாய் உள்ளனர் என்று கூறலாம். சங்ககாலப் புலவர்கள் இயற்கையைப் புனைந்துரைப்பதில் ஈடும் இணையுமற்றவர்கள். பிற்காலப் புலவர்கள் இயற்கைக் காட்சியைக் கற்பனையோடு கலந்து தரும் முறையைக் கைக்கொண்டார்கள். வீரமாமுனிவர் பிற்காலப் புலவர்கள் முறையைத் தழுவி இயற்கைக் காட்சிகளைப் புனைந்துரைக்கிறார். அவரது முறை இன்பம் பயக்கும் வகையில் புதியதோர் முறையில் அமைந்துள்ளது.

உலகத்தை ஒரு நாடக மேடையாகப் புனைந்துரைப்பது எல்லா நாட்டுப் புலவர்க்கும் உகந்த கருத்தாய் உள்ளது. 'நாடகமே உலகம்,' என்று கற்பனை செய்து

கூருத புலவரே இலர் என்று கூறலாம். இந்தக் காட்சி யின் அடிப்படையில் உலகில் எத்தனையோ நாடகக் காட்சிகளைப் புலவர்கள் கண்டு வந்திருக்கிருர்கள். வீரமாமுனிவர் கண்ட ஒரு நாடகக் காட்சியை இங்குக் காண்போம்: அவர் சூதேயா நாட்டைத் தம் கற்பனைக் கண்கொண்டு பார்க்கிருர். அங்நாட்டில் ஒரு சோலை அவருக்கு நாடக அரங்கமாய்க் காட்சி அளிக்கிறது. அந்த அரங்கத்தில் ஆடலும் பாடலும் நிகழ்கின்றன. தமிழ் மக்கள் உவப்போடு கண்டும் கேட்டும் மகிழும் கலைகளல்லவா இவை? இக்கலைகளைத் தமிழ் மக்கள் உண்மை உலகில் கண்டு களித்ததோடு காவிய உல கிலும் கண்டு மகிழ்ந்துள்ளார்கள். வீரமாமுனிவரும் தமிழ்க் காவியங்களில் இத்தகைய காட்சிகள் பலவற் றைக் கண்டு களித்திருக்கவேண்டும். அவர் சூதேயா நாட்டுச் சோலையாகிய நாடக அரங்கில் ஆடலும் பாட லும் நிகழ்வதைக் காண்கின்ருர். அவ்வரங்கில் மலர்களா கிய மேற்கட்டு அழகாய் அமைந்திருக்கிறது. வண்டு கள் வீணை இசையை எழுப்புகின்றன. மயிலாகிய நாட கப் பெண் நடனம் ஆடுகிருள். குயிலாகிய பாடகி பின் பாட்டு இசைக்கிருள். மற்றப் பறவைகள் கண்டும் கேட்டும் அனுபவிக்கின்றன. இந்த அழகான காட்சி யைக் கற்பனை உலகிலிருந்து கண்டு மகிழ்ந்த வீரமா முனிவர், இதைத் தம் காப்பியத்திற் சொல் ஓவியமாக் கிக் காட்டி நம்மையும் கண்டு மகிழ அழைக்கின்ருர்.

**“மேல்வளர் அலர்ப்படம் விரித்து வீணைசெய்**
**பால்வளர் சுரும்புஇசை பாட மாங்குயில்**
**வால்வளர் மயில்நடம் காண மறைப்புள்**
**சால்வளர் நாடக சாலை சோலையே”[1]**

என்பது அவர் தீட்டிய சொல்லோவியம்.

1. தேம்பா. நாட்டுப். 46

நாட்டுச் சோலை நாடக சாலையாய் விளங்கிய காட்சியை நாமும் கண்டு களிக்கிறோம்.

மணிமேகலை ஆசிரியரான **சாத்தனார்** தம் காப்பியத்தில் ஆடலும் பாடலும் கலந்து நிகழும் ஓர் இயற்கைக் காட்சியைக் காட்டுகிறார். ஒரு சோலையாகிய நாடக அரங்கத்தில் தும்பி குழலூத, வண்டு யாழ் வாசிக்கிறது; குயில் பாட, மயில் ஆடுகின்றது. இக்காட்சியைச் சாத்தனார் தரும் ஓவியத்திற்காண்போம் :

**"கொம்பர்த் தும்பி குழலிசை காட்டப்**
**பொங்கர் வண்டினம் நல்லியாழ் செய்ய**
**வரிக்குயில் பாட மாமயில் ஆடும்**
**விரைப்பூம் பந்தர்"**

என்று **சாத்தனார்** தந்த இச்சொல்லோவியத்தை வீர மாமுனிவரின் ஓவியத்தோடு ஒப்பிட்டுப் பார்ப்பது தனி இன்பம் தருகின்றது. இத்தகைய இயற்கைப் புனைவுகள் பல தேம்பாவணியைச் சுவைப்படுத்துகின்றன.

**நூற்சிறப்பு :**

தேம்பாவணி அரிய நயங்கள் அமைந்த சுவை யூற்றாய்த் திகழ்கின்றது; சீவகசிந்தாமணியின் காப்பிய நடையைத் தழுவி, திருக்குறளின் அரிய கருத்துகளில் தோய்ந்து, கம்பரின் கவிச்சுவை கனியப் பாடப்பட்ட அரிய நூல். இது கருத்துக்கருவூலம் ; கற்பனைக் களஞ்சியம் ; அறியாமை இருளை அகற்றி அறிவொளியைப் பரப்பும் சுடர்விளக்கு ; பத்தி நெறியைப் பரப்பும் எழிற்காப்பியம்; கத்தோலிக்கர்களின் நந்தா விளக்கு. இது படிக்கப்படிக்கத் தெவிட்டாத நடையழகும் தொடையழகும் பொருந்தியது ; சிந்தைக்கினிய சந்தச் செறிவுடையது.

இக்காவியத்தின் சிறப்பியல்புகளை உள்ளவாறு உணர்ந்த தமிழ்ப்பெரியார் ஒருவர், "தேம்பாவணியைப் படித்தும் கேட்டும் உணர்ந்தோர், கடவுளளித்த மெய்ம் மறை தெளிந்து, அறவழி நடந்து, கசடெலாம் கடந்து, கதி பெற்றுய்வர்,'" என்று பாராட்டினார். **யோகி சுத்தா யானந்த பாரதிர்** அவர்கள்,

**"வீரமா முனிவர் தைரிய நாதர்**
**விரிதமிழ்க் கலைமணம் கமழும்**
**ஆரமா முனிவர் அகத்தியர் போல**
**அருளினார் அரியநன் னூல்கள்**
**சாரமாந் தேம்பா வணியினைத் தொடினும்**
**தமிழ்மணங் கமழுமென் கரமே**
**ஈரமா நெஞ்சில் இடம்பெற நட்டால்**
**இன்பமாய் மலருமென் வாழ்வே."**

என்று வியந்து போற்றினார்கள்.

பேராசிரியர் **பூரணலிங்கம் பிள்ளை**, "தமிழ் இலக்கியத் தில் சீவகசிந்தாமணி என்ற நூலோடு பல வகையிலும் ஒப்பிடத்தகுந்தது வீரமாமுனிவர் இயற்றிய தேம்பாவணி," என்று குறிப்பிட்டார்.

"மேனாட்டுக் கலையாறும் தமிழ்நாட்டுக் கலையாறும் கலக்கும் ஏரி தேம்பாவணி," என்று பாராட்டினார் அறிஞர் **தனிநாயக அடிகளார்**.

சென்னைக் கலெக்டராய் இருந்த எல்லீசர் என்பார், தேம்பாவணியின் அருமை பெருமைகளை உணர்ந்து, 'இந்நூலை அகில உலகிற்கும் அறிமுகம் செய்து வைத் தல் அவசியம்' என்று கருதி, இந்நூற்செய்யுள்களுள் சிலவற்றை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தமைத்தார்.

பெரியார் மற்றொருவர் தேம்பாவணியைப் பிரெஞ்சு மொழியில் சுருக்கி அமைத்தார்.

இவ்வாறு நல்லறிஞர் பலர் ஆற்றிய அரும்பணியால், செந்தமிழ்க் காப்பியமாய் விளங்கிய தேம்பாவணி, பிற மொழியினரும் அறிந்து போற்றும் பெருங்காப்பியமாய் அறிஞர் நுகரும் ஆரமுதமாய் விளங்கும் சிறப்பினைப் பெற்றுள்ளது.

தேம்பாவணி ஒரு பாற்கடல். அக்கடலுள் மூழ்கித் திளைத்துப் பேரின்பம் துய்ப்பது நம் கடமை.

## அரங்கேற்றம் :

அக்கால முறைப்படி எந்த நூலாய் இருந்தாலும் அதை அறிஞர்கள் முன்னிலையில் அரங்கேற்ற வேண்டும். அப்படிச் செய்யாவிட்டால், அந்நூலை அறிஞர்கள் ஏற்றுக்கொள்ளமாட்டார்கள்.

இத்தாலி நாட்டிலிருந்து வந்த வித்தகர் ஒருவர் தமிழ் மொழியின் அழகெலாம் ஒருங்கே கனியுமாறு தெய்வக்காப்பியம் ஒன்றைச் செய்துள்ளார் என்னும் செய்தி எங்கும் பரந்தது. தமிழ்ப்பெருமக்கள் அந்நூலை மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் அரங்கேற்றுவதற்கு ஏற்பாடு செய்தார்கள். வீரமாமுனிவரும் அதற்கு இசைந்தார். நூல் அரங்கேற்றம் சிறக்க நடைபெற்றது. அங்குக் குழுமி இருந்த அறிஞர்கள் எழுப்பிய வினாக்களுக்கெல்லாம், முனிவர் தக்கவாறு விடையிறுத்துத் தம் நூலை அரங்கேற்றி முடித்தார். அரங்கேற்றத்தின் போது அவர் தேம்பாவணிப் பாடல்கள் சிலவற்றை இசையோடு பாடிக்காட்டி அப்பாடல்களுக்கு விளக்கவுரையும் கூறினார். அவற்றைக் கேட்டவர்கள் தேனுண்ட வண்டுகளென மயங்கி அந்நூலைப் போற்றினார்கள். அவர்கள் அந்நூலில் செந்தமிழ் நலங்கனிந்த கவிதைகளைக் கண்டார்கள்; உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் இனிய நடையைக் கண்டார்கள்; பத்திச்

சுவை பரந்து கிடப்பதைக் கண்டார்கள்; இயற்கைக் காட்சிகளையும் பிற அழகுகளையும் கண்டு இன்புற்றார் கள். இவ்வாறு அரங்கேற்று விழாவில் குழுமியிருந்த அறிஞர்கள், தேம்பாவணி தேனென இனிப்பதை உணர்ந்து, அந்நூலின் சிறப்பினை வியந்து போற்றிய தோடு, அந்நூலைத் தமிழ் உலகிற்கு உதவி விழுப்புகழ் பெற்ற முனிவருக்கு **'வீரமாமுனிவர்'** என்னும் விழுமிய பட்டத்தையும் சூட்டிப் பாராட்டினார்கள்.

தேம்பாவணி அரங்கேற்றம் முடிவுற்றதும் அந் நூலின் பெருமை தமிழகம் எங்கும் பரந்தது. தமிழ்ப் பெருமக்கள் அந்நூலை விரும்பிக் கற்கலானார்கள். வீர மாமுனிவரைப் பேரும் புகழும், சீரும் சிறப்பும் தேடி வந்தடைந்தன. அவர் நூலுக்குக் காப்பிய உலகில் ஒரு தனி இடம் கிட்டியது. தமிழ் வளர்த்த அயல் நாட்டினருள் முனிவர் பெயரே இன்று வரை முன்னணி யில் நின்று நிலவுகின்றது. தேம்பாவணியும் ஒப்பற்ற பெருமையுடன் இன்று நம்மிடையே உலவி வருகின்றது.

# 5. பிரபந்தப் புலவர்

பதினைன்காம் நூற்றுண்டுக்குப் பிறகு நம் செந்தமிழ் மொழியில் சிறு பிரபந்தங்கள் என்னும் ஒருவகை இலக்கியங்கள் பல்கிப் பெருகின. தமிழ்மொழிக்கு ஏற்றமும் எழிலும் தந்தவை இப்பிரபந்தங்களேயாகும். புலவர் பெருமக்கள் இந்தப் பிரபந்தங்களை மெய்ப்பொருளாகிய இறைவனைப் பாடி மக்கள் உள்ளங்களைப் பத்தி நெறியிற்செலுத்துவதற்குப் பயன்படுத்தியதோடு நாடாளும் மன்னரையும் நலமிக்க செல்வரையும் பாடிப் பொய்ப்பொருளான பணத்தைப் பெறுவதற்கும் பயன்படுத்திவந்தார்கள். ஆகையாலேதான் "நரனைப் பாடாது நாரணனையே பாடு,' என்றும், 'சீவர்களைப் பாடாது சிவனையே பாடு,' என்றும் குரல்கள் எழுந்தன. **கலம்பகம், அந்தாதி, கோவை, உலா, பிள்ளைத்தமிழ், சதகம், மாலை, தூது** என்னும் பெயர்களோடு தோன்றிய இப்பிரபந்தங்களைப் பிற்காலத்தில் தொண்ணூற்றுறு என வகைப்படுத்தினர். இவற்றிற்குரிய இலக்கணத்தை வரையறுத்துக் கூறும் நூல் '**பாட்டியல்**' எனப்பட்டது. இவ்வாறு தோன்றிய பிரபந்தங்கள் தமிழ் மணமும் தெய்வமணமும் கலந்து வீசிப் புதுமைப்பொலிவுடன்

வளர்ந்து விரிந்தன. இவற்றை எல்லாம் கற்றுத்தேர்ந்த தவக்கொழுந்தான வீரமாமுனிவர், கிறித்தவ சமய மணம் கமழுமாறு சிறு பிரபந்தங்கள் பல இயற்றி, வளரும் தமிழுக்கு வாழ்வளிக்க எண்ணினுர். அதற் கான முயற்சியில் ஈடுபட்டு உழைத்தார். அவர் உழைப் பின் பயனுகத் தமிழ்மக்கள் பிரபந்தங்கள் பலவற்றைப் பெறும்பேறு பெற்ருர்கள். அவற்றுள் **திருக்காவலூர்க் கலம்பகம்** தலை சிறந்ததாகும்.

**திருக்காவலூர்க்கலம்பகம் :**

திருக்காவலூரில் கோயில் கொண்டுள்ள அடைக் கல மாதாவின்மீது வீரமாமுனிவர் காதலாற்கசிந்துருகி ஒரு கலம்பகம் பாடிய வரலாறு முன்னமே கூறப்பட் டது. இக்கலம்பகம் கடவுளிடம் அடைக்கலம் புகும் சரணுகதி முறை கிறித்தவர்களுக்குமுண்டு என்பதை அறிவிக்கிறது. பலவகைப் பூக்களால் ஆகிய ஒருவகை மாலையைக் **கலம்பக மாலை** என்று வழங்குவதைப் போலப் பலவகைப் பாக்களால் ஆகிய பாமாலையைக் **'கலம்பகம்'** என வழங்கினர். இது புயவகுப்பு, மதங்கு, அம்மானை போன்ற பதினெட்டு உறுப்புகள் இசையுமாறு பல வகைப் பாக்களும் பாவினங்களும் மடக்குச் செய்யுளும் விரவி வர, நூறு செய்யுள்கள் அமைய அந்தாதித் தொடையால் பாடப்படுவதொரு பிரபந்தமாகும். பெருங் காப்பியம் பாடவல்ல புலவர்க்குங்கூட இச்சிறு காப் பியம் பாடுவது அரிது என்பர். ஆனுல், தமிழே வழங் காத அயல்நாட்டிலிருந்து வந்த வீரமாமுனிவர் அழகிய ஒரு கலம்பகத்தைப் பாடி முடித்தது வியப்பிற்குரிய தன்ருே! முனிவர் அடைக்கல மாதாவின் திருவருள் துணையாலேயே இக்கலம்பகத்தைப் பாடி முடித்தார் என்று கூறுதல் வேண்டும். இக்கலம்பகம் சிவப்பிரகாசர் போன்ற தமிழ்ப் பெரும்புலவர்கள் பாடிய கலம்பகங்

களுக்கு நிகரான சிறப்பைப் பெற்று இன்றும் ஒரு கதம்பமாலையென மணம் கமழ்ந்துகொண்டிருக்கின்றது.

திருக்காவலூர்க் கலம்பகத்தில் அடைக்கல மாதாவிடம் அடிகளார் கொண்ட பத்தி பரந்து பெருகுவதைக் காணலாம். அவர் அடைக்கலமாதாவிடம் கொண்ட பத்தி, பன்னிரண்டு ஆழ்வார்களுள் ஒருவரான குலசேகராழ்வார், திருவேங்கடநாதரிடம் கொண்ட பத்தியை நிகர்த்து விளங்குகின்றது. குலசேகரர் மண்ணுளும் உரிமை பெற்ற மன்னர். அவர் மாநிலமாளும் மன்னராய் அரியணையில் வீற்றிருப்பதைவிடத் திருவேங்கட நாதரின் அருகிருந்து அடியார் திருப்பணி ஆற்றுவதைப் பெரும்பேருகக் கருதி, "திருவேங்கடமலைச் சுனையில் ஒரு மீனுய்ப் பிறந்திருக்க மாட்டேனு! திருமால் நின்றருளும் அம்மலையில் ஒரு படியாய்க் கிடக்கமாட்டேனு!' என்றெல்லாம் எண்ணி ஏங்கினுர். அவரது ஏக்கம்,

"ஆனுத செல்வத்து அரம்பையர்கள் தற்சூழ
வானுளும் செல்வமும் மண்ணரசும் யான்வேண்டேன்
தேனூர்பூஞ் சோலைத் திருவேங் கடச்சுனையில்
மீனுய்ப் பிறக்கும் விதியுடையே னுவேனே !

"செடியாய வல்வினைகள் தீர்க்குந் திருமாலே !
நெடியானே ! வேங்கடவா ! நின்கோயி லின்வாசல்
அடியாரும் வானவரும் அரம்பையரும் கிடந்தியங்கும்
படியாய்க் கிடந்துன் பவளவாய்க் காண்பேனே !"

என்னும் கவிதைகளில் வெளி வந்தது.

இக்கவிதைகளில் குலசேகராழ்வாரின் பத்திப் பெருமையைக் காண்கின்றேம். வீரமாமுனிவர் திருக்காவலூர் மாதாவிடம் கொண்ட பத்தியும் இத்தகையதே! அவர் என்றும் அடைக்கலமாதாவின் அருகிலேயே இருந்து திருப்பணி புரிய ஆர்வங்கொண்டார். அவ்

வார்வத்தின் மிகுதியால், 'தேவமாதாவின் திருவடிகளைத் தாங்கும் சந்திரனாய் இருக்கமாட்டேனா! அம்மாதாவின் கூந்தல் மாலையில் வீற்றிருக்கும் வண்டாய்ப் பிறந்திருக்கமாட்டேனா! திருக்காவலூர்ச் சோலையில் பசும்புல்லாய் நின்றிருக்க மாட்டேனா!' என்றெல்லாம் எண்ணி ஏங்கினார். அவரது ஏக்கம் கவிதை உருப் பெற்று வெளி வருகிறது :

**"தாளணிந்த மதிமுதலாத் தமியனுமக்**
**கமலத்தாள் தாங்கி லேனோ !**
**கோளணிந்த குழல்அணிதார் குடைவண்டாய்ப்**
**புகழ்பாடி மதுவுண் ணேனோ !**
**வாளணிந்த வினைப்படைவெல் வலிசிங்கம்**
**ஈன்றஒரு மானாய் வந்தாள்**
**கேளணிந்த காவல்நல்லூர்க் கிளர்புனத்துப்**
**பசும்புல்லாய்க் கிடவே னோநான் ?"**

உள்ளத்துறவு பூண்ட முனிவர் உருக்கமாய்ப் பாடிய இக்கவிதையில், அவர் கொண்ட பத்தி குலசேகரரின் பத்தியைப் போன்று விளங்குவதைக் காண்கின்றோமல்லவா? அன்றியும், இவ்வழகிய பாடலின் சொல்லும் பொருளும் குலசேகரர் கவியினைத் தழுவி அமைந்து நம் உள்ளத்தைக் கனிவிக்கின்றனவல்லவா? இவ்வாறே திருக்காவலூர்க் கலம்பகம் முழுவதும், அடைக்கல மாதாவிடம் முனிவர் கொண்ட பயன் கருதாப் பத்தி பெருக்கெடுத்தோடுவதைக் காணலாம். அந்தப் பாடல்களில் தமிழ் மணமும் தெய்வ மணமும் கலந்து வீசுவதை நுகரலாம்.

கலம்பக உறுப்புகளுள் '**அம்மானை**' என்பதும் ஒன்று என்று முன்பு கூறினோம். அம்மானை என்பது, தமிழ் நாட்டு மகளிர் ஆடும் ஒருவகை விளையாட்டாகும். பண்டு தொட்டு இந்த விளையாட்டுத் தமிழகத்தில்

இருந்து வருவதை இலக்கியங்களால் உணரலாம். அம்மானைக் காய்கள் ஏழை வைத்துக்கொண்டு இரண்டு கைகளாலும் பெண்கள் உயர எறிந்து பற்றி விளையாடு வார்கள். இதை மூவர் சேர்ந்து ஒருவர் பின் ஒருவராகப் பாடிக்கொண்டே ஆடுவர். அப்பாட்டுக்கும் அம்மானை என்பதே பெயர். அம்மானை ஆடும் பெண்டிருள் முதற் பெண் பிரபந்தத் தலைவனைக் குறித்து ஒரு செய்தியைச் சொல்ல, இரண்டாம் பெண் அதனைக் குறித்து ஒரு வினவை எழுப்ப, மூன்றும் பெண் நயமாக அதற்கு ஒரு விடை இறுத்து முடிப்பாள். பாடலின் இறுதியில் பெண்ணை விளிக்கும் விளியாக 'அம்மானை' என்னும் சொல் இடம் பெறும். இவ்வாறு 'அம்மானை' என்று முடிவதாலேதான் இந்தப் பாட்டும், விளையாட்டும் அம் மானை என்னும் பெயரைப் பெற்றன போலும்!

தேவமாதா, சந்திரனைப் பாதக் குறடாகவும், சூரியனை ஆடையாகவும், உடுக்களை மகுடமாகவும் கொண்டுள்ளாள். இதைப் பாடற்பொருளாகக் கொண்டு திருக்காவலூர்க் கலம்பகத்தில் வீரமாமுனிவர் தித்திக் கும் செந்தமிழில் பாடியுள்ள அம்மானைச் செய்யுள், தேங்கு சுவை மிக்கதாய் நம் நெஞ்சை அள்ளுவதாய் உள்ளது. அம்மானை ஆடத் தொடங்கிய பெண்களுள் ஒருத்தி 'அரும்புகள் மலரும் குளிர்நிழலைச் செய்யும் மரங்கள் அடர்ந்த சோலை சூழ்ந்த திருக்காவலூரில் வீற்றிருக்கும் தேவமாதா, சூரியனை ஆடையாக அணிந் துள்ளாள்,' என்று கூற, அடுத்தவள், 'தேவமாதா ஞாயிற்றை ஆடையாக அணிந்திருந்தால், அம்மாதா வின் அரிய திருமேனியழகு வாடிவிடாதோ?' என்று ஓர் ஐய வினவை எழுப்ப, இவ்விருவர் உரையையும் செவிமடுத்திருந்த மூன்றும் பெண், 'தேவமாதாவின் திருவருட்கடலில் மூழ்கினல் வெய்யோனும் உடல் குளிர்ந்துவிடுவான்,' என்று நயமாகப் பதில் விடுக்

கிறாள். இக்கருத்தமைய முனிவர் பாடிய பாடலைக் காண்க:

**"போதலரும் தண்சினைக்காப் பூங்காவல் ஊர்அரசி**
**ஆதவனைத் தூசாய் அணிந்தனள்காண் அம்மானை;**
**ஆதவனைத் தூசாய் அணிந்தனள்என் றுமாயின்**
**மாதர்அரு மேனிநலம் வாடாதோ அம்மானை ?**
**மாதுஅருள்நீர் மூழ்கிரவி வாய்குளிரும் அம்மானை."**

இப்பாடலை நாம் பாடும்போது நம் நாவிலும் உள்ளத்திலும் தேன் ஊற்றுப் போல இனிமை சுரக்கின்றது; நம் மெய் சிலிர்க்கின்றது. இந்தப் பாடலில் அமைந்துள்ள சொல்லினிமை, தொடர் இனிமை, ஓசை இனிமை, கருத்தாழம் ஆகியவை நம்மை இன்பக் கடலுள் ஆழ்த்துகின்றன. இன்னம் இவை போன்ற இன்ப ஊற்றுன பாடல்கள் பல அக்கலம்பகத்துள் காணப்படுகின்றன.

**கித்தேரியம்மாள் அம்மானை :**

வீரமாமுனிவர் பாடிய பிற பிரபந்தங்களுள் கித்தேரியம்மாள் அம்மானை சொல்லழகும் பொருள் நயமும் பொருந்திய தனி நூல். அது தமிழ் வளமும் கவிச் சிறப்பும் வாய்ந்தது; கற்பார் கருத்தைக் கவர்வது; கர்த்தர் பணிக்குத் தம்மை உரிமைப்படுத்திய **கித்தேரியம்மையார்** வரலாற்றைக் கூறுவது :

கித்தேரியம்மையார் போர்த்துகல் நாட்டு மன்னனை **காயன்** என்பானுக்கு மகளாராய்த் தோன்றியவர்; தம் பத்தி உள்ளத்தாலும் மனிதத் தன்மையாலும் எல்லாராலும் போற்றப்பட்டவர். போர்த்துகல் மன்னனை காயன் மனைவி ஒன்பது பெண் குழந்தைகளை ஒருங்கே ஈன்று, அவற்றைத் தோழி ஒருத்தியிடம் கொடுத்து

ஆற்றில் எறிந்துவிடுமாறு ஆணையிட்டாள். அருள் உள்ளம் படைத்த அத்தோழி, அரசியின் ஆணையை நிறைவேற்ற மனமின்றி, அக்குழந்தைகளை மறைவிடத்தில் வளரச் செய்தாள். அந்நவமாதருள் மூத்தவரான கித்தேரியம்மையார், தேவமாதாவின் அருளைப் பெற்று, வேத நெறி தழைத்தோங்க உழைத்து வந்தார். அவ்வாறு உழைத்து வந்த கித்தேரியம்மையார் தன் புதல்வியார் என்பதை அறிந்த காயன், அவரை வேத நெறியைவிட்டு விலக்குவதற்கான வழிகளைச் சூழ்ந்தான்; அவரைச் சிறையிலடைத்துத் துன்புறுத்தினன். கித்தேரியம்மையார் தேவமாதாவின் திருவருளால் சிறைவீடு பெற்று, இஸ்பானிய நாட்டுப் பொம்பேரு மலையை அடைந்தார். அங்கும் அவர் கர்த்தர் பணியாற்றுவதையே தம் கடனாகக் கொண்டிருந்தார்; அக்காலத்தில், **புரோசன்** என்னும் குறுநில மன்னன் ஒருவன், கிறித்தவ நெறியை விட்டு விலகியதை அறிந்து, மீண்டும் அவனை அந்நெறியை மேற்கொள்ளச் செய்ய முயன்று வெற்றி கண்டார். அப்போது நிகழ்ந்த அற்புதங்களால் கித்தேரியம்மையாரின் பேரும் புகழும் எங்கும் பரந்தன. காயன் பின்னும் தன் புதல்வியார் கிறித்தவ நெறி தழைக்க உழைத்து வருவதை அறிந்து, அவரைக் கொன்று வருமாறு வீரன் ஒருவனை அனுப்பினன். கல்லாக் களிமகனை அவ்வீரன், கித்தேரியம்மையாரைக் கண்டு, அவர் தலையை வெட்டி வீழ்த்தினன். அம்மையார் வெட்டுண்ட தம் தலையைக் கரங்களில் ஏந்தி நின்றார். அப்போது அவர் கண்கள் அக்கொலைஞனைக் கனிவுடன் நோக்கின. அம்மையாரின் அருட்பார்வையால் நல்லறிவு பெற்றான் அக்கொடியவன்.

கித்தேரியம்மையார், தம் தலையைப் பொம்பேரு மலைக் கோவிலுக்குக் காணிக்கையாக வைத்துவிட்டு, வீட்டுலகெய்தினர். அங்கு அவர் பரமன் பதங்களைப்

பணிந்து, பழிபாவங்களைச் செய்துவந்த தம் பெற்றோருக்குப் பாவமன்னிப்பளித்து, அவர்கள் நரகு அடையாதிருக்க அருளுமாறு வேண்டினுர்; தம் தங்கையர் எண்மரையும் காத்தருளுமாறும் இறைஞ்சினுர். கித்தேரியம்மையார் மறைவிற்குப் பிறகு அவர் வாழ்ந்து வீழ்ந்த பொம்பேரு மலையில் நிகழ்ந்த அற்புதங்களுக்கு அளவில்லை.

கர்த்தர் பணிக்குத் தம்மை உரிமைப்படுத்திய கித்தேரியம்மையாரின் பற்றற்ற வாழ்வு வீரமாமுனிவரின் உள்ளத்தை உருக்கியது. அவ்வம்மையாரின் வாழ்க்கையை எண்ணி எண்ணி மனங்குழைவுற்ற வீரமாமுனிவர், அவ்வம்மையாரைத் திருக்காவலூரில் கோயில் கொள்ளச் செய்தார்; அவ்வம்மையார்மீது அம்மானை ஒன்றும் பாடினுர்; இந்த அம்மானை நூலைக் கலை நலமும் பிற நலங்களும் ஒருங்கே அமைய, சொல்லழகும் பொருட்செறிவும் பொருந்த, பத்திச் சுவை ததும்பக் கன்னெஞ்சமும் கசிந்துருகுமாறு நெஞ்சை அள்ளும் கொஞ்சு தமிழில் பாடி முடித்தார். இந்நூலின் சிறப்பை உணர்ந்த பெரியார் ஒருவர், 'சுவை நலங்கனிந்த ஓர் அற்புதச் சிறு பிரபந்தம் இது,' என்று பாராட்டினுர் என்றுல், இதன் பெருமைக்கு வேறு சான்றும் வேண்டுமோ? இந்நூலிலுள்ள சில தாழிசைகளைப் படித்து மகிழ்வோம் :

**''மெய்யாம் மறைப்பயன்போல்**
**மேய்ந்தகடல் நீர்உமிழ்ந்து**
**பொய்யா மழையால்**
**பொலிசைபொய்யா நாடெனவே**

**''பங்கயம்மேல் ஓதிமங்கள்**
**பார்ப்பொடுநற் பள்ளியுறப்**
**பொங்கயம்நீர்ச் சங்கார்ப்பப்**
**பூங்கழனி பூத்ததுவே.**

"கடைந்த தயிரல்லால்
கலங்குவன அங்கணிலை;
குடைந்தசுழி நீருமலால்
கோணிச் சுழன்றதிலை.

"தேனரும்பும் பூங்கரும்பின்
செல்வமொடு காய்த்தசெந்நெல்
கூனிரும்பால் கொய்திடும்போர்
கொள்வதலால் போர்இலதால்.

"காயும்எனக் கண்டதுலை
காயம்எனக் கண்டதுள்ளி
மாயும்எனக் கண்டதுநாள்
மாறும்எனக் கண்டதலை.

"சாயும்எனக் கண்டதுசூழ்
சாலிநெடும் பொற்கதிரே;
தேயும்எனக் கண்டதுகை
தேய்த்துரைத்த சந்தனமே.

"பூமா தணிமுடியாம்
பொற்புறுமந் நாடணிசீர்
பாமா புலவருந்தாம்
பாடுவரோ அம்மானை."

போர்த்துகல் நாட்டு நீர்வள நிலவளங்களை முனிவர் தம் வளமார்ந்த வாக்கால் நம் உள்ளத்தை உருக்கும் வகையில் இங்ஙனம் பாடியுள்ளார். ஒரு வாசகத்திற்கும் உருகாத உள்ளமும் இந்நூல் வாசகங்களைப் படிப்பதால் உருகிவிடும் என்பர். இத்தாழிசைகளேயன்றி நூல் முழுவதும் உள்ள தாழிசைகளும் செஞ்சொற்கவி இன்பம் பயக்கவல்லவாய்ப் படிப்பாரை இன்பககடலுள் திளைக்கச் செய்யும் இன்சுவை மிக்கனவாய்க் காணப்படுகின்றன.

இன்னம் இந்நூலில் பிற நூல்களிற் காண்டற்கரிய கற்பனைகளும் அணி நலன்களும் சுவை நயங்களும் அமைந்துள்ளன. இந்நூல் அளிக்கும் தூய இன்பத்தை வேறு எப்பொருள்களாலும் நாம் பெறுதல் இயலாது.

மேலும், இந்த அம்மானை நூல் ஒரு பத்திப்பனுவலாய் விளங்குகிறது என்பதையும் நாம் உணரவேண்டும். இந்நூலில் நவகன்னியரது பத்தி நிலையை வீரமாமுனிவர் பாடிச் செல்வது நம் உள்ளத்தைக் குழையச் செய்கிறது. கன்னியர் இயேசு பெருமானைக் கனிவோடு வாழ்த்துகின்றனர்; கை கூப்பி வணங்குகின்றனர். இதை முனிவர் தம் கற்பனைக் கண்ணால் கண்டு தெளிந்து அழகிய தாழிசைகளில் அமைத்துத் தருவது நமக்கு நல்விருந்தாய் உள்ளது.

கர்த்தர் புகழ் பாடும் கன்னியர் வாய் காலைக் கமலமாகவும், வணங்கும் கை மாலைக் கமலமாகவும் காட்சி தருவதாகக் கவிஞர் கூறுகிறார். இறைவனைப் பாடும் வாய், காலைக் கமலத்தைப் போல விரிகிறது; அவனை வணங்கும் கை, மாலைக் கமலத்தைப் போலக் குவிகிறது என்பது கருத்து. இதைத் தெரிவிக்கும் கவிஞரின் இனிய சொற்கள் அவருடைய இதயக் கடலினின்று கற்பனை நயத்தோடு வெளி வருவதைக் காணலாம்:

**“காலைக் கமலம்எனக்**
**கர்த்தன்புகழ் வாய்மலர**
**மாலைக் கமலம்என**
**வந்தடியில் கைகுவிய”**

என்னும் பாடலை நாம் படிக்கும் போது, நம் நா ஒன்றோ? ஊன்படிக்கும்; உளம்படிக்கும்; உயிர்படிக்கும்; உயிர்க்குயிரும் தான் படிக்குமன்றோ? இதைப் போலப் பல தாழிசைகளை முனிவர் பாடிச் செல்கிறார்.

காயன் தன் புதல்வியாரான கித்தேரியம்மை யாரைச் சிறையிலடைத்திருந்தான் அல்லனோ? அப்போது அவ்வம்மையார் தேவமாதாவின் அருளை வேட்டுப் பாடிய பாடல்கள், நம்மைப் பத்தி பரவசப்படுத்துவனவாம் :

"வானோர்க் கமுதியலே !
மண்ணோர்க் குயிர்நிலையே !
ஈனோர்க் குறுதுணையே !
என்னரசே ! மாமரியே !

"கல்லார்க்கு நூற்கடல்நீ;
காவலிலார்க் கோரரண்நீ;
இல்லார்க்கு மேல்திருநீ;
எல்லார்க்கு மெல்லாம்நீ.

"கனியீன்ற கன்னிகையே !
கன்னியர்க்கெல் லாம்தாயே !
இனிதீன்ற கன்னியெனும்
என்மேல் இரங்கலையோ !

"இருளீர்த்த வெண்பிறைமேல்
ஏறியொளிர் மெல்லடியாய் !
மருளீர்த்த நாளிருளா
வாய்த்தவழி காட்டிலையோ !

"மனங்குளிர்க்கும் செங்கதிரை
வாய்த்துடுத்த மேனிநலாய் !
இனங்குளிர்க்கு மோர்கதிரை
இன்றெனக்கு நல்கிலையோ ?"

கித்தேரியம்மையாரின் அமுதவாக்காக அமைந்துள்ள உருக்கமான இத்தாழிசைகள் கற்பார் நெஞ்சைக் கரைப்பனவாகும்.

# 6. உரை நடை வல்லாளர்

## நால்வகை உரை நடை :

'பண்டைக்காலத்தில் உரை நடை இருந்ததா?' என்னும் வினா எல்லார் உள்ளத்திலும் எழுவது இயல்பு. சங்க இலக்கியங்களென நமக்குக் கிட்டியிருப் பன எல்லாம், செய்யுள் நூல்களாய் இருத்தலினாலேயே இவ்வினா எழுகின்றது. ஆயினும், பழந்தமிழ் நூலான தொல்காப்பியத்தில், பண்டைக் காலத்தில் உரை நடை இருந்தது என்பதற்கான சான்றுகள் காணப்படுகின் றன. தொல்காப்பியனார் உரை நடையின் வரலாற்றை,

**"பாட்டிடை வைத்த குறிப்பி னானும்**
**பாவின் றெழுந்த கிளவி யானும்**
**பொருள்மர பில்லாப் பொய்ம்மொழி யானும்**
**பொருளொடு புணர்ந்த நகைமொழி யானும்என்று**
**உரைவகை நடையே நான்கென மொழிப."**

என்னும் நூற்பாவால் வெளியிட்டார். அவர் பாட்டிடை வைத்த குறிப்புகளை உரை நடையின் ஒரு பகுதியாகக் குறிக்கின்றார். பண்டை இலக்கியங்களில் பாட்டும்

உரையுமாய்க் கலந்து வரும் நூல்களை, 'உரையிடை யிட்ட பாட்டுடைச்செய்யுள்' என்பர். பெருந்தேவனார் பாரதத்தையும், தகடூர் யாத்திரையையும் உரையிடை யிட்ட பாட்டுடைச் செய்யுளுக்கு எடுத்துக்காட்டாகக் கூறுவர். ஆனால், அவ்விரு நூல்களும் இறந்துபட்டன. இன்று, உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுளுக்கு எடுத்துக் காட்டாய் இலங்குவது **சிலப்பதிகாரம்** ஒன்றே யாகும். அந்நூலில் இடையிடையே வரும் உரைநடை யைத் தொல்காப்பியனார் குறித்த உரைநடைக்கு எடுத் துக்காட்டாகக் கொள்ளலாம்.

அடுத்துப் 'பாவின்றெழுந்த கிளவி' என்று கூறி யது பாடல்களுக்குப் பொருளாக எழுதும் உரை நடை யைக் குறிக்கும்; 'பொருள் மரபில்லாப் பொய்ம்மொழி' என்றது, நீதிநூல்களை அடிப்படையாகக்கொண்டு புனைந்துரையாக எழுதும் உரை நடையைக் குறிக்கும்; 'பொருளொடு புணர்ந்த நகை மொழி' என்றது, உல கியல் நிகழ்ச்சிகளை நகைச்சுவை ததும்ப எழுதும் உரை நடையைக் குறிக்கும். இவ்வகையான உரைநடை நூல் கள் அக்காலத்தில் இருந்தமையாலேயே, இலக்கியங் கண்டு அதற்கு இலக்கணம் இயம்பிய தொல்காப்பிய னார், நால்வகை உரை நடைகளை விதந்தெடுத்து ஓதினார். எனவே, தமிழ் மொழிக்கு உரை நடை புதிதன்றாயினும், நெடுங்காலமாக மக்கள் படித்துப் பயனடைவதற்கு ஏற்ற வகையில், பல்வேறு பொருள் பற்றிய உரை நடை நூல்கள் தோன்றி வளராதது தமிழ் மொழிக்கு ஒரு பெருங்குறையாகவே இருந்து வந்தது.

**குறைக்குக் காரணம் :**

நம் தமிழகத்தில் தோன்றிய கம்பர் போன்ற பெரும் புலவர்கள், அரும்பெருங்கருத்துகள் செறிந்த இனிய செய்யுள் நூல்களைச் சொற்சுவை பொருட்சுவை ததும்

பப் பாடி, தமிழ் மொழியை வளப்படுத்தினுர்கள். அவர்கள் மக்கள் இயல்பைத் தங்கள் சீரிய கூரிய அறிவால் உணர்ந்து, கற்போர் இன்புறுமாறு அரிய செய்யுள்களையும் காப்பியங்களையும் ஆக்கிய திறன் பெரிதும் பாராட்டற்குரியதே. ஆயினும், உரை நடையில் இலக்கியச் செறிவு மிக்க நூல்களை அவர்கள் எழுதாமை ஒரு குறையேயாகும். ஆனுல், குறைக்குக் காரணம் யாதென நாம் உன்னி உணர்தல் வேண்டும். கற்பார் உளங்கொள்ளற்கு எளிதாய் இருக்கும் என்னும் திண்ணிய எண்ணத்தாலேயே பழந்தமிழ்ப்புலவர்கள் செய்யுள் நூல்களை ஆக்கி வந்தார்கள். மேலும், உரை நடையில் நூல்களை எழுதினுல் அவை பரந்து விரிந்து செல்லும். அவற்றை எழுத்தாணியால் ஏட்டில் எழுதுவதற்குப் பெருமுயற்சி வேண்டும். இன்று போல அன்று நூல்களை அச்சிட்டு வெளியிட வசதி இல்லை அன்ருே ? செய்யுள்களைச் சில்வகை எழுத்தினுல், பல்வகைப் பொருளைச் செவ்வன் ஆடியிற்செறித்து இனிது விளக்கித் திட்பமும் நுட்பமும் அமையுமாறு எழுதலாம். ஆகையாலேதான், பண்டைப் புலவர்கள் உரைநடை நூல்களில் கருத்தைச் செலுத்தாது, செய்யுள் நூல்களிலேயே செலுத்தி வந்தார்கள் என்று எண்ணவேண்டுமேயன்றி, உரை நடையே அவர்கள் அறியார்கள் என்ருே, உரையாடல்கள் கூடஅக்காலத்தில் செய்யுள் நடையிலேயே நிகழ்ந்து வந்தன என்ருே எண்ணுதல் பொருந்தாது.

**உரையாசிரியர்கள் :**

பிற்றை நாளில் **இளம்பூரணர்**, **சேனுவரையர்**, **பேராசிரியர்**, **நச்சினுர்க்கினியர்** போன்றவர்கள் நூற்பாவால் இயன்ற நூல்கட்கு உரை எழுதித் தாங்கள் உணர்ந்த அரும்பொருள்களை எளிய முறையில் உணர்த்தியுள்ளார்கள். அவர்கள் வரைந்த உரைகளும்

விரிவுரைகளுமே பின்னாளில் தமிழில் உரை நடை நூல்கள் தோன்றுவதற்கு வழி காட்டின என்று கூறலாம். பண்டைக்காலத்து உரையாசிரியர்கள் எழுதிய வளம் மிக்க வசனநடைக்குச் சில எடுத்துக்காட்டுகளை இங்குக் காண்போம் :

இளம்பூரணர் தொல்காப்பியம் பொருளதிகார நூற்பா ஒன்றுக்கு எழுதிய உரைப்பகுதி வருமாறு :

"இச்சூத்திரத்துள் பாடலுட்பயின்ற பொருள் மூன்றென ஓதி, அவற்றுள் உரிப்பொருள் என ஒன்றை ஓதினமையால், புறப்பொருளும் உரிப்பொருளாகியவாறு கண்டுகொள்க. முறைமையாற் சிறத்தலாவது, யாதானும் ஒரு செய்யுட்கண் முதற்பொருளும் கருப்பொருளும் உரிப்பொருளும் வரின், முதற்பொருளால் திணையாகுமென்பதூஉம், உரிப்பொருள் தானே வரின் அதனால் திணையாகுமென்பதூஉமாம், அவை யாமாறு முன்னர்க் காணப்படும்." (தொல். பொருள். அகத். 3)

சேனாவரையர் தொல்காப்பியச் சொல்லதிகார நூற்பா ஒன்றற்கு எழுதிய உரைப்பகுதி வருமாறு :

"ஒக்குமென்னும் சொல்லன்றே ஒப்புமையுணர்த்துவது? அச்சொல் ஆண்டின்மையான், ஒப்புமை தோன்றாமையான், 'ஒப்பில் வழியால்' என்றார், உவமையொடு பொருட்கு ஒப்பில்லை என்றார் அல்லரென்பது. 'ஒக்கும்' என்னுஞ் சொல்லை ஒப்பென்றாரென்பாருமுளர். ஒப்பில் வழியாற் பொருள் செய்குநவாவன, அன்ன, ஏய்ப்ப, உறழ, ஒப்ப என்பன முதலாகப் பொருளதிகாரத்துக் கூறப்பட்ட முப்பத்தாறனுள் ஒக்குமென்பதொழிய ஏனையவாம்."

(தொல். சொல். இடை. 2)

இம்முறையிலேயே பண்டைக்கால உரையாசிரியர்களான பேராசிரியர், அடியார்க்கு நல்லார், பரிமேலழகர் போன்றவர்கள் உரை நடைகளை எழுதியுள்ளார்கள். ஆயினும், காலத்திற்குக்காலம் உரை நடை மாறுபாடு

அடைந்து வந்திருக்கிறது என்பதை நாம் பலவேறு உரைநடைகளை ஊன்றி நோக்கினுல் உணர்ந்துகொள்ளலாம். தமிழில் உரை நடையை வளர்ப்பதாகக் கூறித் தமிழ்க்கொலை புரிந்தவர்களும் உண்டு என்பதை நாம் இங்கு நினைவுகூர்தல் வேண்டும். கி.பி. 1827ஆம் ஆண்டு **'அரிச்சுவடி'** என்னும் பெயரால் **'சென்னைக் கல்விச் சங்கம'** வெளியிட்ட நூல் ஒன்றில் காணப்படும் உரை நடைப் பகுதி வருமாறு :

'ஒரு நசுக்கான் பையன்—எனக்குத் தோள் மட்டுக்கும் வருவான் உசத்தியிலே—அவனைப் பள்ளிக்கூடத்துக்கு அனுப்பினுர்கள் அவன் அப்பனும் அம்மாளும். அன்றைய விடியற்காலம் வெகுவேடிக்கை உள்ளதாய் இருந்தது—சூரியபகவான் குளிர்ந்து பிரகாசித்தான். மரங்களின்பேரில் பக்ஷிகள் பாடினதுகள். அப்புறம் இச்சிறு பையன் தான் சுவடியை விரும்ப இல்லை—ஏனென்றுல் அவன் கூர்மையே இல்லாத ஒரு சின்ன பையன்—மேலே நான் சொன்னபடிக்கு. நான் பாணிக்கிறேன், அவன் ஒரு பெரிய பையன் ஆயிருந்தால் அவன் அதிக புத்திசாலி ஆகியிருப்பான் என்று—ஆனுல் அவனுக்கு ஒரு பெரிய மனசு இருந்தது பள்ளிக்குப் போகாமல் விளையாட."

இவ்வுரை நடை **ஹென்றி ஹர்க்னெஸ்** என்னும் துரை மகனுரும் வேங்கடாசல முதலியார் என்பவரும் சேர்ந்து எழுதியது. இவர்கள் உரை நடையை வளர்ப்பதாகக் கூறி இத்தகைய உரைநடைகளை எழுதித் தமிழை மாசுபடுத்தினுர்கள் என்றே கூறல் வேண்டும். இன்னும் வடமொழிப்பற்று மிக்கார் சிலர் வடசொற்களை மிகுதியாகக் கலந்து **மணிபிரவாளம்** என்னும் ஒரு புதிய நடையை வகுத்துத் தமிழை மாசுபடுத்தினர். மேலும், சமணர்களும் வைணவர்களும் எழுதிய வசன நூல்கள் பல இம்முறையில் இயன்றனவாகும். இத்தகையோரால் தமிழ் உரை நடை வளர்ச்சியுருது நெடுங்காலம் தட்டுத் தடுமாறி நின்றது.

## புதிய உரை நடை நூல்கள் :

உரை நடையைப் பொறுத்த வரையில் ஆங்கில நன்மக்களது முறையினை நாம் பின்பற்றுதல் வேண்டும். ஆங்கிலமொழி உரை நடை நூல்களின் வளத்தாலேயே இன்று உலக மொழியாய் வாழ்வு பெற்று விளங்குகின்றது. இந்த நூற்றாண்டில் வாழ்ந்த பெர்னாட்ஷா போன்ற அறிஞர்கள் உரைநடை மூலமாகவே ஆங்கில இலக்கியப் பூஞ்சோலையை அழகுபடுத்தினார்கள். அதனால், ஆங்கில மொழியில் சிறுவர் முதல் முதியவர் ஈறாக அனைவரும் படித்துப் பயனடையத் தக்க உரை நூல்கள் பல்கின. ஒருவன் ஆயுள் முழுவதும் முயன்று படித்தாலும் படித்து முடியாத அளவில் அம்மொழியில் உரை நடை நூல்கள் உள்ளன. அந்த நன்மக்கள் முறையினைப் பெரிதும் தழுவித் தமிழ் மொழியையும் வளப்படுத்துதல் வேண்டும்; "தொகை, வகை, விரி, மொழி பெயர்ப்பு என்னும் நான்கு வகையாக நூல் இயற்றுதல் வேண்டும்," என்று நம் தொல்லாசிரியர்கள் இட்ட நல்லாணை வழி நின்று உரை நடை நூல்களை ஆக்கித் தமிழ் வளர்ப்பது நமது கடமையாகும்.

நம் தமிழ் மொழியில். பதினெட்டாம் நூற்றாண்டு வரையில் எல்லாரும் படித்து இன்புறத்தக்க உரை நடை நூல் ஒன்றுகூட இல்லை என்னும் நிலையே இருந்து வந்தது. சமணர்களும் வைணவர்களும் எழுதிய உரை நடை நூல்கள் தமிழை மாசுபடுத்தும் மணிப்பிரவாள நடையில் இயன்றவை என்பதை முன்பே கூறினோம். அன்றியும், அவை வடமொழிப்பயிற்சி உடையார்க்கேயன்றி, ஏனையோர்க்கு எளிதில் விளங்காதவை. செய்யுளைவிட உரை நடை சிறப்புற்றிருப்பது, அஃது எல்லாருக்கும் எளிதில் விளங்கும் என்பதால்தானே? எனவே, இவற்றை எல்லாம் உணர்ந்த கிறித்தவப் பாதிரிமார், பலரும் படித்துப் பயனடையத் தகுந்த

உரை நடை நூல்களை ஆக்கித் தமிழை வளப்படுத்தும் வகையில் உழைக்கலாயினர். உரை நடைக்கு வழி காட்டியவர்கள் உரையாசிரியர்களே எனினும், காலத்திற்கேற்ற புதிய உரைநடை நூல்களைத் தோற்றுவித்த பெருமையில் பாதிரிமாருக்கும் பங்கு உண்டு. **தத்துவ போதகர், அருளானந்தர்** போன்ற மேலைநாட்டுப் பாதிரிமார் உரை நடை நூல்கள் பல எழுதியபோதிலும், அவையும் மணிப்பிரவாள நடையில் இயன்றவையாகவே இருந்தன. தத்துவபோதகர் எழுதிய **'ஆத்தும நிருணயம்'** போன்ற நூல்கள் மணிப்பிரவாள நடையில் ஆக்கப்பட்டமையாலேயே அவை தமிழ் மக்களிடையே செல்வாக்குப் பெறவில்லை. தத்துவ போதகரின் வாழ்க்கையைத் துருவி ஆராய்ந்த வீரமாமுனிவர், அவர் நூல்களில் உள்ள குறைகளைக் கண்டிருத்தல் வேண்டும். ஆகையாலேதான், அவர் மணிப்பிரவாள நடையை அறவே விலக்கித் தமிழ் நடையில் நூல்களை எழுதலானர். அவரைத் தொடர்ந்து தமிழில் **ஆறுமுக நாவலர், மறைமலையடிகளார், திரு. வி. க., செகவீரபாண்டியர்** போன்ற தமிழ்ப்பெரியார்கள் தனித்தமிழ் உணர்ச்சியோடு புதிய உரை நடை நூல்கள் பலவற்றை எழுதி வெளியிட்டார்கள். அவர்கள் தொண்டினுல் உரை நடை நூல் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாய் வளர்ந்து வந்தது. இன்று புத்தம்புதிய உரை நடை நூல்கள் நாள்தோறும் வெளிவந்துகொண்டேயிருக்கின்றன.

### வீரமாமுனிவர் இயற்றிய உரைநடை நூல்கள்:

வீரமாமுனிவர் மேனுட்டு மொழிகள் பலவற்றைக் கற்றுத் தேர்ந்த அறிஞர். அவர் அம்மொழிகளிலுள்ள உரைநடை நூல்கள் பலவற்றைப் படித்து மகிழ்ந்தவர்; அம்மொழிகளைப் போலத் தமிழ் மொழியிலும் உரை

நடை நூல்கள் பெருகுதல் வேண்டும் என விரும்பினுர். அதனுல், உரை நடை நூல்கள் பல எழுதித் தமிழ் மொழியை வளப்படுத்தும் முயற்சியில் ஈடுபட்டார். அவரது முயற்சியால் பள்ளி மாணவரும் படித்துப் பயன் பெறத்தக்க உரை நடை நூல்கள் பல வெளி வந்தன.

வீரமாமுனிவர் இயற்றிய உரை நடை நூல்களுள் **'பரமார்த்தகுரு கதை'** என்னும் நூல் தலை சிறந்தது. அந்நூல் அனைவரும் படித்து மகிழத்தகுந்த தெள்ளிய நடையில் இயன்றுள்ளது; படிக்கப் படிக்கத் தெவிட்டாத் தன்மை உடையது. அந்நூலில் வீரமாமுனிவரின் நகைச்சுவையும் வேடிக்கை உணர்ச்சியும் கலந்து மிளிர்கின்றன. அந்நூல் ஒன்றே பதினெட்டாம் நூற்றுண்டின் இறுதிவரையில் தமிழ் நாட்டுச் சிறுவர்கள் படித்து இன்புறத்தக்க நூலாய் இருந்தது என்ருல், உரைநடை நூல்களைப் பொறுத்த வரையில் தமிழுலகம் வீரமாமுனிவருக்கு எவ்வளவு கடமைப்பட்டுள்ளது என்பது கூறவும் வேண்டுமோ? அந்நூலின் பெருமையை உணர்ந்தே, ஆங்கிலம், பிரெஞ்சு, ஜெர்மன், தெலுங்கு, கன்னடம் முதலிய மொழிகளில் அதனை மொழி பெயர்த்துள்ளனர். இவ்வாறு பரமார்த்த குரு கதை அழியாத இலக்கிய வாழ்வு பெற்று விளங்குகின்றது. வீரமாமுனிவர் பரமார்த்த குரு கதையைத் தவிர, **வேதியர் ஒழுக்கம், வேத விளக்கம்** என்னும் இரு நூல்களையும் எழுதினுர். அவற்றுள் வேதியர் ஒழுக்கம் வேதத்தைப் புகட்டும் குருமார்களுக்கு அறிவு புகட்ட இயற்றப்பட்டது. திருமறைத் திருத்தொண்டரின் ஒழுக்க முறையை வகுத்துரைப்பது; தெலுங்கிலும் கன்னடத்திலும் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது; "பெஸ்கியாரின் உரை நடை நூல்களுள் வியத்தகு நூல் வேதியர் ஒழுக்கமே," என்று போப்பையரால் பாராட்டப்பெற்றுள்ளது. வேத

விளக்கம், உருவ வழிபாட்டுக்கொள்கையை மறுத்துரைத்த தரங்கம்பாடி லுத்தரன் சபையினர்க்கு மறுப்பு உரைக்கும் முறையில் எழுதப்பட்டது. இன்னம், வீரமாமுனிவர் **பேதக மறுத்தல், ஞானமுணர்த்தல், வாமன் கதை** என்னும் உரை நடை நூல்களையும் எழுதியுள்ளார்.

இம்முறையில் பலரும் படித்துப பயன் பெறத்தக்க உரை நடை நூல்கள் பலவற்றை ஆக்கித் தந்து தமிழ் மொழிக்கு வாழ்வளித்த முனிவரை 'உரை நடை வல்லாளர்' என்று போற்றுவது பொருந்துமன்றோ?

வீரமாமுனிவரது உரை நடைக்கு எடுத்துக்காட்டாக அவரது பரமார்த்த குரு கதையிலிருந்து ஒரு பகுதியும், தொன்னூல் விளக்கத்திலிருந்து மற்றொரு பகுதியும் இங்கு எடுத்துக் காட்டப்படுகின்றன :

**பரமாாத்த குரு கதையில் ஒரு பகுதி :**

பலநாள் சென்றபின் தூரப்பயணம் போகும்படி அவசரமுண்டாயிற்று. சீஷர்கள், 'அவ்வளவு தூரம் நம்முடைய குருவானவர் கால்நடையாகப் போகமுடியாது; அதிக பிரயாசமாம்,' என்று, ஒரு மோழை மாடு வாடகைக்கு அமர்த்திக் கொண்டு வந்தார்கள். அதற்கு வாடகை நாளொன்றுக்கு மூன்று பணம் கொடுக்கத் தீர்த்துப் பல அலுவலினாலே விடிந்ததின்மேல் ஒரு சாமங்கடந்த பின் குருவும் சீஷர்களும் பயணம் புறப்பட்டுப் போனார்கள். கடுவேனில் என்னுங் கோடை காலமாகையால்,அவர்கள் நடக்க நடக்கக் கொள்ளி கொண்டு சுடுகிறது போலச் சுள்ளுச்சுள்ளென வெயிலெரிக்க, மரம்மட்டை, குளம் குட்டை இல்லாமையால், உண்ண நீரும் ஒதுங்க நிழலும் கிடையாத வெட்ட வெளியாகிய பாலை நிலத்தில் அகப்பட்டுக்கொண்டார்கள். அப்படியே போகப் போக அகோரமும் கடூரமுமான வெயிலின் வெப்பம் பொறுமல், பசிய இளங்கீரைத்தண்டு போலக் கிழக்குருக்கள் துவண்டு கீழே விழத் தலைப்பட்டார். அதைக்கண்டு சீஷர்கள்,

மாட்டை நிறுத்தி, அவரை இறக்கி, அவர் வெப்பத்தை ஆற்றுவதற்கு நிழல் எங்குமில்லாமையால், நிறுத்தப்பட்ட மாட்டின் நிழலிலே தரையில் துணியை விரித்துப்போட்டுக் கிடத்தி, விசிறியில்லாததினால் வஸ்திரத்தினாலே விசிறிக் கொண்டிருந்தார்கள். அவருக்கு அதிலே கொஞ்சம் ஆறுதலான பிறகு குளிர்ந்த காற்று வீச, மறுபடியும் மாட்டின்மேலேற்றி மெள்ளமெள்ள நடத்திக்கொண்டு போய்ப் பொழுது போகு முன்னே ஒரு சிற்றூரிற் சென்று இறங்கினார்கள். அங்கே ஒரு சிறிய வீட்டின் நடையில் போயிருக்கும்படி வாசலுக்குள் நுழைந்தவுடன் மாட்டுக்காரனுக்கு மூன்று பணத்தை எடுத்துக் கொடுத்தார்கள். அவன் 'அது போதாது' என்றான். 'இதென்ன, முன் உன்னோடே பேசிச் சம்மதித்த நாட்கூலி மூன்று பணந்தானல்லவோ?' என்று அவர்கள் சொல்ல, அவன் மறுத்து, 'மாடு வாகனமாயேறிப் போவதற்காக உதவினதற்கு இந்தக் கூலி பொருந்தினது சரிதான்; பிறகு நடுவழியில் வெயிலுக்குக் குடையாக உதவினதற்குக் கூலி கொடுக்க வேண்டாவா?' என்று கூச்சல் போட, 'இது அநியாயம்! அநியாயம்!' என்று அவர்கள் கோபித்துக் கடுரமாய்ப் பேச, அப்புறம் மாட்டுக்காரனுக்கும் அவர்களுக்கும் சண்டையாய்ப் பெரிய ஆரவாரமுண்டானதினால், ஊரார் அறிந்து, ஆண் பெண் பெரியோர் சிறியோரெல்லாரும் ஒரு கூட்டமாகக் கூடி மொய்த்து வந்தார்கள். அவர்களில் நியாயக்காரனொருவன் சந்தடியை விலக்கி வந்து, கூச்சலையடக்கி, இரு திறத்தார் வழக்கையும் விசாரித்து, 'நல்லது, நான் சொல்லுகிற தீர்ப்புக்குள்ளாவீர்களோ? உங்கள் சம்மதியென்ன? சொல்லுங்கள்,' என்று கேட்டுப் பின்பு சொல்லத் தொடங்கினான் !

'நான் சில நாளைக்கு முன் தூர தேசத்துக்குப் பிரயாணமாய்ப் போகையில் நடுவழியே ஓர் இராத்திரி ஓர் ஊரில் ஒரு பெரிய விடுதியில் தங்கினேன்; அங்கே வந்தவர்களுக்கெல்லாம் வசிக்கும் இடம் குடிக்கூலிக்கு விடுவதன்றிச் சாப்பிடுகிறதற்கு வேண்டிய சோறு கறி முதலானவைகளுங் கிரயத்துக்குக் கொடுப்பார்கள்; ஆகையால், 'உனக்கு ஏதாவது வேண்டுமா?' என்று அவர்கள் என்னைக் கேட்ட பொழுது, 'எனக்குச் செலவுக்குப் பணமில்லாமையால், நான் கட்டுச்

சோறு கட்டிக்கொண்டு வந்திருக்கிறேன்; வேறொன்றும் தேவையில்லை' என்றேன்; அத்தருணத்தில் அங்கு வந்த மற்றவர்களுக்கு ஒரு பெரிய ஆட்டுத் தொடையை இருப்புச் சலாகையிற்கோத்து நெய் தடவித் தணலின்மேல் காட்டிப் பக்குவமாய்ச் சுழற்றிச் சுட்டார்கள்; அது சிவக்க வேக வேக அதிற் பூசிய நெய் உருகி நெருப்பில் துளித்துப் புகையத் தலைப்பட்டது; அப்போது அதன் வாசனை அதிக இரம்மியமான பரிமளமாக இருந்தது; நான் கொண்டுவந்த கட்டுச் சாதத்தை அந்த மணத்தோடே சாப்பிடுகிறது நல்லதென்று நினைத்து அதை அப்படியே சற்று நேரஞ்சுழற்றிக்கொண்டிருக்கும்படி உத்தரவு கேட்டேன்; அவ்வாறே சுழற்றிக்கொண்டிருக்க, நான் சாதத்தை அவிழ்த்தெடுத்துச் சீலையோடே ஒரு கையால் அந்தப் புகையின்மேல் பிடித்து, மற்றொரு கையால் சீக்கிரமாய் அள்ளியள்ளி அவ்வாசனையிலேயே இன்பமாய்ச் சாப்பிட்டேன்; பிறகு போகவேணுமென்றிருக்கையில், விடுதிக்காரன் வாசனை முகந்ததற்காகக் கூலி கேட்டான். நான், 'அதற்கேது கூலி?' என்றேன்; அவன் 'கொடுக்க வேணும்' என்றான்; நான் 'கொடுக்கிறதில்லை' என்று எழுந்து நடந்தேன்; அவன், 'நீ கொடாமற்போகக்கூடாது" என்று ஆணையிட்டுத் தடுத்தான்; இந்தப்படி இருவரும் வழக்கிட்டு அந்த ஊர் அதிகாரியண்டைக்குப் பிராதுக்குப் போனோம்; அவனோ, புராண பண்டிதன்; சகல சாஸ்திர நிபுணன்; அதிக புத்திமான்; மகா சமர்த்தன்; மிகவும் நியாய சூட்சுமந்தெரிந்தவன்; அந்த மகானுபாவன் பண்ணின நியாயத் தீர்ப்புக் கேளுங்கள்: 'கறி தின்றதற்கு விலை பணமும், கறி மணம் முகந்ததற்கு விலை பணத்தின் மணமுமாகும். இதுதான் தீர்ப்பு,' என்று விடுதிக்காரனை அருகே அழைத்துப் பணம் நிறைந்த பையை எடுத்து அவன் மூக்கிலே அழுந்த உரைத்துத் தேய்த்தான்; அவனும், 'மூக்குப் போச்சுது! ஐயோ! மூக்குப் போச்சுது! இந்த மட்டில் வந்த கூலி போதும் போதும்!' என்றான். 'பார்த்தீர்களோ! இதுவே நல்ல நியாயமும் உத்தம நீதியுமாம் அல்லவா? இந்தத் தீர்ப்புதான் உங்களுக்கும்; எப்படியென்றால், மாடேறி வந்ததற்குக் கூலி பணமும், மாட்டின் நிழலிலிருந்ததற்குக் கூலி பணத்தின் நிழலும் போதுமானவை. ஆகிலும், மாட்டு நிழற்கூலிக்கு இப்போது

அஸ்தமித்ததினால் பணநிழல் அகப்படாது. அதற்குப் பதிலாகப் பணச்சத்தத்தை ஒத்துக்கொள்,' என்று சொல்லி, அவனைச் சிக்கெனப் பிடித்துப் பணப்பையைத் தூக்கி அவன் காதிலே உரமாகத் தாக்கும்படி அதனால் மோதியடித்து, 'பணச்சத்தங்கேட்டையோ?' என்றான்; அவனும், 'ஆமையா, கேட்டேன்! கேட்டேன்! காது நோகிறது! போதும் கூலி; போதும், அப்பா! உனக்குப் புண்ணியமாய்ப் போகிறது! என்னை விட்டுவிடு' என்றான். அந்தச் சமயத்தில் அவனைப் பார்த்துக் குருவும், 'உன் மாடெனக்குப்போதும்; இந்தச் சஞ்சலம் இனி ஆகாது; நீ மாட்டை ஒட்டிக்கொண்டு போ. இன்னங் கொஞ்சந் தூரந்தான் பயணம் போகவேணும்; காலமே மெள்ளமெள்ள நடந்துபோகிறேன்,' என்று அவனைப் போகச் சொல்லிப் பின்பு நியாயக்காரனைப் பார்த்து, 'ஐயா, நீர் எங்கள் வழக்கைப் பாரபட்சமில்லாமல் எள்ளுக்காய் பிளந்தாற்போலச் சரியாய்த் தீர்த்தீர்! என்று அவனைப் புகழ்ந்து ஆசீர்வதித்தனுப்பினார்.

## தொன்னூல் விளக்கத்தில் ஓர் உரைப்பகுதி :

திருவள்ளுவர் உரைத்த பலவற்றுள் ஒன்றை நான் தெரிந்துரைப்பத் துணிந்தேன். அந்நாயனார் தந்த பயன் என்னும் பெருங்கடல் ஆழத்தில் மூழ்கி ஆங்கு உள்ள அருமணி ஒருங்கு எடுத்து ஒரு சிறு செப்பின் அமைத்தாற்போலத் திருவள்ளுவரது பயன் எல்லாம் விரித்துப் பகரும்படி நான் வல்லன் அல்லேன். ஆகையில், அக்கடற்றுறை சேர்ந்து ஒரு மணி எடுத்துக்காட்டால் உணர்ந்தேன். அவர் சொன்ன குறளில் ஒன்றே இங்ஙனம் நான் விரித்துரைப்பத் துணிந்தேன் அஃதாவது,

'மனத்துக்கண் மாசிலன் ஆதல்; அனைத்தறன்;
ஆகுல நீர பிற.'

என்பது. இல்லறம் துறவறம் என்ற இவ்விரண்டினுள்ளும் அடங்கி நிற்கும் எல்லா அறங்களும் மனத்தின் தூய்மையாற் பெறும் பெருமையே தருமம் எனவும், மனத்தினுள் மாசு கொண்டவன் செய்யும் தவமும் தானமும் மற்றும் யாவையும் அறத்தின் அரவமாவதன்றி அறத்தின் பயனுள அல்ல எனவும்

அக்குறளின் பயன் இவை எனவும் விரித்துக் காட்டுதும். விரிப்பவே, மெய்யும் பொய்யும் விளக்கி உட்பயன் தரும் மெய்யறத்தின் நன்மையே வெளியாய் இஃது ஒன்று உணர்ந்து நாம் அதற்கு ஒப்ப நடந்தால் இது வீடு எய்தும் வழி எனக் காணப்படும். பெரும்பொருள் நேர்ந்து பொய்ம் மணி கொள்வது கேடு என்ருயினும், பொருளை நேர்ந்தும் உடலை வாட்டியும் உயிரை வருத்தியும் மேற்கதி வீட்டிற் செல்லாச் சில பொய் அறங்களை ஈடுபடுவதிலும் கேடாம் அன்ருே? இதனை விலக்கித் தனது உயிர் ஆக்கம் காப்பது வேண்டி இக்குறட்பயன் ஆராய்வது நன்றே.

அறம் எனப்பட்ட யாவும், மன்னுயிர்க்கு ஒருயிராகவும் மனத்திற்கு ஓர் அணியாகவும் நெஞ்சத்திற்கு ஒரு செல்வமாக வும் வழங்கும் இயல்பினை உடையன. ஆகையால், புறத்துத் தோன்றும் வெற்றுக்கோலங்காட்டி அகத்துள் நுழையா. அறமோ, அறத்தின் பேறும் பெருமையும் உடையன என்பர். எப்பொருளினும் அதன் உண்மை உணர்தலே ஞானம். உணர்ந்து பொருளின் இவையே நல்லவை எனவும் இவையே அல்லவை எனவும் தெளிதல் காட்சி. தெளிந்த வழியே அல்லவை ஒருவி நல்லவை மருவி ஒழுகலே ஒழுக்கம். இந் நல லொழுக்கமே அனைத்தறன். ஆகையால், இவை எல்லாம் மன முயற்சியால் ஆகவேண்டுழி மனம் ஒவ்வா அறன் எல்லாம் பொய் என இகழப்படுவது முறையே என்பது.

அன்றியும், பிறர் நோய் கண்டு அகத்து இரங்கான், 'ஐயோ!' என வாய் பொய்த்த இரக்கம் காட்டல் தயையோ? நெஞ்சங்கடுத்த சுடுபகை கொண்டான், முகநக நட்பது நட்போ? ஒன்று ஈந்து ஒரு பத்து அடித்துக்கொள்ளத் துணிந் தான், பிறர்க்கீந்து உதவுதல் கொடையோ? மனை நகர் நாடும் அகல நீக்கி உட்பொருள் இன்பம் அணுகும் ஆசை நீங்கான் மறுதுணை இல்லா வனம் புக்குறைதல் துறவோ? பிணியுறப் பசிமிக, பகைபட மொய்த்த துன்பம் இன்பம் என உணர்ந்து அகங்கலங்காதான் புறத்துப் புலம்பாதிருப்பது பொறையே. பிறர் அழகு ஆசை மனம் புகாத் தன்னிறை காத்த மகளிர் புறத்துக்காட்டும் ஒடுக்கமுங்கற்பே; தன் மனக்கோட்டம் கண்டு நாணுதல் நாணமே; மனத்தில் இறைஞ்சிப் பிறரைப்

பணிவான் புறத்துப் பொய்யாச் சொல்லின் வணக்கமும் பணிவே; உளத்தில் கலங்காது எதிர் வெம்போர் முகத்து அஞ்சான் துணிவாய சேவகந்தானும் வீரமே.

அன்றியும் உள் ஒவ்வாமல் புறத்துத் தோன்றும் சித்திர அறத்தின் சாயலும் பயன் தரு நல்லறம் எனப்படுமாயினும், நாண் கொண்டு ஆட்டிய புன்மரப்பாவையும் களி கொண் டாட்டிய கருங்கட்பாவையும் வேறுபாடின்றி ஒக்குமெனவும் கண்ணே களியே அழகு காட்டி உள்ளுயிர் கொல்லும் நஞ் சுடைக் காஞ்சிரப் பழனும், புறத்து வீசும் மணமே ஒப்ப அகத்தும் இனிய தேறல் கொண்ட மாங்கனிதானும் ஒன் றெனவும், ஒளி பெற எழுதிய ஓவியப்படமும், உயிர் பெற் றெழில் வாழுடலும் ஒன்றெனவும், இவை வேறல்ல என்புழி அன்றே மனமுள் ஒவ்வா வரைந்தோன் முகத்தெழும் பொய் யறச் சாயலும் நெஞ்சில் வீற்றிருந்து இனிதிற்புறத்துத் தோன்றும் மெய்யற மாட்சியும் ஒன்றெனச் சொல்லவும் படுமே. பசிய பொற்றூண் நிரைத்து நாட்டி நெற்றியில் பவளப் போதிகை ஏற்றுபு வயிர நன்மணி உத்திரம் பாய்த்திப் பளிக்குச் சுவர் மேன்முகில் அகடு உரிஞ்சுயர்சிகரம் ஒளியின் மணியாற்கூட்டி வானிகர் மாளிகை அருந்தொழில் தச்சர் வழுவற முடிப்பினும், உள்ளாளரசன் கொடுங்கோல் ஓச்சும் குரூரனாயின், உலகில் ஆய ஒரு பயன் உண்டோ? அவ்வாறு ஒருவன் அருமறை ஓதினும், அரும்பொருட்கலைநூல் அளவறக் கற்கினும், பல நதி ஆடினும், பல தலம் சேரினும், வரைவில கொடுப்பினும் வழுவில நடப்பினும், கோயில் மண்டபம் குளம் முதல் பற்பல வாயிற்றருமம் என உவந்து இயற்றினும், திரள்பொருள் ஈட்டிய செல்வம் துறப்பினும், மனை நகர் நாடு மகார் சுற்றமும் துறந்து அருவனத்திடை துணையற உறை யினும், இன்புறச் சுவை சுகம் எல்லாம் மறுத்தே ஐம்பொறி கொன்று உடல் அழிய நோற்பினும், ஈரற வழியெலாம் தேரச் சொல்லினும், மனத்தூடிய வினை மாசுளனாயின் தனக் கொரு பயனும் தாராதென உணர்க.

# 7. தமிழ் அகராதிக்குத் தந்தையார்

சொற்பொருள் அறிதல் :

நாம் செய்யுள் நூல்களைப் படிக்கும்போது, பொருள் விளங்காத அருஞ்சொற்களின் பொருள்களை அறிந்து கொள்வதற்கு அகராதியைத் திருப்புகின்றோம். அகராதியில் சொற்கள் அகரவரிசையில் அமைக்கப்பட்டிருப்பதால், சிறுவர்களுங்கூட அகராதியைத் திருப்பிச் சொற்பொருளை எளிதில் அறிந்துகொள்கிறார்கள். இக்காலத்தில் கலை, விஞ்ஞானம், மருத்துவம் போன்ற ஒவ்வொரு துறைக்கும் உரிய சொற்களின் பொருள்களை விளக்குவதற்கென்று தனித்தனி அகராதிகள் தோன்றி, யாவர்க்கும் பயன்பட்டு வருகின்றன. இவ்வகராதி முறை முதலில் ஆங்கில மொழியிலேயே தோன்றியது என்பர். கி. பி. 1616ஆம் ஆண்டு, பேரறிஞர் **புல்லக்கர்** என்பவர் ஆங்கிலத்தில் அகராதி ஒன்றை அமைத்து வெளியிட்டார். அவரை அடுத்து அறிஞர் **கொக்கரன்** என்பவர் 1625ஆம் ஆண்டு மற்றோர் அகராதியைத் தொகுத்து அமைத்தார். அதன் பின்னர் **ஜான்சன்** என்பவர் 1755ஆம் ஆண்டு பேரகராதி ஒன்றை வெளியிட்டார். அதில் ஐம்பதினாயிரம் சொற்களுக்குப் பொருள்

எழுதப்பட்டிருந்தது. இன்று ஆங்கில மொழியில் ஐந்து இலட்சம் சொற்களுக்கு அதிகமாகக் கொண்ட அகராதி கள் உள்ளன. இம்முறையில் அமைந்த அகராதிகள் நம் தமிழ் மொழியில் சுமார் இருநூறு ஆண்டுகளுக்கு முன்பு இருந்ததில்லை என்ருல், 'அக்காலத்தில் தமிழ் மக்கள் அருஞ்சொற்பொருளை எப்படி அறிந்து வந்தார்கள்?' என்னும் வினு நம் உள்ளத்தில் எழுகின்றதன்ருே?

## நிகண்டு முறை :

தமிழில் அகராதி தோன்றுவதற்கு முன் தமிழ் மக்கள் சொற்பொருள் அறிவதற்கு நிகண்டுகளையே கருவி நூல்களாகப் பயன்படுத்தி வந்தார்கள். **திவாகரம், பிங்கலந்தை, சூடாமணி நிகண்டு, கயாதரம், பாரதி தீபம், பல்பொருட்சூடாமணி, பொதிகை நிகண்டு, நாநார்த்த தீபிகை** போன்ற நிகண்டுகள் வெவ்வேறு காலங்களில் தோன் றித் தமிழ் கற்பார்க்குக் கருவி நூல்களாய்ப் பயன்பட்டு வந்தன. இந்நிகண்டுகளின் துணைகொண்டே தமிழ் மக்கள் சொற்பொருள் அறிந்து வந்தார்கள். ஆனுல், இவற்றின் துணையால் சொற்பொருள் அறிவது புலவர் களுக்கேயன்றி ஏனையோர்க்கு எளிதாய் இல்லை.

நிகண்டுகளில் சொற்களை அகர வரிசையில் அமைப்பதில்லை. பல பொருட்சொற்களைச் சில முறை களைப் பின் பற்றித் தொகுத்து நூற்பா, வெண்பா, கட்டளைக் கலித்துறை போன்ற பாக்களில் அமைத் திருப்பர். சில நிகண்டுகள் ஒவ்வொரு பொருளுக்கு முரிய பல பெயர்களைத் தொகுத்துக் கூறுவன. அவை 'ஒரு பொருட்பல்பெயர்த் தொகுதி' எனப்படும். வேறு சில நிகண்டுகள், ஒவ்வொரு சொல்லுக்குமுரிய பல பொருள்களைத் தொகுத்துக் கூறுவன. அவை 'ஒரு

சொற் பல்பொருட்பெயர்த்தொகுதி' எனப்படும். இன்னம் சில, 'இரு சுடர், முக்குணம்' என்பன போன்ற தொகைப்பெயர்கள் இன்னின்ன பொருள்களை உணர்த்து வனவென்று விவரித்துரைப்பன. அவை 'பல்பொருட் கூட்டத்து ஒரு பெயர்த்தொகுதி' எனப்படும். இத்தகைய நிகண்டுகள் எல்லாம் தொல்காப்பியத்தில் காணப்பட்ட ஒரு கருவை அடிப்படையாகக் கொண்டு உருவானவை என்பதை நாம் அறிதல் வேண்டும். செழுமை என்னும் உரிச்சொல்லின் பொருளை விளக்க முற்பட்ட தொல்காப்பியனர், "செழுமை வளனும் கொழுப்புமாகும்," என்று சுருக்கமாகக் கூறினர். இம் முறையை அடியொற்றிய தமிழில் நிகண்டுகள் தோன் றின. திவாகரம், பிங்கலம் என்னும் நிகண்டுகளே தமிழில் முதலில் தோன்றிய நிகண்டுகள். இந்நிகண்டு களின் அடிப்படையில் சில சில வேறுபாடுகளோடு பின்னர்ப் பல நிகண்டுகள் தோன்றின. ஆயினும், இந்நிகண்டுகள் எல்லாரும் பொருள் அறிந்துகொள் வதற்கு ஏற்ற முறையில் அமையவில்லை என்பதை நாம் மனத்திற்கொள்ள வேண்டும். திவாகரம் எதுகை நயம் மிக்க நூற்பாக்களால் இயன்றுள்ளது. அதைச் சிறிது எளிதாக்க எண்ணிப் பிற்காலத்தில் அதிலுள்ள நூற் பாக்களை அகராதி முறையில் அமைத்து வெளியிட்டனர். அவ்வாறு வெளியிட்டவர் அதிலுள்ள நூற்பாக்களை 'ஆதிபிற்பொருள்', 'அந்தப் பொருள்,' என்று இருகூறு படுத்தி, அமைத்துள்ளனர். இவை எல்லாம் கற்ருர்க்கே அன்றி மற்ருர்க்கு விளங்குவன அல்ல. பிற்காலத்தில் தோன்றிய பாரதி தீபம் போன்ற நிகண்டுகள் அடை மொழி இன்றிப் பொருட்பெயர்களைத் தொகுத் துரைத்தன. சான்ருக,

"அரனிறை வன்சிவன் சங்கர னித்த னமலன்கங்கா
தரனுமை பங்கன் மலைவில்லி தற்பரன் ருணுசம்பு

புரதக னன்புனி தன்பிறை சூடி புலியதளோன்
பரசுத ரன்கயி லாயன் கபாலி பசுபதியே;''

என்னும் கட்டளைக்கலித்துறையில் சிவபெருமானது பெயர்களைப் பாரதி தீப ஆசிரியர் அழகாகக் கோவைப் படுத்தி உரைத்துள்ளார். ஆயினும், நிகண்டுகள் பலவற்றில் தெய்வப் பெயர்த் தொகுதி, மக்கட்பெயர்த் தொகுதி என்று பல தொகுதிகளில் சொற்கள் அமைக்கப் பட்டிருப்பதால், ஒரு சொல்லின் பொருளை அறிய வேண்டுமானுல், அச்சொல் எத்தொகுதியைச் சார்ந்தது என்பதை உணர்ந்து அப்பகுதிச்செய்யுளைப் படித்துச் சொல்லின் பொருளை அறிதல் வேண்டும். இஃது எல்லார்க்கும் எளிதாகுமா? மனவலி மிக்க நம் முன் ஞேர்கள் நிகண்டுகளை நெட்டுருச் செய்து மனத்தில் வைத்துக்கொண்டு, நடை அகராதிகளாய் விளங்கினுர் கள். இஃது எல்லார்க்கும் இயலாமையாலேதான் பிற் காலத்தில் அகராதிகள் தோன்றின. பிற்காலத்தில் எழுந்த சில நிகண்டுகளும் அகராதி முறையில் எழுந் தன. கி.பி. 1594ஆம் ஆண்டு தோன்றிய ஒரு நிகண்டு, **'அகராதி நிகண்டு'** என்றே வழங்கப்பட்டது. ஆயினும், இந்நிகண்டுகள் எல்லாம் இக்கால அகராதிகளைப் போலப் பொருள் உணர்தற்குப் பயன்படவில்லை. எனவே, அகராதிகள் தோன்றிய பிறகு நிகண்டுகள் வழக்கு ஒழிந்தன.

## தமிழ் அகராதிக்குத் தந்தையார் :

நூற்பா முதலிய பாக்களால் அமைந்த நிகண்டு களின் துணையால் சொற்பொருள் அறிவதில் ஏற்படும் இடர்ப்பாடுகளைக் கண்டுணர்ந்த வீரமாமுனிவர் மேனுட்டு மொழிகளில் உள்ளது போல, தமிழில் அரிய தோர் அகராதியை ஆக்க எண்ணினுர். அவர் காலத்தில்

அறிஞர் ஜான்சன் அமைத்த அகராதி இல்லையல்லவா? மற்றச் சிற்றகராதிகளையே அவர் பார்த்திருத்தல் கூடும். அவர் செந்தமிழ் மொழியில் வழங்கும் சொற்களைத் தொகுத்தும் வகுத்தும் அகராதி அமைக்கும் முயற்சியில் ஈடுபட்டுழைத்தார். அதற்கென்று அவர் எத்துணைக் காலம் உழைத்தார் என்பது தெரியவில்லை! அவர் இடை விடாது உழைத்துக் கி.பி. 1732ஆம் ஆண்டு '**சதுரகராதி**' என்னும் பெயரால் சிறந்த ஓர் அகராதியை ஆக்கித் தமிழ் அன்னைக்கு முத்தாரமாகச் சூட்டி மகிழ்ந்தார். அந்த அகராதியே தமிழில் தோன்றிய முதல் அகராதியாகும். அந்த அகராதி தோன்றிய பிறகு அதைத் தழுவிப் பலர் அகராதி அமைக்கும் முயற்சியில் ஈடுபட்டனர்.

**பெப்ரீசியஸ்** என்னும் கிறித்தவத் தொண்டர் ஒருவர் சதுரகராதியின் வழிநின்று, விரிவான அகராதி ஒன்றை வெளியிட்டார்; அதில் செய்யுட்சொற்களையும் உலக வழக்குச் சொற்களையும் சேர்த்து அமைத்தார்; சொற்களின் பொருளைத் தமிழிலும் ஆங்கிலத்திலும் எழுதினர். இதைக்கண்ட **ராட்லர்** என்னும் அறிஞர், பல்லாண்டுகள் முயன்று 37,000 சொற்களைத் தொகுத்து ஓர் அகராதியை அச்சிடத் தொடங்கினர். அகராதி வெளிவருவதன் முன் அவர் காலஞ்சென்றுவிட்டமையால், **டெயிலர்** என்னும் அறிஞர், அவர் விட்டுச் சென்ற வேலையை முயன்று முடித்து அகராதியை வெளிப்படுத்தினர். பிறகு **வின்சுலோ** என்னும் அறிஞர் 67,000 சொற்கள் அடங்கிய அகராதி ஒன்றை வெளிப்படுத்தினர். அதை அடுத்து இலட்சம் சொற்களைக்கொண்ட '**தமிழ் லெக்ஸிகன்**' என்னும் பேரகராதியை ஏழு தொகுதிகளாகச் சென்னைப் பல்கலைக் கழகத்தினர் வெளியிட்டனர். இந்த அகராதிகளுக்கெல்லாம் வழிகாட்டியது வீரமாமுனிவரது சதுரகராதியே என்றால், அவரைத் 'தமிழ் அகராதிக்குத் தந்தையார்' என்று பாராட்டுவது தவறாகுமா?

**சதுரகராதி :**

வீரமாமுனிவர் தொகுத்த சதுரகராதியின் அமைப்பு முறையைப்பற்றி நாம் தெரிந்துகொள்ளுதல் வேண்டும். இவ்வகராதி, நிகண்டுகளைப்போலல்லாமல், தமிழ்ச் சொற்களை 'அகரமுதல எழுத்தெல்லாம்' என்னும் திருவள்ளுவர் ஆணைவழி அடுக்கிப் பொருள் விளக்கு வது. அது பெயர் அகராதி, பொருள் அகராதி, தொகை அகராதி, தொடை அகராதி என்னும் நான்கு பகுப்புகளை உடையது. பெயரகராதியில் ஒரு சொல்லுக்குரிய பல பொருள்களும், பொருளகராதியில் ஒரு சொல்லுக்கு அதே பொருளுடைய பல சொற்களும் அகர வரிசையில் அமைக்கப்பட்டுள்ளன. அதை அமைப்பதற்கு வீரமா முனிவர் தமிழில் வழங்கிய நிகண்டுகளை எல்லாம் கற்றறிந்திருக்க வேண்டும் என்பது உறுதி. தொகை அகராதி செய்யுள் வழக்கிலும் உலக வழக்கிலுமுள்ள தொகைச்சொற்களை விளக்கிப் பொருள் கூறுகிறது. எடுத்துக்காட்டாக, 'அங்கம் நான்கு—தேர், கரி, பரி, காலாள் என்பன—இவை சதுரங்கம் எனப்படும்,' என்று பொருளை விளக்கிக் கூறுவதைத் தொகை அகராதியில் காணலாம். தொடையகராதி செய்யுள் இயற்றுவோ ருக்குப் பெரிதும் பயன்படும் முறையில் தொகுக்கப் பட்டது. இவ்வாறு நான்கு அகராதிகள் அமைந்திருப்ப தாலேதான் அதற்குச் **'சதுரகராதி'** என்னும் பெயர் வைத்தார் முனிவர். அவ்வகராதி தோன்றிச் சில ஆண்டுகளுக்குள்ளேயே தமிழ் மக்களிடையே மிக்க செல்வாக்கைப் பெற்றுவிட்டது. தமிழ்ப் புலவர்கள் இல்லங்களிலெல்லாம் அவ்வகராதி ஏட்டு வடிவில் வீற்றிருந்தது. பின்னர் அச்சிடப்பட்டு நூல் வடிவில் தமிழ்ப் புலவர் கரங்களை அலங்கரித்தது. அவ்வகராதி யால் தமிழகத்தில் புதிய ஓர் ஆற்றலே தோன்றி உலவியது என்று கூறலாம். அவ்வகராதியின் பெருமை

யைப் பண்டித முத்துசாமிப்பிள்ளை அவர்கள், "செறிந்த காட்டுக்குச் சமமாயிருந்த திவாகரம் முதலிய நிகண்டு களை இச்சதுரகராதியால் சிறந்த சிங்காரத் தோட்ட மாக்கிய பெருமை வீரமாமுனிவருக்கு உரியது," என்று பாராட்டினர்.

பிற அகராதிகள் :

வீரமாமுனிவர் சதுரகராதியைத் தவிர, **'தமிழ்—இலத்தீன் அகராதி, போர்த்துகீசியம்-தமிழ்-இலத்தீன் அகராதி'** என்னும் வேறு இரண்டு அகராதிகளையும் தொகுத்தார். அவற்றுள் தமிழ்-இலத்தீன் அகராதியில் ஒன்பதாயிரம் தமிழ்ச்சொற்களுக்கு இலத்தீன் மொழியில் பொருள் விளக்கம் செய்துள்ளார்; போர்த்துகீசியம்-தமிழ்-இலத்தீன் அகராதியில் நாலாயிரத்து நானூறு போர்த்துகீசியச் சொற்களுக்குத் தமிழிலும் இலத்தீனி லும்உரை எழுதியுள்ளார். இவ்வகராதிகளின் துணையால் அயல் நாட்டினர் தமிழைக் கற்பதற்கும், தமிழர் பிற மொழிகளைக் கற்பதற்கும் வழி வகுத்துள்ளார் வீரமாமுனிவர்.

# 8. இலக்கண ஆசிரியர்

**தொன்னூல் விளக்கம் :**

நம் தமிழ் மொழி, 'கல் தோன்றி மண் தோன்ருக் காலத்தே முன் தோன்றி மூத்த குடியினர்' பேசி வந்த பழமையும் பெருமையும் மிக்கது; ஈராயிரம் ஆண்டு களுக்கு முன்பே இலக்கிய இலக்கணங்களைப் பெற்றுத் திகழ்ந்தது. தமிழ் மொழியின் இலக்கண நூல்களுள் அழிந்தவை போக, இன்றுள்ள தொன்மையான நூல் தொல்காப்பியமேயாகும். இந்நூலுக்கு விளக்கவுரை செய்வது போன்று பிற்காலப் புலவர்கள் புதிய இலக் கண நூல்கள் பலவற்றை இயற்றினர்கள். அவற்றுள் ஐந்திலக்கணங்களையும் ஒருங்கே கூறும் **இலக்கண விளக் கம், வீரசோழியம்** என்பனவும்; பொருள் இலக்கணத்தை மட்டுமே கூறும் **அகப்பொருள் விளக்கம், புறப்பொருள் வெண்பாமாலை** என்பனவும்; அணி இலக்கணத்தை மட்டுமே கூறும் **மாறனலங்காரம், தண்டியலங்காரம்** என் பனவும்; யாப்பு ஒன்றையே கூறும் **யாப்பருங்கலம், யாப்பருங்கலக்காரிகை** என்பனவும்; எழுத்தையும் சொல்லை யும் விளக்கி உரைக்கும் **நன்னூலும்** குறிப்பிடத்தக்கன.

இவ்விலக்கண நூல்கள் எல்லாம் வீரமாமுனிவர் காலத்திற்கு முற்பட்டவை. புலவர் ஏறென விளங்கிய முனிவர், இவ்விலக்கண நூல்களை எல்லாம் பழுதறக் கற்றுப் பெரும்புலமை பெற்றிருத்தல் வேண்டும். தமிழ் மொழிக்குத் தொண்டு செய்வதையே தம் வாழ்க்கையின் குறிக்கோளாகக் கொண்ட அவர், தமிழ் இலக்கண நூல்களிற் கருத்தைச் செலுத்தினர். தொல்காப்பியம் முதலிய இலக்கண நூல்கள், பெரும்புலமையுடையோரேயன்றி மற்றையோர் கற்றுணரும் பெற்றியன வாய் இல்லை என்பதை அவர் உணர்ந்தார். பல வேறு துறைகளில் தமிழ்த்தொண்டாற்றிய அவருக்கு இலக்கணத்துறையிலும் இணையற்ற தொண்டு ஆற்றுதல் வேண்டும் என்னும் எண்ணம் எழுந்தது. அவ்வெண்ணத்தின் விளைவினல் தோன்றிய நூலே **தொன்னூல் விளக்கம்** என்னும் பொன்னூல். அவர் அந்நூலைக் கற்றுரேயன்றி மற்றேரும் படித்துணருமாறு முன்ேனார் மொழி பொருளையும் சொல்லையும் பயன்படுத்தி எளிய முறையில் இயற்றினர். ஆயினும், புலவரும் புலன் கொள்ளுதற்குரிய அரும்பொருள்கள் பல அந்நூலில் இடம்பெற்றன. அந்நூலை ஓதியுணரும் அறிஞர்கள் வீரமாமுனிவரின் நுண்மாண் நுழைபுலத் திறனை அறிவதோடு முத்தமிழின் நுண்மையையும் உணர்ந்து மூதறிஞராய்த் திகழ்வர் என்பது உறுதி.

இத்தொன்னூல் விளக்கம், பவணந்தி முனிவர் அருளிய நன்னூலைப் போன்று நூற்பாவால் அமைந்தது; **எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி** என்னும் ஐந்திலக்கணங்களையும் அழகுற விளக்குவது; அன்றியும், பிற இலக்கண நூல்களில் இல்லாத **கட்டுரைப்பயிற்சி, பேச்சுக்கலை** என்பவற்றின் இலக்கணங்களையும் பாங்குறப் பகர்வது. தமிழில் **வாக்கலங்காரம்** (Rhetoric) வகுத்துரைத்த முதல் இலக்கண நூல் இந்நூலேயாகும். இந்

நூலைத் தமிழ் உலகிற்கு உதவி, உறுபுகழ் பெற்ற வீரமாமுனிவரின் தமிழ்த் தொண்டினை உளங்கொண்டு தமிழ் நாடு உய்தி பெறும் என்பது உறுதி.

**பிற இலக்கண நூல்கள் :**

வீரமாமுனிவர் இந்நூலையன்றிப் பின்னும் பல இலக்கண நூல்களும் இயற்றினர். அவற்றுள் **கொடுந்தமிழ் இலக்கணம், செந்தமிழ் இலக்கணம், கிளாவிஸ்** (clavis) என்னும் மூன்றும் முக்கியமானவை. வீரமாமுனிவர் உலக வழக்குத் தமிழின் தன்மையை ஆராய்ந்து, **'கொடுந்தமிழ்'** என்னும் பெயரால் இலத்தீன் மொழியில் வெளியிட்ட இலக்கண நூல் தமிழில் பேசவும் எழுதவும் பயில விரும்பும் மேலை நாட்டினர்க்குப் பேருதவி அளிப்பதாகும். இது 1738ஆம் ஆண்டில் அச்சிட்டு வெளியிடப்பட்டது. இதை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து வெளியிட்ட முதற்படியைக்கண்ட போப்பையர் வியந்து போற்றினர்; 'பெரும்புலமையின் முதிர்வால் தோன்றிய நூல் இது,' என்று அவர் மதிப்புரை வழங்கினர். வீரமாமுனிவர் இயற்றிய செந்தமிழ் இலக்கணம், கிளாவிஸ் என்னும் இரண்டு இலக்கண நூல்களும் இலத்தீன் மொழியில் இயற்றப்பட்டனவே. கிளாவிஸ் என்பது தொன்னூல் விளக்கம் போன்ற பெருமையுடையது. வீரமாமுனிவர் அருளிய இந்த நூல்கள் எல்லாம் நம் செந்தமிழ் மொழியின் சிறப்பியல்புகளை உலக மக்களுக்கு எடுத்துரைக்கும் ஒளி விளக்குகளாய்த் திகழ்கின்றன.

**எழுத்துத் திருத்தம் :**

உலகில் வழங்கும் திருத்தம் பெற்ற மொழிகளுள் ஒவ்வொன்றுக்கும் இருவகை எழுத்துகள் உண்டு.

ஒன்று, ஒலி வடிவ எழுத்து; மற்றொன்று, வரி வடிவ எழுத்து. பேசுவது ஒலிவடிவம்; எழுதுவது வரிவடிவம். ஒலி வடிவம் செவிக்குப் புலனுவது; வரிவடிவம் கண்ணுக்குப் புலனுவது. இவ்விரு வகை எழுத்துகளுள் வரி வடிவ எழுத்துகள் காலந்தோறும் பெற்று வந்துள்ள மாற்றங்களை ஆராய்ந்தால், அது நம்மை வியப்பில் ஆழ்த்தும். மொழி வரலாறு எழுதிய அறிஞர் **ஜெஸ்பெர்ஸன்** (Gesperson) என்பவர், வரிவடிவ எழுத்தின் முதல் தோற்றத்தைப் பற்றிக் குறிப்பிடும் போது, "மொழி முதலில் மனிதர்க்கு அமைவதில்லை; மனிதன் முதலில் தான் கண்ட பொருட்குப் பெயர் வைக்க இயலாத விலங்கு நிலையில் இருந்தான்; பின்னர் நாளடைவில் அறிவும் அனுபவமும் கைவரப்பெற்றுத் தனக்கு வேண்டியவற்றைப் பிறரிடம் சொல்லுங்கால், அப்பொருள்களின் உருவத்தினைச் சித்திரித்துக் காட்டினுன்," என்று கூறினுர். எனவே, வரி வடிவ எழுத்து முதலில் சித்திர எழுத்தாய்த் தோன்றியது என்பதை அறிகிறேம். இதை உருவெழுத்தென்பர். இந்தச் சித்திர எழுத்து என்னும் உருவெழுத்து, சிந்து பிரதேசத் திராவிடர்களிடம் காணப்பட்டது என்பதை **ஹீராஸ்** பாதிரியார் விளக்கிக் கூறியுள்ளார். இந்தச் சித்திர எழுத்துகளே காலந்தோறும் பலபல மாற்றங்களைப் பெற்று இன்று வழங்கும் எழுத்துகளின் நிலைக்கு வந்திருக்க வேண்டும் என்பது தெரிகிறது. இன்றும் உலகில் சீனம் போன்ற மொழிகள் இந்தச் சித்திர எழுத்து முறையைக் கொண்டு விளங்குவது குறிப்பிடத்தக்கது. தமிழில் '**கண்ணெழுத்து**' என்னும் ஒரு வகை எழுத்து வழங்கி வந்ததெனச் சிலப்பதிகாரம் கூறுகிறது. கண்ணெழுத்து என்பது "பார்ப்பவர் கண்ணில் தொழில் திறமையைக் காட்டி நிற்கும் எழுத்து," என்று பொருள் படுவதால், இதுவும் சித்திர எழுத்தே என்பது தெரிகிறது. தமிழில் '**எழுதுதல்**' என்பதற்குச் சித்திரித்தல்

என்பதே பொருளாகும். இந்த எழுத்துகள் இன்றுள்ள நிலையை அடைவதற்குள் பெற்று வந்த வேறுபட்ட நிலைகளை வரையறுத்துக் கூறுதல் எளிதன்று.

தமிழ் நாட்டுக் கல் வெட்டுகளில் கிரந்தம், வட்டு, தமிழ் என்னும் மூவகை எழுத்துகள் முக்கியமாகக் காணப்படுகின்றன. தமிழகம் வந்த வடமொழியாளர்கள் கிரந்த எழுத்துகளை எழுதி வந்தார்கள். தமிழ் மக்கள் தமிழ் எழுத்துகளையும் வட்டெழுத்துகளையும் பயன் படுத்தி வந்தார்கள். சோழ நாட்டிலும் தொண்டை நாட்டிலும் கி.பி. 7ஆம் நூற்றாண்டில் பொறிக்கப்பட்ட கல்வெட்டுகளில் தமிழ் எழுத்துகள் காணப்படுகின் றன. வட்டெழுத்துக் கல் வெட்டுகள் பாண்டி நாட்டிலும் மலையாள நாட்டிலும் காணப்படுகின்றன. கோலார், சேலம், வடவார்க்காடு ஆகிய மாவட்டங்களில் தமிழ் வட்டெழுத்து ஆகிய இரு வகை எழுத்துகளிலும் கல் வெட்டுகள் காணப்படுகின்றன. பிராமி எழுத்துகள் கூடத் தமிழிலிருந்து தோன்றியே வடமொழிக்குப் பயன் பட்டன என்பர். இவ்வட்டெழுத்துகள் பின்னாளில் தமிழ் எழுத்துகள் பெற்ற செல்வாக்கினால் மறைந்து விட்டன என்பது தெரிகிறது.

தமிழ் எழுத்துகள் அடைந்து வந்த மாற்றங்களை எல்லாம் விளக்கமாக ஆராய்வது அரிதாகும். ஆயினும், சில மாற்றங்களை இங்குக் காண்போம்: இப்பொழுது '**லை**' என்று எழுதும் எழுத்துப் பண்டை நாளில் '**லை**' என்று எழுதப்பட்டு வந்தது என்பது கல்வெட்டு களால் தெரியவருகிறது. கி.பி. ஒன்பதாம் நூற்றாண் டுக்கு முற்பட்ட கல்வெட்டுகளில் 'லை' என்றே காணப் படுகிறது. அது பின்னர் ஒன்றாக இணைக்கப்பட்டுப் பல திருத்தங்களைப் பெற்றே இன்றுள்ள வடிவில் வழங்கப் படலாயிற்று. இதன் முதல் நிலையே பொருத்தமான

தென்பதும், ஏடெழுதுவோர் எழுத்தாணியால் விரைவாக எழுதிவந்தமையால் இரண்டும் ஒன்ருக இணைக்கப்பட்டு இன்றுள்ள நிலையை அடைந்தன என்பதும் அறிஞர் கருத்தாகும். இவ்வாறு தமிழ் எழுத்துகள் அடைந்துள்ள மாற்றங்களை ஊன்றி உணர்ந்தால், எப்பொழுது வேண்டுமாளுலும் தேவைக்கு ஏற்பச் சில எழுத்துகளைத் திருத்தி அமைப்பதில் எவ்விதத் தவறுமில்லை என்பதைத் தெரிந்துகொள்ளலாம்.

தமிழ் இலக்கணக் கடலுள் மூழ்கி எழுந்த வீரமாமுனிவர், தமிழ் எழுத்துகள் காலந்தோறும் அடைந்து வந்துள்ள மாற்றங்களை ஊன்றிக் கவனிக்கலாஞர். தொல்காப்பியர் காலத்தில் 'ம' என்னும் எழுத்து இந்த வடிவில் எழுதப்படவில்லை. பகரத்தின் உள்ளே ஒரு புள்ளி இட்டு, மகரத்தைக் குறித்து வந்தார்கள். இதைத் தொல்காப்பியர், 'உட்பெறு புள்ளி உருவா கும்மே,' என்று கூறியுள்ளமையால உணரலாம். எனவே, தொல்காப்பியர் காலத்தில் 'ப்' என்பதே, மகரமாய் வழங்கி வந்தது என்பதை அறிகின்ருேமல்லவா? இந்த மகரத்தை எழுதும்போது ஏடெழுதுவோர், புள்ளியைத் தெளிவாக இடாவிட்டால், அது பகரமாய்த் தோன்றிப் படிப்பாரை மயங்கச் செய்யுமன்ருே? இதனுலேயே, 'எழுதினவன் ஏட்டைக் கெடுத்தான்; படித்தவன் பாட்டைக் கெடுத்தான்,' என்னும் பழமொழி எழுந்தது என்பர். எனவே, பகரத்தில் உட்புள்ளியிட்டு மகரத்தை எழுதி வந்த முறையை மாற்றி 'ம' என்று உள்ளே சுழித்து எழுதலாஞர்கள். இத்திருத்தம் நச்சிஞர்க்கினியர் காலத்திற்கு முன்பே—அஃதாவது 12ஆம் நூற்ருண்டுக்கு முன்பே—ஏற்பட்டுவிட்டது. இன்னம் தொல்காப்பியர் காலத்தில் குற்றியலுகரமும் குற்றியலிகரமும் மேற்புள்ளியிட்டு எழுதப்பட்டு வந்தன. இதனைத் தொல்காப்பியர்,

"அவைதாம்,
குற்றிய லிகரம் குற்றிய லுகரம்
ஆய்த மென்னும் முப்பாற் புள்ளி."

என்று கூறுவதால் உணரலாம். இவ்வழக்கம் நன்னூலார் காலத்தில் மறைந்துவிட்டது என்பது தெரிகிறது.

தொல்காப்பியம் நன்னூல் போன்ற இலக்கண நூல்களை எல்லாம் ஊன்றிப் படித்த வீரமாமுனிவர், பகுத்தறிவிற்குப் பொருத்தமான வகையில் செய்யும் எந்தத் திருத்தத்தையும் தமிழ் மக்கள் ஏற்றுக்கொள்வார்கள் என்பதை உய்த்துணர்ந்தார். அவர் காலத்திலும் சில தமிழ் எழுத்துகளின் வரி வடிவம் பொருத்தமின்றிக் காணப்பட்டது. ரகரமெய் 'ர' எனப் பாதம் வைத்து எழுதப்படவில்லை. எனவே, 'பாவை' என்று எழுதினால், 'இது பரவையா, பாவையா!' என்று ஐயுறும் நிலைமை இருந்து வந்தது. இதனால் இடருற்றார் பலர். தமிழ் நாட்டில் புகழ் மிக்க வரலாற்றுப் பேராசிரியர் ஒருவர் கருடன் எனப் பொருள்படும் 'பறவைக்கரசு' என்பதைப் 'பறவைக்காசு' எனப் பிழைபட உணர்ந்து அதற்கு, 'இது முற்காலத்தில் வழங்கிய ஒரு வகை நாணயம்' என்று குறிப்பெழுதினார் என்பர் கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை அவர்கள். இஃது எழுத்து முறையால் நேர்ந்த குறை என்பதை அறிகிறோமல்லவா? வீரமாமுனிவர் காலத்தில் எகர ஒகரக் குற்றெழுத்துகளையும் ஏகார ஓகார நெட்டெழுத்துகளையும் வேற்றுமை இன்றி எழுதிவந்தார்கள். ஒகரம் என்பது நெடிலாகவும் அதன்மேல் ஒரு புள்ளி வைத்து 'ஒ̇' என்று எழுதினால் குறிலாகவும் உச்சரிக்கப்பட்டது. இவ்வாறே 'எ' என்பது நெடிலாகவும், அதன்மேல் ஒரு புள்ளி வைத்து 'எ̇' என்று எழுதினால் குறிலாகவும் கொள்ளப்பட்டது. இவ்வாறு எ, ஒ என்னும் எழுத்துகளின்மேல்

புள்ளி வைத்து எழுதுவது தொல்காப்பியர் காலங் தொட்டு வழங்கி வந்தது. இது பற்றியே தொல் காப்பியனுரும்,

**"மெய்யின் இயற்கை புள்ளியொடு நிலையல்;**
**எகர ஒகரத் தியற்கையும் அற்றே."**

என்று நூற்பா யாத்தார். அவர் வழி வந்த இலக்கண ஆசிரியர்கள் உயிர்மெய்க்கும் இதனையே விதியாகக் கொண்டு, **'கெ'** என்பதைக் குறிலாகவும், **'கெ'** என்பதை நெடிலாகவும் உச்சரித்தனர். இவ்வாறே **'கொ'** என்பது குறிலாகவும், **'கொ,'** என்பது நெடிலாகவும் கொள்ளப்பட்டன. ஏடு எழுதுவோர் புள்ளியிட்டால் ஏடு துளைபடும் என்று கருதியோ, மறதியாலோ புள்ளி யிடத் தவறிவிட்டால், அவற்றைப் படிப்பார் குறில் நெடில் வேற்றுமை தெரியாது தடுமாற்றங்கொள்வர். வீரமாமுனிவருக்கும் இத்தகைய தடுமாற்றம் நேர்ந் திருத்தல் கூடுமல்லவா? இங்கிலையிலேதான் அவர் தமிழி லுள்ள வரி வடிவ எழுத்துகளில் சில திருத்தங்களைக் கொண்டுவர முற்பட்டார். தமிழ் மக்களது முற்போக் கான பரந்த நோக்கத்தை அவர் முன்னரே அறிந்திருந் தார் என்றேமல்லவா? ஆகையால், அவர் தம் திருத்தத் தைத் தமிழ் மக்கள் விரும்பி ஏற்பார்கள் என்னும் துணிவோடு, எகர ஒகரங்களில் புள்ளி வைத்து எழுதும் பழைய முறையை மாற்றிப் புதியதொரு முறையைப் புகுத்தினர். அதற்கென்று அவர் தொன்னூல் விளக்கத்தில்,

**"நீட்டல் சுழித்தல் குறில்மெய்க் கிருபுள்ளி"**

என்று நூற்பாவையும் செய்து வைத்தார். அவர் கருத் துப்படி ரகர உயிர் மெய்க்குறிலை 'ா' என்று நீண்ட புள்ளி இட்டு எழுதுதல் வேண்டும். அவ்வாறு ரகரத்தின் மேல் இட்ட வரையே (—) இன்று ரகரத்தின் பாதமாய் அமைந் தது. இன்றுள்ள ஏகார ஓகாரங்களும் அவரது திருத்தத்

தால் ஏற்பட்டனவே. இன்னும் குறிலுக்கும் நெடிலுக்கும் ஒரே மாதிரியாக எழுதப்பட்டு வந்த கொம்பு என்னும் ‘ெ’—இந்தச் சுழியை ‘ே’—என்று இவ்வாறு மேலே சுழித்து நெட்டெழுத்தைக் குறிப்பிட வழி காட்டியவரும் வீரமாமுனிவரே. இவ்வாறு அவர் செய்த எழுத்துத் திருத்தங்கள் இன்னும் பலவாகும். தொல்காப்பியனுர் வகுத்த விதியை மாற்றி முனிவர் செய்த எழுத்துத் திருத்தங்களைத் தமிழ் மக்கள் மனமார ஏற்று மகிழ்ந் தார்கள் என்ருல், தமிழகத்தில் வீரமாமுனிவர் பெற் றிருந்த மதிப்பிற்கு வேறு சான்றும் வேண்டுமோ ?

# 9. இனிய நிகழ்ச்சிகளும் இறுதி நாள்களும்

## பிற சமய அறிவு :

தமிழ்ப்புலமை சாலவும் எய்திய வீரமாமுனிவர் தமிழகத்தில் வழங்கிய பிற சமய நூல்களையும் நன்கு கற்றறிந்தார். வைதிக சமய ஐதிகங்களுள்ளும், புராண வரலாறுகளுள்ளும் அவர் அறியாதன இல்லை என்றே சொல்லலாம். இதற்கு அவர் வாழ்க்கையில் நடந்த சில இனிய நிகழ்ச்சிகள் சான்றாகின்றன.

## தனிப்பாடல் :

வைத்தீசுவரன் கோயில் என வழங்கும் புள்ளிருக்கும் வேளூர், காவிரியின் வடகரையில் அமைந்துள்ளது. அவ்வூர், பாடல் பெற்ற பழம்பதி. அங்குக் கோயில் கொண்டுள்ள இறைவன் திருநாமம் வைத்தியநாதன் என்பது. அவ்விறைவனை நோய் தீர்க்கும் வைத்தியனாகவே மக்கள் வழிபட்டு வந்தார்கள். திருவிழாக் காலங்களில் எண்ணிறந்த நோயாளிகள் அங்கு வந்து,

அவ்விறைவனை வழிபடுவார்கள். இவ்வாறு வழிபட்டால் தீராத நோயும் தீர்ந்துவிடும் என்பது அவர்கள் நம்பிக்கை. அவ்விறைவன் வீற்றிருக்கும் திருக்கோவில் **வினை தீர்த்தான் கோவில்** என்று வழங்கப்பட்டது. இத்தகைய பெருமைமிக்க புள்ளிருக்கும் வேளூர் வழியாக ஒரு சமயம் வீரமாமுனிவர் செல்ல நேர்ந்தது. அவ்வூர் அன்பர் பலர் அவரை வழியிடைக் கண்டு அளவளாவினர். முனிவர் அவர்களிடம் அவ்வூரைப் பற்றியும், அங்குக் கோயில் கொண்டுள்ள இறைவனைப்பற்றியும் வினவினர். அவர்கள் வைத்தீசுவரன் மாண்பினையும், அவன் நோய் தீர்க்கும் வகையினையும் பெருமையாகப் பேசினர்கள். அவர்கள் பேச்சைக் கேட்ட முனிவர், " தன் நோயையும், மைத்துனன் நோயையும், புத்திரன் நோயையும் தீர்க்கும் மருந்தறியா உங்கள் இறைவனு, பிறர்க்கு நோயைத் தீர்க்கப் போகின்ருன் ?" என்னுங் கருத்தமைய,

**"வாதக்கா லாந்தனக்கு; மைத்துனற்கு நீரிழிவாம்;**
**போதப் பெருவயிரும் புத்திரற்கு;—மாதவரையில்**
**வந்தவினை தீர்க்க மருந்தறியான் வேளூரான்;**
**எந்தவினை தீர்த்தான் இவன்?"**

என்னும் தனிப்பாடலை அருளினர். இப்பாடலைக் கேட்ட அவ்வூர் அன்பர்கள் வீரமாமுனிவர் வைதிக சமய வரலாற்றை உள்ளவாறு உணர்ந்து கவி புனைந்தமையைக் கண்டு வியந்து நின்றுர்கள்.

**பாடற்பொருள் :**

சிவபெருமான் திருநடனம் புரியும்போது ஒரு காலை ஊன்றியும், ஒரு காலைத் தூக்கியும் நிற்கும் நிலையை 'வாதக்காலாம் தனக்கு' என்று முனிவர் நயமுற

நவின்றார். சிவபெருமானுக்கு மைத்துனர் உலகளந்த நெடுமால். அவர் திருவடியைப் பிரமதேவன் கழுவிய கமண்டல நீரே கங்கையாய்ப் பெருக்கெடுத்தது என்பது புராண வரலாறு. இதனை உட்கொண்டே வீரமாமுனிவர், 'மைத்துனற்கு நீரிழிவாம்' என்று அழகுற அமைத்தார். சிவபெருமானின் திருக்குமரரான கணபதி பேரறிஞர். அவர் அறிவு வயிற்றிலும் நிறைந்திருப்பதால் பெருவயிறு பெற்றுள்ளார் என்பர். இதனையே 'போதப் பெருவயிரும் புத்திரற்கு' என்றார் முனிவர்.

இவ்வாறு வைதிக சமய ஐதிகங்கள் அமையுமாறு முனிவர் அருளிய பாடலைக் கேட்டு அவ்வூர் அன்பர்கள் வியந்து நின்றதில் வியப்பில்லையன்றோ ? அம்மட்டோ ? அவர்கள் 'இஃது இசைக்கவியா, வசைக்கவியா' என்று அறியாது மயங்கினார்கள் ; இது "காளமேகப் புலவர் போன்ற பத்தர்கள் இறைவன்மீது புகழாப் புகழ்ச்சியாகப் பாடியுள்ள பாடல்களை நிகர்த்து இருக்கின்றதன்றோ !" என்று மகிழ்ந்தார்கள்.

**காளமேகப்புலவர் பாடல் :**

காளமேகப்புலவர் முருகப்பெருமானைப் பற்றிப் புகழாப்புகழ்ச்சியாக,

> **"அப்பன் இரந்துண்ணி; ஆத்தாள் மலைநீலி;**
> **ஒப்பரிய மாமன் உறிதிருடி;—சப்பைக்கால்**
> **அண்ணன் பெருவயிற்றன்; ஆறு முகத்தானுக்கு**
> **எண்ணும் பெருமை இவை!"**

என்று பாடிய பாடலை, வீரமாமுனிவர் அருளிய பாடல் ஒத்திருக்கின்றதன்றோ ?

## வாது புரியும் வன்மை :

வீரமாமுனிவர் பிற சமய உண்மைகளை நன்குணர்ந் திருந்தமையால், அவ்வப்போது பிற சமயத்தினரோடு வாது புரிந்து வெற்றி பெற முடிந்தது. அவர் வாழ்க் கையில் வாது புரியும் வாய்ப்பு அடிக்கடி நேர்ந்ததுண்டு. அவர் துறைமங்கலம் சிவப்பிரகாச அடிகளாரோடு வாது புரிந்தாரெனக் கூறுவர். சிவப்பிரகாச அடிகளார் சிறந்த தமிழ் அறிஞர்; அரிய நூல்கள் பல இயற்றிய பெரும்புலவர். வீரமாமுனிவரும் அவருக்கு நிகரான பெரும் புலவரே. இவர்களிடையே நிகழ்ந்த வாதத்தில் ‘தோற்றவர் யார், வென்றவர் யார் ?'' என்பதற்கே இட மில்லை. பேரறிஞர் இருவர் தத்தம் சமய உண்மைகளைச் சரிநிகர் சமமாகப் பரிமாறிக்கொண்டனர் என்று கூறு வதே சாலும். வீரமாமுனிவர் சிவப்பிரகாசரைப் போன்ற பேரறிஞர்களின் எதிர் நின்று வாது புரியும் வன்மை பெற்றிருந்தார் என்பதில் எட்டுணையும் ஐய மில்லை.

## வெற்றி :

வீரமாமுனிவர் திருக்காவலூரில் இருந்து சமயப் பணியைத் திறம்பட ஆற்றி வந்த போது அவர் புகழ் நாற்றிசையும் பரவியது. அயல் நாட்டார் ஒருவர் பேரும் புகழும் பெற்று இயேசு நெறியைப் பரப்பி வருவதைக் கேட்டுப் பொறாமை கொண்டனர் பலர். அவர்களுள் செஞ்சடைப் பண்டாரங்கள் ஒன்பதின்மர் ஒருங்கே கூடினர். அவர்கள் திருக்காவலூரரை அடைந்து முனி வரோடு சமயவாதம் செய்யத் தீர்மானித்தார்கள்; குறித்த நாளில் திருக்காவலூரரை அடைந்தார்கள். வீரமாமுனிவர் அவர்கள் வருகையை அறிந்தார்; நோக் கத்தையும் தெரிந்தார்; அவர்களோடு சொற்போர் நிகழ்த்தவும் இசைந்தார். இரு திறத்தாரும், ‘தோற்ற

வர், வென்றவர் சொற்படி நடக்க வேண்டும்,' என்று ஒப்பந்தம் செய்துகொண்டு சொற்போரில் ஈடுபட்டனர். சொற்போர் பல நாள்கள் தொடர்ந்து நடந்தது. இறுதியில் வீரமாமுனிவர் வென்ருர். செஞ்சடைப்பண்டாரங்கள் தோற்ருர்கள். அவர்கள் தங்கள் தோல்வியை ஒப்புக்கொண்டார்கள். அதற்கு அறிகுறியாக அவர்களுள் அறுவர் கிறித்தவ மதத்தைத் தழுவினர்; மற்றவர் மூவரும் முனிவர் விரும்பியவாறு தம் சடையை அறுத்தெறிந்துவிட்டுச் சென்றனர். தைரியநாதர் சமயச் சொற்போரில் பெற்ற அவ்வெற்றியை அனைவரும் போற்றினர். அவர் புகழ் எங்கும் பரந்தது.

## இருவர் அவா :

வீரமாமுனிவர் காலத்தில் அந்தோனிக்குட்டி அண்ணுவியார் என்னும் கிறித்தவ புலவர் ஒருவர் இருந்தார். அவர் கிறித்துநாதர்மீது பல பாடல்களைப் பாடிப் புகழ் பெற்றிருந்தார். அவருக்கு வீரமாமுனிவரைக் கண்டு அளவளாவ வேண்டும் என்னும் அவா நெடுங்காலமாய் இருந்து வந்தது. முனிவரும் அண்ணுவியாரைப் பற்றி அறிந்திருந்தார். அவரைக் கண்டு அளவளாவ வேண்டும் என்னும் அவா முனிவருக்கும் இருந்து வந்தது. ஆயினும், இருவர் அவாவும் நிறைவேறுவதற்கான வாய்ப்பு நெடுங்காலம் நேரவில்லை.

## கூடுகை :

வீரமாமுனிவர் 1741—1743ஆம் ஆண்டுகளில் தூத்துக்குடி, மணப்பாடு முதலிய இடங்களில் பணியாற்றி வந்தார். அக்காலத்தில் ஒரு நாள் முனிவர் மணப்பாட்டிற்குச் சென்றிருந்தார். தூத்துக்குடி வந்திருந்த அண்ணுவியாருக்கு அச்செய்தி எட்டிற்று.

அவர் உடனே விரைந்து சென்று முனிவரைக் கண்டு மகிழ்ந்தார். முனிவரும் அவரை அன்புடன் வரவேற்று இன்புற்றார்.

**உள்ளம் கலந்து உரையாடல்:**

அண்ணாவியார் பாடிய பாடல்களைக் கேட்டு மகிழ விரும்பினார் வீரமாமுனிவர். அவர் விரும்பியவாறு அண்ணாவியார் தாம் பாடிய **'பேரின்பக் காதல்'** என்னும் நூலிலிருந்து சில பாடல்களைப் பாடிக் காட்டினார்.

**''கற்றோரை அவமதிக்கும் மேலோர் தம்மைக்**
**கண்குறையக் கண்டுவிடும் கைக்கோர் காசும்**
**அற்றோரைத் தனக்கடிமை ஆக்கப் பார்க்கும்**
**ஆய்ந்தோரைப் புன்கோட்டி அடியா நிற்கும்**
**பெற்றோரை இரக்கவிடும் பெண்சொல் கேட்கும்**
**பிறரோடு தனைவியந்து பேசும் தன்பால்**
**உற்றோரை முகம்பாரா தொழியும் பொல்லா**
**ஊமையெனும் பேராசை ஒன்று தானே''**

என்னும் பாடலைப் போன்ற பல பாடல்களை வீரமாமுனிவரும் பாடி மகிழ்ந்தார். அப்பாடல்கள் கற்றோர்க்கும் மற்றோர்க்கும் இன்பம் பயப்பனவாய் இருத்தலைக் கண்ட முனிவர் அண்ணாவியாரை மெச்சிப் புகழ்ந்தார்.

அண்ணாவியார் முனிவர் நூல்களைப் பார்வையிட விரும்பினர். முனிவர் தமது தேம்பாவணியை அவரிடம் கொடுத்தார். அண்ணாவியார் அந்நூலின் சொற்சுவை பொருட்சுவை நுகர்ந்து இன்புற்றார்; முனிவரைப் பாராட்டினார்.

முனிவர், "உமது பாடல் செப்புக்காசு; எமது பாடல் தங்கக்காசு," என்று இளநகை ததும்பக் கூறினர். அண்ணாவியார், "உண்மைதான்," என்றார். முனிவர், "எப்படி?" என்றார். அண்ணாவியார், "செப்புக்காசைச் சிறியவர்களும் பெரியவர்களும் கையாளலாம்; தங்கக்காசைப் பெரியவர்கள் மட்டுமே கையாள இயலும். அதுபோல என் பாடல்களைச் சிறுவர்களும் பெரியவர்களும் படித்து மகிழலாம்; உங்கள் பாடல்களைப் பெரியவர்கள் மட்டுமே பொருள் உணர்ந்து மகிழ இயலும்," என்று அமைவுறக் கூறினர்.

இவ்வாறு முனிவரும் அண்ணாவியாரும்,

**"உவப்பத் தலைக்கூடி உள்ளப் பிரிதல்**
**அனைத்தே புலவர் தொழில்."**

என்றவாறு உள்ளம் கலந்து உரையாடினர்; பின்னர், 'இனி என்று காண்போம்!' என்ற எண்ணத்தோடு பிரிந்தனர். இதுவன்றோ தமிழ்க்கல்வி பயின்றோர் தன்மை!

## தூத்துக்குடிச் செலவு:

வீரமாமுனிவர் சந்தா சாகிபுவின் ஆட்சி நடைபெற்று வந்த காலம் வரையில் திருச்சிராப்பள்ளி, குணம்பாடி என்னும் இடங்களில் சீரும் சிறப்பும் பெற்று மிக்க செல்வாக்குடன் சமயப்பணி ஆற்றி வந்தார். அக்காலத்தில் தஞ்சை, மதுரை முதலிய இடங்களிலும் செயற்கருஞ்சேவை செய்த சிறப்பால் அவர் பேரும் புகழும் பெற்றிருந்தார். இவ்வாறு முப்பது ஆண்டுகளுக்கு மேலாக அல்லும் பகலும் அயராது உழைத்து வந்த தன்மையில், அவரை மூப்பு விரைந்து வந்தடைந்தது. ஆகையால், அவர் அமைதியான இடத்தை அடைந்து இளைப்பாற விரும்பினர். அக்காலத்தில், மராட்டியரிடம் சிறைப்பட்டிருந்த அவர் அன்பனான **சந்தா சாகிபு**

ஆவி நீத்தான். சந்தா சாகிபுவின் பிரிவை அறிந்த முனிவர் புண்ணுற்ற மனத்தினராய்க் கண்ணீர் உகுத்தார். அவனுக்குப்பின் நாட்டில் கலகங்களும் குழப்பங்களும் பெருகின. இங்கிலையில், முனிவர் தாம் விரும்பியவாறு இளைப்பாறக் கருதி, 1742ஆம் ஆண்டு தூத்துக்குடிக்கு மாற்றம் பெற்றுச் சென்றூர்; மணப்பாறை என்னும் இடம் சென்றதாகக் கூறுவாருமுளர். தூத்துக்குடியிலும் முனிவர் இளைப்பாறியதாகத் தெரியவில்லை. அங்கு இருந்தே அவர் இடையருது முயன்று தமிழ்—இலத்தீன் அகராதியை முற்றுவித்தார் என்பது தெரிகிறது. மேலும், அவர் தம் சமயக் கடமைகளிலும் தவறியதில்லை; மணப்பாடு, வேம்பாறு என்னும் இடங்களுக்கு அடிக்கடி சென்று ஆற்றிவந்த அரும்பணியால், அங்கு இயேசு நெறி, புகழ் வீசியது.

**புதுப்பணி :**

இவ்வாறு பல்லாண்டுகளாக இயேசு நெறியைப் பரப்பும் திருப்பணியில் ஈடுபட்டு உழைத்துவந்த வீரமாமுனிவர், சேரநாட்டைச் சேர்ந்த **அம்பலக்காடு** என்னுமிடத்தில் நிறுவப்பட்டிருந்த இயேசு சமயக் கல்லூரியில் கட்டளைக் குருவாக 1746இல் நியமிக்கப்பட்டார். மதிநலமும் நூலறிவும் ஒருங்கே வாய்ந்த அவர், அப்புதிய பணியை ஆர்வத்தோடு ஏற்று மகிழ்ந்தார். அப்போது அவருக்கு வயது அறுபத்தாறு. அவர் பழுத்த முதுமையால் உடல் தளர்ந்தார். என்றாலும், அவர் கடமையில் தவருது உறுதியுடனும் ஊக்கத்துடனும் உழைத்து வந்தார்; அங்குப் பயிற்சி பெற்று வந்த சமய குருக்களுக்கும் போதகர்களுக்கும் வேத நூலின் விழுமிய உண்மைகளை அவர்கள் உள்ளங்கொள்ளுமாறு எடுத்துரைத்தார். இப்புதிய பணியை அவர் ஓராண்டளவு ஏற்றி நடத்தினர் என்பது தெரிகிறது. ஐரோப்பியச் செம்மொழிகளோடு செந்தமிழ் மொழியையும் செம்மை

யாகப் பயின்று சிறந்த புலமை பெற்றிருந்த வீரமா முனிவர், அப்புதிய பணியைத் திறம்பட நடத்திச் சமயத் தொண்டர்களின் பாராட்டுதலைப் பெற்ருர்.

**விளக்கு அணைந்தது:**

சமயப்பற்றும் தமிழ்ப்பற்றும் ஒருங்கே கொண்ட வீரமாமுனிவர், இயேசு நாதர் பெருமையை இடையருது எடுத்துரைத்தும், தண்டமிழ் வளர்ச்சிக்குத் தனிப் பெருந்தொண்டாற்றியும், செய்ற்கருஞ்செயல்களைச் செய்து வாழ்வாங்கு வாழ்ந்து வந்தார். அவரது வாழ்க்கை, வாழும் மனிதர்களுக்கு ஓர் எடுத்துக் காட்டாய்க் குன்றின்மேலிட்ட விளக்கினைப் போல ஒளி விட்டது. அவர் மனம், மொழி, மெய் என்னும் மூன்றையும் தமிழகத்திற்கே உரிமை செய்து கடும்பணி புரிந்து தளர்வுற்று, முதுமை என்னும் துன்பத்திற் குள்ளானர். இந்த முதுமைத் தளர்ச்சியாலோ, நோய்வாய்ப்பட்டோ, வேறு காரணத்தாலோ—உறுதி யாக ஒன்றும் தெரியவில்லை—மணப்பாறையை அடுத்த ஆவூரிலோ, திருநெல்வேலியைச் சேர்ந்த மணப்பாட் டிலோ—அதுவும் தெரியவில்லை—தம் அறுபத்தேழாம் வயதில், 1747 ஆம் ஆண்டு, பெப்ருவரித் திங்கள், நாலாம் நாள் அவர் பேச்சு ஒடுங்கியது; மூச்சு அடங்கியது; உயிர்ப்பறவை பறந்து மறைந்தது. சமயப்பணிக்காக—அல்லலுற்ருேர்க்கு ஆதாவு கொடுப்பதற்காக—ஓடி ஓடி அலைந்த அவர் கால்கள் ஓய்ந்துவிட்டன; தேம்பாவணி யைப் படைத்த அன்புத் திருக்காங்கள் சோர்ந்து விட்டன; ஏழைகளையும் வாய் குளிர அழைத்து இன்னுரையாடிய வாய் மூடிவிட்டது; மலர்க்கண்கள் குவிந்துவிட்டன. தமிழகத்தில் முப்பத்தேழு ஆண்டுகள் பேரொளி வீசி வந்த அந்தக் கலை விளக்கு அணைந்து விட்டது. சமயத் தொண்டர்களும் தமிழ் அன்பர்களும்

கதறிக்கதறி அழுதார்கள். உள்ளத்தால் பொய்யா தொழுகிய உத்தமத் துறவியார் வீரமாமுனிவர்—அருண்மிகு பெஸ்கி அடிகளார்—உலக மக்களின்—சிறப்பாகத் தமிழ் மக்களின் உள்ளக் கோவிலில் இடம் கொண்ட அமரரானார்.

**சிறப்பியல்புகளுட்சில :**

வீரமாமுனிவர் தமக்கென வாழாது தம் வாழ்க்கையைத் தமிழகத்திற்கே அர்ப்பணம் செய்தவர் என்றாலும்,

**"பெற்ற தாயும் பிறந்தபொன் னாடும்**
**நற்றவ வானினும் நனிசிறந் தனவே"**

என்றவாறு தம்மை ஈன்ற இணையிலா இத்தாலி நாட்டை என்றும் மறவாதவர் ; மாசற்ற இயேசு நாதர் காட்டிய நெறியைத் தமிழகம் எங்கும் பரப்பி வெற்றி கண்டவர் ; பல வேறு துறைகளில் நூல்கள் இயற்றித் தமிழ் மொழிக்குச் செயற்கரும்பணி செய்து சிறப்புற்றவர் ; எடுத்த செயலை அடுத்து முடிக்கும் ஆற்றல் படைத்தவர் ; வாது புரியும் வல்லமை வாய்ந்தவர் ; தமிழகத்திலுள்ள பலவேறு சமயங்களைப்பற்றிய அறிவும் வாய்க்கப்பெற்றவர். தாம் தமிழகத்தில் பணி புரிந்த காலமெல்லாம், 'மன்னுயிர்க்காகத் தம்முயிரை வழங்கிய தயாபரருக்கு வாய்த்த பேறு நமக்கும் வாய்க்காதா !' என்று எதிர்நோக்கி நின்றவர்.

**முடிவுரை :**

இறவாத புகழுடைய புது நூல்கள் பல இயற்றித் தமிழ்த்தாய்க்கு ஏற்றம் தேடித்தந்த வீரமாமுனிவர், தமிழ் இலக்கிய வரலாற்றில் ஒரு முக்கிய இடத்தைப் பெற்றுவிட்டார். அவர் இயற்றிய நூல்கள் இருபத்தொன்பது என்பர். அவற்றுள் கிட்டாதன போக, கிட்டியன யாவும் என்றும் அழியாத் தன்மை பெற்று

விட்டன. அவற்றுள் ஒவ்வொன்றும் அவரது பெருமையையும் புகழையும் எந்நாளும் எடுத்துப் புகன்று கொண்டேயிருக்கும். அவற்றிலுள்ள கருத்துகளும், இயற்கை வருணனைகளும் நம் நாட்டின் அழகையும் மேன்மையையும் பரப்பிக்கொண்டேயிருக்கும். நம் நாட்டில் தோன்றிய வள்ளுவர், இளங்கோவடிகள், கம்பர் ஆகிய பெரும்புலவர்களைப் போன்று தமிழுக்குப் புதிய ஒளியையும் சத்தியையும் தேடித்தந்த வீரமாமுனிவரது வாழ்க்கை வழியைப் பின் பற்றித் தமிழ் மாணவர்கள் வீறு பெற்று விளங்குவார்களாக! தம் தாய் நாடு துறந்து தமிழ் நாடுபோந்து, "யாதும் ஊரே; யாவரும் கேளிர்," என்னும் சங்கப் புலவரின் மொழிக்கு ஏற்பத் தமிழகத்தையே தம் தாயகமாகக் கொண்டு தமிழர் நலத்திற்கே தம்மை அர்ப்பணித்த வீரமாமுனிவரை, நன்றி மறவா நல்லுள்ளம் படைத்த தமிழ் மக்கள்—முத்தமிழில் முன்னேற்றம் காணத் துடித்து நிற்கும் தமிழ் மக்கள்—என்றும் மறவாது போற்றுவார்கள் என்பது உறுதி. இன்று நாம் அவரை உள்ளத்தில் வைத்துப் போற்றுகிறோம்; ஓவியத்தில் எழுதி மகிழ்கிறோம்; சிலை நாட்டி வழிபட்டு வருகிறோம். இரண்டாவது உலகத் தமிழ் மாநாட்டின் போது, தமிழ் வளர்த்த வீரமாமுனிவருக்குச் சிலை எடுத்த வரலாற்றை அறியாதார் யார்? வீரமாமுனிவர் இன்று சென்னைக் கடற்கரையில் சிலை வடிவில் கம்பீரமாய் நின்று காட்சியளிக்கிறார்; என்றும் காட்சியளிப்பார்!

இன்பத் தமிழ் நாடும் இனிய தமிழ் மொழியும் வாழ்க!

வையகம் எல்லாம் வாழ்க!

வீரமாமுனிவர் வெற்றிப்புகழ் ஓங்குக!

---

